# திருக்குறளில் நகைச்சுவை



திருக்குறளார்

வெளியீடு 3
திருக்குறளில் நகைச்சுவை
முதற் பதிப்பு செப்டம்பர் 1966
இரண்டாம் பதிப்பு—டிசம்பர் 1987


விலை ரூ. 10

திருக்குறளார் பதிப்பகம்
சென்னை-600035.

அச்சிட்டோர் :
அகஸ்தியர் அச்சகம்
97, பஜனை கோயில் தெரு,
சூளைமேடு, சென்னை-600 094.

திருக்குறளார் வீ. முனிசாமி,
ஆசிரியர்.

டி. 4, டர்ன்புல்ஸ் சாலை,
நந்தனம்,
சென்னை-600 035.

# வள்ளுவர் வழியே வாழ்க்கையின் தொண்டு

## தெள்ளு தமிழ்த்தொண்டும் அதுவே ஆகும்.

தமிழ் மண்ணில் பிறந்து, தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டு வாழ்கின்ற வாழ்க்கையே மனித வாழ்க்கையின் தனிச் சிறப்பு என்று கருதுவதுதான் தமிழனுக்கு இருக்கவேண்டிய உயர்ந்த பண்பாகும். என்னுடைய இளமை காலம் முதற்கொண்டே உலகப் பொதுமறையாகிய 'திருக்குறள்' நூலினை நன்றாகக் கற்க வேண்டும் என்றும், திருவள்ளுவர் கருத்தினை நாடறியச் செய்யவேண்டும் என்றும் ஆர்வத்துடன் இருந்தேன் என்பதினைப் பெருமையுடன் சொல்லிக்கொள்கின்றேன். என்னுடைய உயர்நிலைப் பள்ளிப் படிப்பினையும் கல்லூரிப் படிப்பினையும் திருச்சியில் முடித்தேன்.

1935ம் ஆண்டிலேயே நல்லமுறையில் குறட்பாக்கள் அனைத்தையும் மனப் பாடம் செய்து நல்ல தமிழ்ப் புலவர்களிடம் உரை பயின்று மகிழ்ந்தேன். பிறகுதான் சட்டக்கல்லூரி படிப்பிற்குச் சென்னைக்கு வந்தேன். நகைச்சுவையுடனும், எளிமை நயத்துடனும் பேசுகின்ற பழக்கத்தினை அந்தக் காலத்திலேயே வளர்த்துக் கொண்டேன்.

திருக்குறள் மக்களிடையே நன்கு பரவுவதற்குச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவது மட்டும் போதாது என்று கருதி மிகமிக குறைந்த விலையில் 40 நூல்களுக்கு மேலாக

எழுதி வெளிட்டு வந்தேன். இந்தப் பணியினை 1945ம் ஆண்டிலிருந்து செய்து வந்தேன். பேச்சினாலும், எழுத்தினாலும் கடந்த 50 ஆண்டுகளாக அடியேன் செய்து வந்த தொடர்ச்சியான பணியினால்தான் திருக்குறள் சிந்தனை மக்களிடையே நன்கு பரவத் தொடங்கியது என்று கூறுவது மிகையாகிவிடாது.

அந்தக் காலத்தில் நான் எழுதி வெளியிட்ட சிறுசிறு நூல்களை எல்லாம் தொகுத்து வெளியிடவேண்டும் என்று என்னுடைய நண்பர்கள் பெரிதும் ஆர்வத்தினை உண்டாக்கினார்கள். அத்தகைய தொகுப்பு நூல்களில் ஒன்றுதான் இந்த நூலும் ஆகும்.

1952ம் ஆண்டு முதல் 1957 வரையில் டெல்லி பாராளுமன்றத்தில் நான் உறுப்பினராக இருந்த காலத்தில் அந்தச் சபையில் திருக்குறள் ஒலிக்குமாறு செய்ய முடிந்தது என்பதனைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

பாரத நாட்டின் வடக்கே பல முக்கிய நகரங்களுக்குச் சென்று குறள் மணம் பரப்புகின்ற பணியினைச் செய்ய முடிந்தது. பல முறை கடல் கடந்து மலேசியா, சிங்கப்பூர் நாடுகளுக்குச் சென்று திருக்குறள் தொண்டு செய்வதில் மன நிறைவு பெற்றேன்.

தமிழ்நாட்டில் பிறந்து, தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டு வாழ்கின்ற ஒவ்வொரு தமிழனும், திருக்குறள் பயிற்சி பெற்றிராவிட்டால், தமிழன் என்று சொல்லிக்கொள்ளும் பெருமைக்கு உரியவர் ஆகமாட்டார் என்பது எளியேன் கருத்தாகும்.

அன்புள்ள,
திருக்குறளார் வீ. முனிசாமி,
ஆசிரியர்.

# பாராட்டுரை

இறைவன் மனித இனத்தைத் தவிர மற்ற உயிரினங்களுக்குச் சிரிப்பைக் கொடுக்கவில்லை.

நகை என்ற சொல்லுக்குச் சிரிப்பு, மகிழ்ச்சி, ஒளி, ஆபரணம் எனப் பல பொருள்கள் உண்டு.

*கோழி யோனே கோப்பெருஞ் சோழன்*
*பொத்தி னண்பிற் பொத்தியொடு கெழீஇ*
*வாயார் பெருநகை வைகலு நக்கே*

—புறநானூறு 212:8-10.

கோழி என்னும் உறையூரில் அரசு புரிந்த கோப்பெருஞ் சோழன் மாசற்ற நட்பு பூண்ட பொத்தி என்னும் புலவரோடு அளவளாவி உண்மையாகப் பெருமகிழ்ச்சியில் சிரித்து நாடோறும் மகிழ்ந்திருந்தான்.

அப்படிப் புலவர்கள் புரவலரைச் சிரித்து மகிழும்படிச் செய்வதால், அவர்கள் **நகைப் புலவாணர்** என்று அழைக்கப்பட்டார்கள். (புறநானூறு 387).

அப்படி நம் திருக்குறளாரும் நகைப் புலவாணர். அவர் நகைச்சுவையாகப் பேசுவது போலவே இந்நூலில் நகைச் சுவையான கதைகளைச் சொல்லியுள்ளார்.

திருக்குறளார் குறட்பாக்களில் உள்ள நகைச்சுவையைக் கடைந்தெடுத்து அதில் தோன்றிய அமிழ்தம் அன்ன கருத்துகளை விளக்கிக் கூறுகிறார். ஒவ்வொரு கருத்துக்கும் தலைப்பு தந்து விளக்குகிறார்.

நூலாசிரியர் நகைச்சுவை என்னும் முதல் தலைப்பில் நகைச்சுவையை விளக்கிக் கூறி முடிவில், 'சிரித்து மகிழ இருவர் அல்லது பலர் ஒன்று கூடி இருத்தல் வேண்டும். அப்படி இல்லாமல் ஒருவன் தன்னந்தனியாகவே சிரித்துக் கொண்டிருப்பானேயானால் அதனை நகைச்சுவை என்று சொல்லிவிட முடியாது; வேறு ஏதேனும் இடர்ப்பாடான காரணந்தான் இருக்கமுடியும்.' என்றார். அடுத்து அவர்

சிரித்து மகிழ்தல் என்ற தலைப்பில் சிரித்து மகிழ்வது எப்படி என்பதை விளக்குகிறார்.

இப்படி ஆசிரியர் ஓர் தலைப்பின் கீழ் கூறும் விளக்கத்தின் இறுதியில் கூறும் கருத்தையே தலைப்பாகக் கொண்டு அடுத்த இயலை விளக்குகிறார். பெரும்பாலும் அவர் அந்தாதி முறையில் தலைப்புகளைக் கொடுத்து விளக்கியுள்ள திறம் வியக்கத்தக்கது.

திருக்குறளார் திருக்குறளின் நகைச் சுவையைத் திரட்டிக் கொடுத்ததை உட்கொண்டபின் நம் உள்ளம் மற்ற பழந்தமிழ் இலக்கியங்களில் உள்ள நகைச் சுவையை ஆய்ந்து உட்கொள்ளும்படி தூண்டுகிறது.

தலைவன் பார்க்கும்போது தலைவி தரையைப் பார்ப்பாள். அவன் பார்க்காதபோது அவள் அவனைப் பார்த்து மெல்ல நகுவாள். அது அவள் அவனை விரும்புகிறாள் என்பதை அறியும் குறிப்பு என்று வள்ளுவர் கூறினார்.

தலைவன் இறந்து பின்னற்றலைக் கண்டு தலைவி சிரித்த தாகவும் புலவர்கள் பாடினார்கள்.

தலைவி தோழியிடம் கூறுகிறாள்: பெருங் கடற் சேர்ப்பன் 'இன்னுயிர் வெளவிய நீ யார்?' என்று தான் நம்மை வருத்துவதை அறியாமல் நம்மால் தான் வருந்து வதைக் கூறி சுடர்நுதல் நோக்கித் தொழுது நின்றது நகையாகின்றது. (நற்றிணை 245.)

தலைவி தோழியிடம் கூறுகிறாள்: தினைப்புனத்தில் ஒருவன் புரவலன் போன்ற தோற்றத்துடன் வந்து இரவலன் போலப் பணிமொழி சொல்லி ஏசற்று என் குறைப் புறனிலை முயலும் அண்கணாளனை நகுகம் யாமே. (அகநானூறு 32)

தலைவி கூறுகிறாள்: நகை நனி யுடைத்தால் தோழி! இளமுலை நோக்கு நெடிது நினைந்து நில்லாது பெயர்ந்தனன் ஒருவன். அதற்கே என்னும் நோக்கும் இவ் வழுங்கல் ஊரே. (அகநானூறு 180)

ஊரலர் தூற்றல் தலையைப் பார்த்து நகைப்பதாகும்.

'நாம் நகை யுடையம் நெஞ்சே, நம்மொடு தான் வரும் என்ப தடமென் தோளி' என்று தலைவன் உடன் போக்கை எண்ணி அடைந்த மகிழ்ச்சியை நகை என்று புலவர் சொன்னார். (அகநானூறு 121)

தலைவி தோழியிடம் சொல்கிறாள் :
நகை நீ கேளாய் தோழி அல்கல்
எய்யாது பெயருங் குன்ற நாடன்
இல்வந்து நின்றோன் கண்டனள் அன்னை
வல்லே யென்முகம் நோக்கி
நல்லை மன்னென நகூஉப் பெயர்ந்தோளே

அகநானூறு 248, கபிலர்.

அன்னை தன் மகளின் கள்ளக் காதலனைக் கண்டதும் வந்த கோபத்தில் சிரித்தாள்.

இறைவளை நல்லாய் இது நகையா கின்றே
கறிவளர் தண்சிலம்பன் செய்தநோய் தீர்க்க
அறியாள் மற்றன்னை அலர்கடம்பன் என்றே
வெறியாடல் தான் விரும்பி வேலன் வருகென்றாள்
சிலப்பதிகாரம், குன்றக்குரவை.

தலைவிக்குக் காதலன் தந்த நோயை முருகன் தந்தான் என்று எண்ணி அன்னை வெறியாட வேலனை அழைத்தாள். அதைப் பார்த்து தலைவிக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

வெறியாடும் இல்லோர் பெருநகை காண தலைவன் வரவேண்டும் என்று தலைவி விரும்பினாள். (குறுந்தொகை 111). அவள் தலைவனை முயங்குந்தோறும் வீட்டில் வேலன் வெறியாடுவதை நினைத்து சிரித்துக்கொள்வாள். (அகநானூறு 22).

'திருக்குறளில் நகைச்சுவை' என்ற இந்நூல் கல்லூரியில் தமிழ் பாடநூலாக வைக்கும் தகுதியுடையது.

க. சண்முகசுந்தரம்

# பதிப்புரை

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு.

என்று கவிக்குயில் பாரதியார் பாடினார்.

உலகத்தார் புகழ்ந்து பேசுகின்ற புகழுரைகளைத் தமிழகத்திற்கு வாங்கிக்கொடுத்த தனிச் சிறப்பு மகாகவி பாரதியாரைச் சார்ந்து நிற்பதாகும்.

தமிழனாகப் பிறந்த பெருமையினைப் பெரிதாகக் கருத வேண்டும் என்று நாம் நினைக்க வேண்டும்.

இந்த நூலுக்கு பதிப்பாசிரியனாக இருந்து தொண்டாற்றுகின்ற வாய்ப்பினை மிகப் பெரிய நல்வாய்ப்பாகக் கருதி மகிழ்கின்றேன்.

என்னுடைய தந்தையார் திருக்குறளார் அவர்கள் எங்களுக்கு இளமையிலிருந்தே திருக்குறள் படிக்கின்ற பயிற்சியினை அளித்துள்ளார்கள். அவர்கள் எழுதியுள்ள அனைத்து நூல்களையும் பதிப்பிக்கும் திட்டத்தினை மேற்கொண்டுள்ளேன்.

பொதுமக்களின் ஆதரவினால் என்னுடைய இந்தத் தொண்டு வெற்றியடையும் என்று நம்புகிறேன்.

சிறியேனுடைய பதிப்புத் தொண்டிற்குப் பெருந்துணையாக விருந்து வரும் ஐயா சங்க இலக்கியச் செம்மல் திரு. க. சண்முகசுந்தரனார்க்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன். நல்ல முறையில் அச்சிட்டுக் கொடுத்த அன்னாருடைய அகஸ்தியர் அச்சகத்தின் ஊழியர்களுக்கும் மனமார்ந்த நன்றியினையும் பாராட்டுதலையும்தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள

திரு. வீ. மு. பாலசுப்ரமணியன்

# திருக்குறளில் நகைச்சுவை

**நகைச்சுவை:**

நகைச்சுவை என்பது மக்களுக்கென்றே உண்டான அரிய சுவையாகும். ஏனைய பிறவிகளுக்கு நகைச்சுவையை நுகரும் வாய்ப்பு இல்லை. நகைச்சுவையினை அறிந்து பயனடையாத மக்கள் வாழ்க்கை பயனற்றதாகும்.

நகைச்சுவைக்கு இலக்கணம் என்று ஒன்றினை வரம்பமைத்துக் கூறிக்கொள்ள வேண்டியதில்லை. புன்முறுவலும் முகமலர்ச்சியும் நகைச்சுவையினைக் காட்டும் நிகழ்ச்சிகள் என்று கூறிக்கொள்ளலாம். ஆசிரியர் வள்ளுவனார் காட்டும் நகைச்சுவைப் பகுதிகள் மிகவும் சிந்திக்கத் தக்கனவாகும். நகைப்புத் தோன்றும் இடங்கள் பாகுபடுத்தப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

மனத்தில் மகிழ்ச்சியும் முகத்தில் நகைப்பும் தோன்ற வேண்டும். மனம் மகிழாமல் முகத்தில் தோன்றும் நகைச்சுவை சுவையாகாது. நடைமுறையில் இதனை, 'பச்சைச் சிரிப்பு' என்கிறார்கள்.

ஆசிரியர் வள்ளுவனார் பல்வேறுபட்ட இடங்களில் நகைப்பினை அமைத்துக் காட்டுகிறார். சிரித்து மகிழ்தல் என்னும் நகைச்சுவை ஒருவரால் தன்னந்தனியே தனித்திருந்து செயல்படுவது அன்று. ஒருவன் தனியாக இருந்து கொண்டு தானாகச் சிரித்து மகிழ்தல் முடியாது. அது கூடாது என்றும் கூறுதல் வேண்டும்.

சிரித்து மகிழ இருவர் அல்லது பலர் ஒன்றுகூடி இருத்தல் வேண்டும். அப்படி இல்லாமல் ஒருவன் தன்னந் தனியாகவே சிரித்துக்கொண்டிருப்பானேயானால் அதனை நகைச்சுவை என்று சொல்லிவிட முடியாது. வேறு ஏதோ இடர்ப்பாடான காரணந்தான் இருக்க முடியும்.

சிரித்து மகிழ்தல்:

உலக இலக்கணம் - பொதுவானதாக ஒன்று உண்டு அஃதாவது அழுவதற்கு ஒருவரே போதும்; சிரிப்பதற்கு இருவர் வேண்டும் என்பதாகும். சிரித்து மகிழ்தல் என்னும் நகைச்சுவைக்கு முகமல்லாது வேறு எந்த உறுப்பும் காரண மாவது இல்லை. அதனால்தான் மேலான அவயவங்கள் அடுத்தடுத்து அமைந்துள்ள முகத்தினை உடம்புக்கே சிறப் பான பகுதியென்று நாம் கூறிக்கொள்ளுகிறோம்.

எனவேதான் சிரித்து மகிழ முகமே இலக்கணமாயிற்று; இடமாயிற்று என்று அறிகின்றோம். இன்னும் கொஞ்சம் விளக்கப்படுத்திக்கொள்ள வேண்டுமென்றால் மனத்தில் தோன்றும் எந்த உணர்ச்சியினையுமே முகந்தான் வெளிப் படுத்திக் காட்டுகிறது.

ஒருவன் முகத்தை மறைத்துக்கொண்டு முகமலர்ச்சி கொண்டு புன்முறுவல் கொள்வானேயானால் அவன் அவ் வாறு மகிழ்ச்சியுடன் இருக்கிறான் என்பதை நாம் தெரிந்து கொள்ள முடியாது.

ஏன்? முகம் மறைக்கப்பட்டிருப்பதால் உடம்பின் வேறு பகுதிகள் மறைக்கப்படாமலிருந்தாலும் அந்தப் பகுதிகள் அவனுடைய மன உணர்ச்சியைக் காட்டா. ஆதலால் முகந்தான் உணர்ச்சியினை வெளிப்படுத்தும் மூலப் பொருள் என்பது தெளிவாகிறது.

நகையும் முகமும்:

''அவருக்கு முகம் நன்றாக இல்லையே''...''முகத்தை ஏன் இப்படி வைத்திருக்கிறீர்கள்?''...''முகத்தைச் சுளித்

துக் காட்டாதீர்கள்''...''வீட்டிற்குப் பெரியவர் நீங்கள், நீங்களே இப்படி முகத்தை வைத்திருந்தால் சின்னஞ் சிறுசுகள் எப்படித் தாங்கும்?''...என்று இப்படியெல்லாம் பேசுகின்ற நடைமுறைப் பேச்சுக்கள் நாம் அறியாதவை அல்ல.

ஆதலால்தான் நகைச்சுவையைப்பற்றிப் பேசுகின்ற வள்ளுவனார், தாம் நூல் முழுதும் கூறுகின்ற நகைச்சுவை இடங்களுக்கெல்லாம் அடிப்படையாக 'முகம் நகுதல்' என்றும் சுட்டிக் காட்டுகின்றார்.

மனத்தில் கோபம் வந்தால் அதனையும் காட்டுவது முகமேதான். கண நேரத்தில் கோபக் குறியினை முகம் காட்டிவிடுகிறது. நாம் பேசிக்கொள்ளுகின்ற நகைச் சுவைக்கு முகந்தான் எடுத்துக்காட்டு என்பதனைத் தெளி வாகப் புரிந்துகொண்டோம்.

இவ்வளவு ஆற்றலும் இன்றியமையாத் தன்மையும் மூலகாரணமான இலக்கணமும் தனக்குள்ளே அமையப் பெற்றிருக்கின்ற முகத்தினைத் திருவள்ளுவர் சிறப்புச் செய்து கூறுகின்றார். 'முகம் முதுக் குறைந்தது' என்பது திருவள்ளுவர் குறிப்பு. 'முதுக் குறைந்தது' என்றால் அறிவில் மிகுந்தது என்று அர்த்தமாகும். இவ்வாறு திரு வள்ளுவர் மிகச் சிறப்பாகக் குறிப்பிடுவதற்குக் காரண மில்லாம லில்லை.

ஒருவருடைய மனம் உவகைகொண்டு மகிழ்ந்தாலும், அல்லது கோபங்கொண்டு காய்ந்தாலும் அதனை மற்றவர் களுக்கு உடனுக்குடனே முந்திக்கொண்டு புலப்படுத்துவது முகமன்றோ? இவ்வாறு இருக்க, முகத்தினை நம் ஆசிரியர் வள்ளுவனார் சிறப்பித்துப் பேசுவதில் வியப்பு ஒன்றும் இல்லையேதான். சுவை மிக்க அக் குறட்பாவினைச் சிறிது சிந்தித்துக்கொள்ளுவோம்.

*முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ? உவப்பினும்*
*காயினும் தான்முந் துறும்.*

வகைகள்:

சொல்லி வைத்துச் சிரிக்க வைப்பது என்பது நடைமுறை வழக்கத்திற்கு மாறுபட்டதாகும். அது நடைமுறை வழக்கமும் அன்று. "அவர் சிரிக்கச் சொன்னார்; அதனால் சிரிக்கின்றேன்" என்று பேசுபவர்களை நாம் பழக்கத்தில் பார்ப்பதில்லை. தானாகவே-இயல்பாகவே-உளம் மகிழ்ந்து முகம் மலர்ச்சிகொண்டு புன்முறுவல் தாங்கிச் சிரித்து மகிழ்வதுதான் நகைச்சுவை என்பதாகும்.

நகைச்சுவை என்பதற்கு வரம்பு உண்டு; பொது இலக்கணம் உண்டு. சிரித்து மகிழ்வதற்கெல்லாம் நகைச்சுவை யென்ற பெயர் பொருந்தாது. உள்ளத்தின் அதாவது மனத்தின் தொடர்பு இல்லாமலேயே சிலவற்றை - சில காட்சிகளைக் கண்டதும் சிரிப்பு ஏற்படுகிறது.

எடுத்துக்காட்டாக நடைமுறையில்-உலகப் போக்கில்-பேசப்படுகின்ற ஒரு சில சொற்கள் சிரிப்பதற்குக் காரணமாக இருக்கின்றன. 'கிண்டல்' என்றும், 'நையாண்டித் தனம்' என்றும், 'கோமாளித்தனம்' என்றும், 'கிறுக்குத் தனம்' என்றும் ஒருவிதக் கருத்துக்கள் அடங்கிய நிகழ்ச்சிகளைக் காணும்பொழுது சிரிக்கின்றோம். இவைகளுக்கு நகைச்சுவை என்னும் இலக்கணம் பொருந்தாது. இவை பெரும்பாலும் உடம்பினால் நிகழ்த்தப்படுகின்ற செயல்களை அடிப்படையாகக் கொண்டு நடைபெறுகின்றன வாம்.

ஆதலால்தான் சிரிப்பு என்னும் ஒன்றினைமட்டும் காரணமாகக் கொண்டு நகைச்சுவை என்பதனைக் கணக்கிட முடியாது. நகைச்சுவை என்பது ஆழ்ந்த கருத்தினையும் பயனையும் அறிவின் அடிப்படையையும் உள்ளம் நெகிழ்தலையும் கொண்டதாகும். எனவேதான் உடல் வளர்ச்சிக்கும் உள்ளம் மகிழ்தலுக்கும் நகைச்சுவை பெருங் காரணமாகக் கூறப்படுகின்றது.

நகைச்சுவை அல்லது சிரித்து மகிழ்தல் என்பது மக்களாகப் பிறந்த அனைவர்க்கும் இயல்பாகவே இருக்க வேண்டிய முதன்மையான குணம் என்று பேசப்பட்டாலும் எல்லோருமே அப்படி இருந்துவிடுதல் இல்லை என்றும் கூறுதல் வேண்டும்.

மக்கள் வாழ்க்கையினைத் தெளிவாக அளந்து கணக்கிட்டுக் காட்டும் நம் ஆசிரியர் வள்ளுவனாரும் நகைத்து மகிழ்ந்து வாழாத மக்களும் உண்டு என்று வருத்தத்துடன் குறிப்பிட்டுக் காட்டத் தயங்கவில்லை. வாய்ப்புகள் கிட்டும் போது மகிழ்ந்து சிரித்துப் பழகும் பண்பில்லாத மக்களைக் கூட நாம் மன்னித்து விடலாம். ஏன்? இவர்களைவிட மிகமிக மோசமான மக்கள் வகையினரும் உண்டு.

சில பிறவிகள்:

சிலர் எக்காலத்திலும் 'கலகல'வென்று பேசிப் பழகும் பழக்கமில்லாமல் இருப்பர். அப்படிப்பட்டவர் வீட்டில் இருக்கும்பொழுது மற்றவர்கள்—பெண்டிர்—பிள்ளைகள் முதலானோர் சிரித்து மகிழ்வதைக் கண்டால் சகிக்க மாட்டார்கள்.

அப்படிச் சிரித்து மகிழ்கிற ஒலி சிறிது கேட்டாலும் அதனை வெறுத்துக் கோபித்துக்கொள்ளவும் செய்வர். இப்படிப்பட்டவர்களையும் ஒரு வகைப் பிறவிகள் என்று தான் நாம் சொல்லுதல் வேண்டும்.

ஆதலால்தான் நகைத்து மகிழ்ந்து வாழ்தல் என்பது பிறரோடு கலந்து வாழ்கின்ற வாழக்கைக்கு முதற்படியாகும் என்று ஆசிரியர் வள்ளுவனார் சொல்லாமல் சொல்லி வைக்கின்றார். முகமலர்ச்சி கொண்டவன் தான் பிறரோடு பழகுதல் கூடும். முக மலர்ச்சிக்கு மூலகாரணம் மன மகிழ்ச்சி யாகும். மனமகிழ்ச்சி என்பது நகைச்சுவை இலக்கணத்தின் ஒரு கூறு ஆகும்.

நகைச்சுவை முதலில் மனமகிழ்ச்சியினை உண்டாக்கி, பின்னர் முகமலர்ச்சியினைக் கொடுக்கும். முகமலர்ச்சி புன்முறுவலினைத் தந்து பிறகு சிரிப்பு என்னும் நிகழ்ச்சியினையும் காட்டுவதாகும். எனவேதான் நகைச்சுவை என்ற பெரும் பகுதிக்குள் மனமகிழ்ச்சி என்னும் முதற்படி நிகழ்ச்சியும் அடங்கியிருக்கின்றது.

உலக மக்களோடு கலந்து பழகி மகிழ்வதுதான் மனிதத் தன்மையில் தலைசிறந்த பண்பாகும். ஆசிரியரின் பேராண்மை இதனைத் தாங்கி நிற்கிறது. மனம் போன போக்கில் சிலர் பேசுவதைப் பழக்கத்தில் நாம் கண்டு வருகின்றோம்.

**பண்பாடு:**

''எனக்கு அக்கம் பக்கத்தில் குடியிருப்பவர் கூடத் தெரியாது''—''இந்த ஊரில் யாரையுமே எனக்குத் தெரியாது; என்னையும் யாருக்கும் தெரியாது''-இப்படிப்பட்ட வார்த்தைகளை வெட்கமில்லாமல் பேசுகின்றார்கள். இது மனித குலத்திற்கு எவ்வளவு இழிவான - புறம்பான-முரணான -கருத்து என்பதை நாம் சிந்தித்து அறிய வேண்டும்.

தன்னந்தனியே இருந்து வாழ்ந்து மறைகின்ற மனிதன் இவ் வுலகத்திற்குத் தேவையில்லை என்று கடுமையாகவும் கூறிவிடலாம். ''நாம் உண்டு; நமது வேலை உண்டு; எதையும் நாம் காதில் போட்டுக்கொள்ளக் கூடாது''.- இப்படிப் பேசுகிற பிறவிகளும் இருக்கத்தான் செய்கின்றன. இப்படிப் பேசப்படுகின்ற வார்த்தைகளை நாம் எளிதாகக் கருதித் தள்ளிவிடவும் கூடாது.

மிகச்சிறிய கருத்துக்கள் போல் இவைகள் தோன்றினாலும் சமுதாயத்தை அரித்து விடுகின்ற வேர்ப்புழுக்கள் இவைகளன்றோ? இத்தகைய வேர்ப் புழுக்கள் போன்ற தன்மை கொண்ட மக்களை மக்களிடையே வாழ விடுதலும் ஆபத்து என்று கூறுதல் தவறாகிவிடாது. தனித்து வாழ்

கின்றவன் நகைத்து மகிழ்ந்து வாழ்தல் என்பது முடியாது தன்றோ?

அப்படிப்பட்டவனுக்கு இந்த உலகம் என்ன பயனுள்ளதாக இருக்கப்போகின்றது? அவனுந்தான் இந்த உலகத்தினை எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? இருளில் கிடப்பவன் எதற்குச் சமம்? அவன் எதைச் செய்ய முடியும்? எதைக் காண முடியும்? 'இருட்டறையில் இருப்பவன் குருடன்' என்பது உலகப் பழமொழி யன்றோ?

இருட்டறை:

இவ்வாறு பலருடன் கலந்து மகிழும் பண்பில்லாமல் இருப்பவனுக்கு இந்த உலகமே இருண்டு கிடக்கும் என்பது நம் வள்ளுவனாரின் அருமையான வாக்காகும். வள்ளுவநனார் குறிப்பிட்டுப் பேசுகின்ற முறையே தனிச் சிறப்பாக அமைந்துவிடுகின்றது. பகல் இரவு என்னும் வேறுபாடு அறியாதவர்களே இவர்கள் என்று கூறுகின்றார். பகற்பொழுதும் இருளாகத்தானே இருக்கும் என்று அச்சுறுத்திக் கூறுகின்றார். யாருக்கு?

பலருடனும் நகைத்து மகிழ்ந்து பழகும் பண்பு இல்லாதவர்களுக்கு என்பதாகும். 'நகல் வல்லர் அல்லார்க்கு' என்ற குறளடிச் சொற்கள் நாம் பேசுகின்ற இக் கருத்தினைச் சுட்டிக் காட்டுகின்றன. நகைத்து மகிழ்தல் எவ்வளவு இன்றியமையாதது என்பதனை இக் குறளடி நமக்கு மெய்ப்பித்து விடுகின்றது. இத்தகைய மக்களுக்கு மிகப் பெரிய இவ் வுலகத்தில் பகற்பொழுதும் இருளில் இருப்பதேயாகும் என்று மேலும் ஆசிரியர் விரிவுபடுத்திக் காட்டுகின்றார்.

ஏன் அவ்வாறு கூறுகின்றார்? பிறருடன் கலந்து மகிழாதவன் - உள்ளம் மகிழ வாழாதவன் - யாதும் அறிய மாட்டானே! ஆதலால்தான் பகலுங்கூட - வெளிச்சத்தினைத் தருகின்ற பகற்பொழுதுங்கூட அப்படிப்பட்டவனுக்கு

இருளாகத்தான் இருந்துவிடும். நகைத்து மகிழ்தல்என்னும் செயலினை ஆசிரியர் வள்ளுவனார் அடிப்படை உண்மை யாகக் கொண்டு நல்லதொரு குறட்பாவினைத் தருகின் றார்.

நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள்

பகற் பொழுதும் இருளிலேயே கிடந்ததாகும் என்று குறித்துக் காட்டுகின்றாரென்றால் அதன் சுருக்கமான விளக்கம் யாது? உலக மறியாதவன் என்று வழக்கில் பேசப் படுகின்றானே, அவனேதான் இவனும் என்று அறிதல் வேண்டும்.

ஒரு நல்ல சிந்தனையினை நாம் வரவழைத்துக் கொள்ளுதல் தெளிவுதரும். சிரித்து மகிழ்தல் என்பதனை ஏதோ விளையாட்டுச் செய்கை என நினைப்பவர்களும் உண்டு. அப்படி நினைத்தல் தவறானதாகும்.

மனிதப் பண்பாடுகளில் மிக மிகத் தேவையான - பய னுள்ள - வளர்க்க வேண்டிய - தன்மைதான் நகைத்து மகிழ்தல் என்பதாகும் என்னும் குறிக்கோள் நமது வாழ்க் கையில் ஊறிவிடுதல் வேண்டும்.

**நல்ல நகை:**

மனித சமுதாயத்தைச் சேர்ந்து ஒன்றுபடுத்தி ஒற்று மைக்கு வித்திட்டு வளர்ப்பது விரிந்த உள்ளமும் கூட்டு றவுமே யாகும். கூட்டுறவு என்பது நட்பு என்னும் அடிப் படையில் வளர்க்கப்படுவது.

நட்பு என்னும் நல்ல உள்ளம் தருகின்ற பரிசு ஆகும். ஆதலால்தான் நகைத்தல் - மகிழ்தல் - என்பது மனத்தி லிருந்து வெளிப்படுதல் வேண்டும். மனத்தில் வெளிப் பட்ட பிறகு அந்த மகிழ்ச்சி முகத்தில் தோன்றும்.

மனத்தில் தோன்றாமல் - மனத்தோடு தொடர்பு கொள்ளாமல் முகத்தில் மட்டும் நகைப்புக் குறியினைக் காட்டினால் அது பயனற்றதாகும். அக் குறி நட்புக்கும் கூட்டுறவுக்கும் ஏற்றதன்று. அதனை 'முகம் நக நட்பது' என்று ஆசிரியர் வள்ளுவனார் குறிப்பிடுகின்றார்.

மனத்தில் மகிழ்ச்சி கொள்ளாமல் வேறு எண்ணத்தினை வைத்துக்கொண்டு முகத்தில் மட்டும் நகைக் குறியினைக் காட்டுகின்ற நண்பர்களும் உண்டன்றோ? அப்படிப்பட்டவர்களை நண்பர்களாகக் கொள்ளாதே என்பதுதான் வள்ளுவனாரின் அறிவுரையாகும்.

மனத்தினாலும் - அகத்தினாலும் - நகை மகிழ்ச்சி கொண்டு அதன் காரணமாக முகமலர்ச்சி தோன்றுதல் வேண்டும். வெறும் முகம் நகைத்துக் காட்டும் நிகழ்ச்சி பயனற்ற தாகும்.

முகம்நக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகம்நக நட்பது நட்பு

என்ற எளிமையானதொரு குறட்பா இக்கருத்தினை எடுத்துக் காட்டிவிடுகின்றது. இங்கே நாம் கண்டுகொள்ள வேண்டிய குறிப்பொன்று கிடக்கின்றது. நட்பு என்பது நண்பர்களை உண்டாக்கிக் கொள்ளுதலாகும்.

இது அவ்வளவு எளிதான காரியம் அன்று. நினைத்த நேரத்திலெல்லாம், உடனுக்குடனே நண்பர்களைப் பெற்றுவிட்டோமென்று பழகிக் கொள்ளுதல் மிகவும் ஆபத்தானதுமாகும்.

''காலையில் ரெயில்வே நிலையத்தில் ஒருவரைச் சந்தித்தேன். இருவரும் பழகினோம்; மாலைக்குள் என்மீது உயிரை விடுகிறார்'' என்று ஒருவர் சொன்னார். இதைக் கேட்ட மற்றவர் அவருக்குத் தக்க பதில் சொன்னார்.

''அப்படியா? இவ்வளவு சீக்கிரத்தில் இவ்வளவு நெருக்கமான நட்பு ஏற்பட்டுவிடுதல் இடராயிற்றே! காலை

யில் சந்தித்து மாலைக்குள் உங்கள் மீது உயிரை விடுகின்றார் என்றால் மறு நாளைக்குள் உங்கள் உயிரை எடுத்து விடுவார் என்று பொருள்'' என்பதாகக் குறிப்பிட்டுக் காட்டிவிட்டுச் சென்றார். இக் கருத்தினை இங்கு அவசியத்தைக் கருதித்தான் வற்புறுத்திக் கூறுகின்றோம்.

ஆழம்:

நட்பு என்பது உயிர்த் துணையாக இருக்க வேண்டிய தொன்றாகும். உடம்பும் உயிரும் இருப்பது போல இருப்பதனையே நட்பு என்று கூறுதல் வேண்டும். அன்பு வளர்ந்து அதன் பிறகு ஆர்வம் என்னும் பண்பு பெற்றுத் தருகின்ற குழந்தைக்குத்தான் நட்பு என்று பெயர். 'ஆயிரங் காலத்துப் பயிர்' என்று பேசப்படுகின்ற தலைவன் தலைவி வாழ்க்கைக்கு அடிகோலுவதாக இருக்கின்ற காதல் வாழ்க்கை 'நட்பு' என்னும் வரிசையில் வளர்கின்றது.

எனவே நட்பு என்பது உயிருக்குள் உயிராகக் கருதப்பட வேண்டிய நிகழ்ச்சியாகும். 'நானும் அவளும் கலந்து இருந்து வாழ்கின்ற காதல் வாழ்க்கை எவ்வாறு இருக்கின்றதென்றால் உடம்பும் உயிரும் இணைந்திருக்கின்ற தன்மையான நட்பு'- என்று பேசுகின்ற காதலன் வாயிலாக நட்பின் சிறப்பினைத் திருவள்ளுவர் தெளிவுபடுத்துகிறார்.

'நெஞ்சத்து அகநக நட்பது நட்பு' என்று குறித்துக் காட்டுகின்ற குறட்பாச் சொற்களுக்கு இலக்கணமாகத் தான் உள்ளக் காதல்கொண்ட காதலர்களின் வாழ்க்கை அமைந்து கிடக்கின்றது. அகம் எனப்படுகின்ற மனம் நக மகிழுமாறு-நட்புப் பூண்டவர்கள்தான் காதலர் என்பவர் களாவர்.

அகம் நகப் பழகுவது சிறந்த நட்பாகி அதன் அடிப்படையில் காதலாக-உயிர்க் காதலாக மிளிர்வதாகின்றது. ஆண் பெண் சேர்க்கை - காதல் - இல்லற வாழ்க்கை என்பதெல்லாம் உயிருடன் உயிர் ஒன்றுபடுகின்ற பெருஞ் சிறப்

பினைக் கொண்ட தன்றோ? அக்காதல் நட்பின் நெருக்கத்தினை எளிதில் விளக்கிவிட முடியாதுதான். ஆசிரியர் வள்ளுவர் தலை சிறந்த எடுத்துக்காட்டினை நம் முன் விளக்கிக் காட்டுகின்றார்.

காதலர்:

உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பினை எவ்வாறு எளிதாக நம்மால் விரித்துக் கூறிவிட முடியும்? உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு எத்தகைய இன்றியமையாத தன்மையது? வாழ்க்கையே அது தானன்றோ!

எவ்வாறு அவைகள் ஒன்றுபட்டன? அவைகள் பிரிந்திருத்தல் என்பது கூடுமோ? சிந்தித்துத்தான் பார்க்க முடியுமா? இப்படியாக எவ்வளவோ கூறிக்கொண்டு போகலாம். அவ்வளவு சிறப்பாகக் காதலனும் காதலியும் தொடர்புகொண்டு வாழ்கின்றார்கள் என்பதனை அருமையானதொரு குறட்பா கூறுகின்றது.

இக்கருத்தினைக் கூற வந்த ஆசிரியர் வள்ளுவனார் காதலன் வாயிலாகச் சிறந்த முறையில் வெளிப்படுத்துகின்றார்: ''உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு எத்தன்மையதோ, அத்தன்மையாகவே, எனக்கும் இப்பெண்ணிற்கும் உள்ள தொடர்பு இருக்கின்றது''— இப்படியாகக் காதலன் கூறுகின்றான். இப்போது குறட்பாவினைப் பார்ப்போம்.

உடம்பொ(டு) உயிரிடை யென்னமற்று அன்ன
மடந்தையொ(டு) எம்மிடை நட்பு

நட்பின் வகையில் சிறப்புடன் உண்டாகின்ற காதல் வாழ்க்கையினைக் கண்டோம். அந்த நட்பும் உள்ளம் நகுமாறு உண்டானால் அதற்குச் சிறப்பு என்றும் தெளிவு படுத்தப்பட்டது.

நண்பர்கள் நகைத்து மகிழ்தல் என்பது வாழ்க்கை இலக்கணமாக விளக்கப்பட்டாலும் நகைத்தல் என்பதற்கு எல்லைக்கோடு போட்டு ஆசிரியர் காட்டிவிடுகின்றார். நண்பர்கள் நகைத்து மகிழ்ந்துகொண்டே இருத்தல் என்பது சிறந்த நட்பு என்பதற்கு அழகன்று என்று ஆசிரியர் அச்சுறுத்திக் கூறுகின்றார். நட்பு என்பது ஒருவரோடொரு வர் நகைத்துப் பழகுவதற்குத்தான் என்று எண்ணிவிடா தீர்கள் என்பது வள்ளுவனாரின் வாக்காகும்.

ஒருவருக்கொருவர் உள்ளம் ஒன்றுபட்டுப் பெருந்துணை யாக இருக்கவேண்டியதுதான் நட்பு என்பதற்கு அடிப்படை என்பதனை மறந்துவிடுதல் கூடாது. நண்பர்களுக்குத் தக்க முறையில் அறிவுரை கூறுதலும், தவறு செய்கின்ற போது எடுத்துக்காட்டி நல்வழிப்படுத்துதலும், உண்மை பேசி உள்ளம் ஒன்றுபடுதலும் நட்பிற்கு இலக்கணமாகும்.

**நண்பன்:**

அரசன் ஒருவன் தன் நண்பனான அமைச்சனுடன் ஊர் சுற்றி வந்தானாம். வந்த வழியில் கரும்புத் தோட்ட மொன்று கண்ணில் பட்டது. இருவரும் கரும்பு தின்னப் போனார்கள். அரசன் கரும்பொன்றைத் தின்னும்போது அமைச்சனிடம் சொன்னான்: ''என்ன, அமைச்சரே! இக் கரும்பு கசக்கின்றதே!''

இதைக் கேட்ட அமைச்சன் அரசனை நோக்கி, ''நான் தின்னும் கரும்பும் அப்படித்தான் இருக்கின்றது. இந்தக் கரும்பே கசப்புதான்'' என்று கூறினானாம்.

சிறிது நேரம் சென்று அரசன் அமைச்சனை நோக்கி ''அமைச்சரே! இப்போது தின்னும் இந்தக் கரும்பு நன்றாக இனிக்கிறதே!'' என்றான்.

உடனே அமைச்சர் அரசனை நோக்கி, ''ஆகா! எவ்வளவு இனிப்பு! நான் தின்னும் கரும்பும், மிகமிக இனிமை யாக இருக்கிறது.'' என்று பதில் சொன்னானாம்.

உடனே அரசன் அமைச்சனை நோக்கி, ''என்ன! அமைச்சரே! நான் சொல்லுவது போலவே நீங்கள் சொல்லு கிறீர்கள்!'' என்று கேட்டான்.

அதற்கு அமைச்சன் ''நான் தங்கட்கு அமைச்சனல் லவா? தங்கள் கருத்து எப்படிப் போகிறதோ அதே மாதிரி போக வேண்டியதுதானே என்னுடைய வேலை?'' என்று கூறினானாம்.

இப்படிச் சொல்லிப் பழகுவதற்கு நட்பு என்று பெய ரன்று. இதற்கு இடர்ப்பாடான கூட்டுறவு—சேர்க்கை— என்பதுதான் அர்த்தமாகும். நண்பன் சொல்லுவதற் கெல் லாம்— செய்வதற்கெல்லாம் 'ஆமாம்' போட்டுச் சிரித்து மகிழ்ந்து இருத்தல் நட்பு ஆகவே ஆகாது என்று திட்டவட்ட மாகக் கூறுகின்றார்.

சிரித்து—நகைத்து—மகிழ்தல் என்பதில் ஆசிரியர் காணும் குறிப்புரைகள் சிந்தித்து மகிழத்தக்க ஆழ்ந்த உண்மைகளைத் தாங்கி நிற்கின்றன என்பதனை நாம் உணருதல் வேண்டும். 'நகுதல் பொருட்டன்று நட்டல்' என்ற சொற்களைக் கொண்டு குறட்பா வொன்று ஆரம்ப மாகின்றது.

நகைத்து மகிழ்ந்து போவதற்காகவேதான் நண்பர்கள் என்று தவறாக எண்ணிக்கொண்டிருப்பவர்களுக்குத் திரு வள்ளுவர் புதுமையான திருப்பம் தருகின்றார். நட்பு என்பது சிரித்து மகிழ்ந்து பொழுது போக்குவதற்கென்று எண்ணியிருக்காதீர்கள் என்ற வெளிப்படையான உண்மை யினை, 'நகுதற் பொருட்டன்று நட்டல்' என்ற சொற்கள் விளக்கிவிடுகின்றன. அப்படியாயின் 'நட்பு' என்பதனை அக் குறட்பா மேலும் நமக்கு எடுத்துரைக்கின்றது.

நட்பு பயனுள்ளதாக இருத்தல் வேண்டும் என்பது நட்பின் இலக்கணமாகும். நண்பர்களுக்குப் பாதுகாப்பாக இருப்பதுதான் முதல் தரமான நட்புக்கு அடையாளமு

மாகும். நண்பர்களுக்குப் பாதுகாப்பாக இருத்தல் வேண்டும் என்னும் கருத்தினை விளக்கிப் பேசுகின்ற இடத்தில் 'மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற் பொருட்டு' என்று கூறி மேலே கூறப்பட்ட குறட்பாவினை முடித்து விடுகின்றார்.

நண்பர்கள் சில நேரத்தில் வரம்பு மீறி நடக்க ஆரம்பிப் பார்கள். ஒழுக்கத்திலிருந்து நழுவியும் செயல்பட ஆரம் பிப்பார்கள் அப்படி நடக்கின்ற செயலைத்தான் 'மிகுதிக் கண்' என்ற சொல் குறிக்கின்றது.

அப்படித் தன் நண்பன் வரம்பு மீறிய செயலினைச் செய்ய முனைகின்றான் என்று அறிந்து அதனை முன் கூட்டியே தடுத்து நிறுத்திவிட வேண்டும் என்பது நண்பர் களுக்கு அறிவுரை யாகும். 'மேற்சென்று' என்று கூறுவது, நண்பன் முந்திக்கொண்டு, தவறு செய்கின்ற நண்பனைக் காப்பாற்ற வேண்டும் என்பதாகும். மற்றோர் அருமை யான கருத்தும் விளக்கப்படுகின்றது.

கடமை:

இனிமையாகப் பேசித்தான் நண்பனைத் திருப்ப வேண்டும் என்பது கடமையன்று. இனிமையான சொற் களினால் நண்பனைத் தவறு செய்யாமல் தடுக்க முடிய வில்லையென்றால் கடுமையான சொற்களைச் சொல்லியும் திருப்ப வேண்டும், அடித்துக்கூடத் திருத்தலாம், திருப்ப லாம் என்பது குறிப்பாக உணர்த்தப்பட்டது. ஆதலால் தான் 'இடித்தற் பொருட்டு' என்றும் கூறி வைத்தார்.

ஆகவே, நகைத்தல் - சிரித்து மகிழ்தல்-என்னும் தலை யான கருத்தினைக் குறிப்பிடும்போது அக் கருத்தினை வைத்துக்கொண்டு நட்புக்கு அடிப்படையான மிகச் சிறந்த உண்மையினையும் வெளிப்படுத்தினார். எளிமையான சொற்களில் குறட்பா அமைந்து கிடக்கின்றது.

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு

சிரித்து - நகைத்து - மகிழ்ந்து போவதுதான் நண்பர் களுக்கு அழகு என்று எண்ணி இருக்காதே; நண்பனை நல்ல வழியில் திருப்பிக் காப்பதுதான், நண்பர்களின் பயனுள்ள கடமை யாகும்.

நகைத்து மகிழ்தல் என்பது இன்றியமையாததொரு சிறந்த பண்புதான் என்றாலும், அதுவும் நட்பு என்னும் ஒன்றினை விளக்க வந்த இடத்தில் எவ்வாறு அரிய கருத் தினைப் புலப்படுத்திவிடுகின்ற தென்பதனை மறக்க லாகாது.

'நகுதல்' என்னும் சொல்லின் அடிப்படையில் எழுகின்ற உண்மைகள் மிகப் பலவாகும். காரண காரியங்களைப் பகுத்துப் பார்த்துத் தெளிவு உண்டாகின்றபோது மெய்ப் பொருள் விளங்கிவிடுகின்றது. 'போலி வேடதாரிகள்' என்று நாம் பழக்கத்தில் பேசியும் கண்டும் வருகின்றோம்.

சமுதாயத்திற்கு இத்தகையோர் மிகுந்த இடரினை உண்டாக்குபவர் ஆவர். இவர்களின் முதன்மையான தீய நடத்தை ஒழுக்கக் கேடு என்பதை அடிப்படையாகக் கொண் டிருக்கின்றது. உள்ளத்தில் அத்தனையும் வஞ்சகமாகவும் நஞ்சாகவும், வைத்துக்கொண்டு வெளியில் தூய்மையுள்ள வர்கள் போலப் பேசிக் காட்டியும், நடந்து காட்டியும், திரி கின்றவர்களைப் பார்த்து, வெளியில் மக்கள் சில காலம் நம்பி ஏமாந்தாலும் - மனச்சாட்சி அவர்களைக் கண்டு நகைக்கும் என்கிறார். ஏன்?

அப்படி நகைப்பதன் காரணம் யாது? என்றாலோ, என்றேனும் பெரும் துன்பம் அவனுக்கு வந்தே தீரும் என் கின்ற உண்மையினை அவன் அறிந்து கொள்ளாமல், ஒழுக்கக் கேடான நடத்தைதான் பயன்தரும் என்று எண்ணி இருக்கிறானே என்பதை எண்ணியே யாகும் என்பதுதான் காரணம் என்று நாம் அறிதல் வேண்டும்.

போலி:

பார்க்க மிகவும் கவர்ச்சியான தோற்றமும், காவியுடை, கமண்டலம், குடுக்கை, தண்டம் முதலியவற்றுடன் காட்சியளித்த 'சாமியார்' எனப்படும் போலி வேடதாரியொருவர், மக்களைக் கூட்டமாகக் கூட்டி உட்கார வைத்துக்கொண்டு அறிவுரை செய்துகொண்டிருந்தார். மக்கள் ஆர்வத்துடன் கேட்டுக்கொண்டிருந்தனர்.

முற்றும் துறந்த முதிர்ந்த ஞானியின் தோற்றமும் சொற்களும் மக்களைக் கவர்ந்துவிட்டன. செல்வம் நிலைத்து நில்லாதது-எப்போதும் மறைந்து போகும்-பணம்' அழிந்து போவதாகும் என்று பணத்தை மிகவும் பழித்தும் மக்களுக்குப் பணத்தின்மீது ஆசை வைத்தல் கூடாது என்பதனை வலியுறுத்தியும் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தார்.

கூட்டத்திலிருந்த ஒருவருக்கு இவருடைய 'மனம் எவ்வளவு தூய்மையானதென்பதைக் கண்டுகொள்ள முடியவில்லை. 'சாமியார்' எப்படிப்பட்டவரென்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று அவர் பெரும் விருப்பம் கொண்டார்.

கூட்டத்திலிருந்து எழுந்தார். பணத்தினை அற்பமாகவும் ஆசையற்றும் பேசிக்கொண்டிருந்த சாமியார் பேச்சை நிறுத்தினார். அன்பர் ஒருவர் தம் அருகில் வருகின்றார் என்று எண்ணிப் பேச்சினை நிறுத்தி, வந்தவரை நோக்கி, "அப்பனே! உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

உடனே அருகிற் சென்றவர் சாமியாரை, இரு கை கூப்பி வணங்கிப் பேசினார். "அடிகளார் அவர்களே! அடியேன் தங்களின் அறிவுரையைக் கேட்டு மனம் மாறி விட்டேன். அடியேன், அன்பளிப்பாக ஐந்து ரூபாய் தங்கட்கு அளிக்கின்றேன். பெற்றருளுதல் வேண்டும்" என்று கூறினார்.

உடனே சாமியார், "அன்புள்ள பக்தரே! உமது பக்தியை மெச்சினோம்; மகிழ்ந்தோம். அப் பாவமான

பணத்தினை நான் கண்ணாலும் பார்க்கமாட்டேன். என்னிடம் தராதீர்கள். இந்தக் குடுக்கையில் போட்டுப் போங்கள்!'' என்றாராம். சாமியார் கூட்டமெல்லாம் போன பிறகு குடுக்கையில் உள்ளதைக் கணக்கிட்டுக் கொள்ளுகிறவர் போலும்!

வஞ்ச மனமும் வெளிக்கோலமும் இத்துடன் நின்று விடுவதில்லை. மேலே கூறிய இதனையாவது மிக இயல்பானது என்று நாம் சொல்லிக்கொள்ளலாம், மிக மிகக் கொடிய தீமைகளையும் இப்படிப்பட்ட போலிக்கோலம் போடுபவர்கள் - வஞ்சமனம் படைத்தவர்கள் - செய்கின்றார்களே என்று ஆசிரியர் அச்சுறுத்திக் கூறுகின்றார். நகுதல் என்னும் அருமையான சொல்லினைக் கொண்டு உலக அனுபவத்தினை நயமாக நமக்குக் கூறுகின்றார்.

'பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்' என்று ஒரு குறட்பா முடிகிறது.

ஐந்து பூதங்களும் மனத்திற்குள் சிரித்துக்கொண்டே இருக்கின்றன என்று சொல்லுகின்றார். யாரைப் பார்த்து? போலிவேடதாரியாகக் காட்சியளித்து மனத்திற்குள் வஞ்சகமாக நடந்துகொள்ளுகின்றவனைப் பார்த்து அப்படிச் சிரிக்குமாம்.

தான் செய்கின்ற வஞ்சகமான செய்கை யாருக்குமே தெரியாது என்று அந்தப் போலிவேடதாரி நினைத்துக் கொண்டு இருக்கின்றானாம். பஞ்ச பூதங்களும் எள்ளி நகையாடி அகத்தில் சிரித்துக்கொண்டிருப்பது அவனுக்கு எப்படித் தெரியமுடியும்?

எதிர்காலத்தில் அவனுக்கு வர இருக்கின்ற பெருந்தீங்கினைத்தான் அவனால் எப்படி உணர்ந்துகொள்ள முடியும்? அதனால்தான் அவனைப் பார்த்து மனச்சாட்சியாகிய ஐந்து பூதங்களும் மனத்திற்குள்ளே சிரித்துக் கொள்ளுகின்றன என்றார். வருங்கால இடர்ப்பாட்டைக் குறிக்கும் எள்ளி நகையாடும் சிரிப்பாகக் கூறப்பட்டது.

ஆடுகள்:

ஆடுகளை ஆற்றின் ஓரமாக நிறுத்திக்கொண்டு தன் மனைவியுடன் பேசிக் கொண்டிருந்தானாம் ஒருவன். ஆடுகளை அழைத்துக்கொண்டு ஆற்றைக் கடந்து அவன் போக வேண்டும். ஆற்றில் வெள்ளம் வந்துவிடுமோ என்று பயந்தான். உடனே அவன் மனைவி அவனுக்கு ஒரு யோசனை கூறினாள். தன் அருகில் இருக்கும் கோயிலைக் கணவனிடம் காட்டிச் சொன்னாள்:

''இந்தக் கோயிலில் இருக்கும் சாமி, மிகவும் ஆற்றல் உள்ளதாம். இந்தச் சாமியிடம் வேண்டிக்கொண்டு, நாம் ஆடுகளைஓட்டிக் கொண்டு ஆற்றைக் கடந்து பயமில்லாமல் போகலாம்.'' இவ்வாறு மனைவி கூறியதைக் கேட்ட அவனும் சரியென்று ஒப்புக்கொண்டு, கோயிலுக்குச் சென்று சாமியைப் பார்த்து வேண்டிக் கொண்டான்

''ஆண்டவனே! எங்களைக் காப்பாற்று. நாங்கள் ஏழைகள், எங்கள் ஆடுகள் ஆற்றைத் தாண்டிக்கொண்டு போகும் வரை, ஆற்றில் வெள்ளம் வராமல் பார்த்துக் கொள். பத்து ஆடுகள் உன் கோயிலுக்கு விடுகிறேன்.''

இப்படி அவன் அந்தச் சாமியைப் பார்த்து உரக்கச் சொல்லிவிட்டு வந்தான். இதைக் கேட்ட அவனுடைய மனைவிக்கு அதிர்ச்சி ஏற்பட்டுவிட்டது. கணவனைப் பார்த்துக் கேட்டாள்.

''என்னங்க, இப்படிச் சொல்லிவிட்டீர்களே! சாமிக்குப் பத்து ஆடுகள் தருகிறேன் என்று; ஓர் ஆடு என்ன விலை ஆகிறது! பத்து ஆடுகள் என்றால், எவ்வளவோ நமக்கு நட்டம் ஆகிவிடுமே!''

மனைவி இவ்வாறு சொல்வதைக் கேட்ட அவன் மனைவியின் அருகில் வந்தான். அவளிடம் மிக மிக இரகசியமாகப் பேசினான். காதோடு காதாகச் சொன்னான். அஃதாவது கோயிலில் இருக்கும் சாமிக்குக் கேட்காதபடி, ''பத்து ஆடுகளையும் கொடுத்துவிடுவேனோ? சாமிக்கு

அப்படிச் சொன்னேன். ஆற்றைத் தாண்டிய பிறகு ஏமாற்றிவிடமாட்டேனா?''

இவ்வாறு சொன்ன பிறகு, மனைவி கணவன் சாமார்த்தியத்தை நினைத்து மகிழ்ந்துகொண்டாளாம். நாம் முன்பு பேசிய சாமியாரின் வஞ்சமனத்தின் வரிசையில் வருகின்றவனே இந்த ஆட்டுக்காரனுமாவான்.

நிலம், நீர், தீ, காற்று, விண் என்று பேசப்படுகின்ற ஐந்தும் இயற்கையின் கூறுபாடுகள் - ஐந்து பூதங்களாகும். இந்த ஐந்தினாலும் ஆனதுதான் உடம்பின் அமைப்பு. இவைகள் அறியாத நிகழ்ச்சியில்லை. எனவே நாம் செய்யும் அனைத்தும் அவைகளுக்குந் தெரியுமன்றோ?

வஞ்சகமான செயல் செய்பவனுக்கு இது புரியாமல் போயிற்றே. 'படிற்றொழுக்கம்' செய்கின்றானே! யாருக்கும் தெரியாதென்று எண்ணி நடந்து கொள்ளுகின்றானே! வஞ்சமனத்தான் என்று குறிப்பிட்ட ஆசிரியரின் கருத்தில் பலப்பல ஆழ்ந்த எண்ணங்கள் பொதிந்துகிடக்கின்றன.

உள்ளத்தில் சிற்றின்ப எண்ணம் தலைவிரித்தாட அதனையும் மறைத்திருப்பதாக எண்ணுகின்றான். தான் செய்கின்ற கள்ளச் செய்கையினைப் பிறர் அறியக்கூடாது என்று நினைக்கின்றான்.

இவனுடைய செய்கைகளையெல்லாம் அவன அறியாமலே புலன்கள் அறிந்துகொண்டு சிரிக்கின்றனவென்பதைத் தான், அகத்தே நகும்' என்று சுருக்கமாகக் குறிக்கின்றார் ஆசிரியர். இதோ குறட்பா பேசுகின்றது:

> வஞ்ச மனத்தான் படிற்று ஒழுக்கம் பூதங்கள்
> ஐந்தும் அகத்தே நகும்.

நகைத்து மகிழ்தல் என்பது எல்லா நேரங்களிலுமே மாசற்ற உள்ளக்கிடக்கையினைக் காட்டிவிடுதல் ஆகாது, அச்

சிரிப்பில் அடங்கிக்கிடக்கின்ற புதைபொருளினையும் கண்டறிதல் வேண்டுமன்றோ?

**ஊர் சிரிப்பு**

பிறர் அறியாமல் தவறு செய்கின்றவனைக் காணுகின்ற போது மற்றவர்களுக்குச் சிரிப்பு வருவது இயற்கையேதான்! ஒழுக்கக்கேடான செயல்களை எப்போதும் மறைத்தே செய்கிறார்கள். ஒரு சிலரைக் கண்டால் ஊரே சிரிக்கும் என்று கூறுகிறார் ஆசிரியர் வள்ளுவனார். 'ஊர் சிரிக்கிறதே' என்று நடைமுறையில் இக் காலத்தில் பேசப்படுவதையும் நாம் காணுகின்றோம்.

யாரைப் பார்த்து ஊர் சிரிக்கிறது? கள்குடியர்களைப் பார்த்து ஊரே சிரிக்குமாம். மதிமயக்கும் தகாதனவற்றை உட்கொள்ளும் அனைவரையும் பார்த்து ஊர் மக்கள் சிரிப்பார்கள் என்று கூறுகின்றார். நகைச்சுவையின் கருத்தாகக் கொண்டு நயமானதோர் உண்மையினை ஆசிரியர் உலகுக்கு எடுத்துக்காட்டுகின்றார்.

அறிவு மயங்கி, மதி கெட்ட குடிகாரன் என்ன பேசுகின்றோம் என்பதே அறியாமல் பேசிவிடுகின்றான். அந்தோ! குடியில் மயங்கி மதி கெட்டு நிற்பவன் எதிரில் இருப்பது தூண் என்பதைக் கூட மறந்து அவன் கண்களுக்கு மனித உருவமாகத் தென்பட்டு, "சிற்றப்பா! எப்போது, வந்தீர்கள்!" என்று கேட்பான். இன்னும் அவன் பேசுகின்ற பேச்சுக்களும் செய்கின்ற செயல்களும் சொல்லில் அடங்கா.

கள் குடிப்பவன் மறைவாக இருந்து குடிக்கின்றான். குடித்து அறிவு மயங்கிச் சோர்ந்து கிடக்கின்றான். இவனுக்கு இதே வேலை போல இருந்துவிடுகின்றது! "கள் ஒற்றிக் கண் சாய்பவர்" என்று குறட்பா முடிந்துவிடுகிறது. 'ஒற்றி' என்பது மறைந்து செய்வதையும், 'கண்

சாய்பவர்' என்பது அறிவு மயங்கிக்கிடப்பதையும் குறித்து விடுகின்றன.

இப்படிப்பட்ட குடிகாரர்களைப் பார்த்து, ஒருவர் இருவர் சிரிப்பர் என்று சொல்லித் திருவள்ளுவர் நிறுத்தி விடவில்லை. இத்தகையவர்களைக் கண்டு ஊர் மக்கள் அனைவருமே சிரிப்பார்கள் என்று மிகமிக இழிவாகக் கூறி விடுகிறார். 'எஞ்ஞான்றும்' எக்காலத்திலும் இவர்களைக் கண்டு ஊர் மக்கள் எள்ளி நகையாடுவர் என்பதாகும்.

> உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
> கள்ஒற்றிக் கண்சாய் பவர்.

குடித்திருப்பவன் தனது செயலினைப் பிறர் அறியக் கூடாது என்று மறைத்து வைத்திருந்தாலும் ஊர் மக்கள் எப்படியும் தெரிந்துகொள்ளுவார்களாம். 'உள் ஒற்றி உள்ளூர் நகப்படுவர்' என்று கூறினார்.

அறிவு மயங்கி இருக்கின்றான் என்னும் காரணத்தைப் புரிந்துகொண்டு மக்கள் சிரிப்பார்கள் என்பதாம். இங்கே ஆசிரியர் குறித்துக் காட்டுகின்ற நகைப்பு மிகவும் கருத்துச் செறிவும் உலக உண்மை இலக்கணமும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்றதென்பது வெளிப்படையாகும்.

நகுதல் என்பது மறைபொருளான பல உண்மை களையும் குறித்துக் காட்டும் இயல்புள்ளதென்பதை அனுபவத்தில் காணுகின்றோம். வள்ளுவர் உலகம் இவ்வுண் மையைப் பல கோணங்களில் நின்று நமக்கு அறிவுறுத்து கின்றது. நகைப்பு என்பது ஆண் பெண் இருபாலாருக்கும் ஒப்ப முடிந்ததேயாகும். மக்கள் பிறப்புக்கே சிறப்பாக அமைந்த குணம் நகைத்தல் என்னும் சிரிக்கும் பண்பாகும். ஏன்? விலங்கினங்கட்குச் சிரிக்கத் தெரியாதன்றோ? முடியாதன்றோ?

**பெண்கள் :**

ஆண்கள் நகைத்து மகிழ்வதற்கும் பெண்கள் நகைப்புக் கும் வேறுபாடு உண்டு. அளவோடும் குறிப்போடும் நகைத்

தல் மகளிர்க்கு இயல்பாக இருக்க வேண்டிய உயர் குண மன்றோ? ஆசிரியர் வள்ளுவனார் பெண்கள் நகைத்தல் - சிரித்தல்-என்பதைப்பற்றி மிகமிக நயமாகவும் உட்பொருள் சிறப்புடனும் கூறுகின்றார்.

நகைப்பு என்பது உள்ளத்தில் உள்ளதை வெளிப்படு துங் கருவி என்பது பொது விதி. இப்பொது விதியின் கருத்தோடு காணுகின்றபோது பெண்கள் நகைப்பதில் மிக ஆழமான உண்மைகள் அடங்கிக்கிடக்கின்றன என்பது முற்றிலும் உண்மையாகும். புரிந்துகொள்ள முடியாத சிரிப்புக்கள் பல இருக்கின்றன; நாம் பழக்கத்தில் கண்டு வருவதேயாகும்.

ஒரு சிலர் நம்மைப் பார்க்கும்போது ஏதோ நினைத்துக் கொண்டு சிரிப்பார்கள். உடனே நாம் 'ஏன் சிரிக்கின்றீர் கள்?' என்று கேட்கின்றோம். அதற்கு அவர் 'ஒன்று மில்லை' என்று சொல்லுவார். இருந்தாலும் நாம் விட மாட்டோம். சிரித்ததற்குக் காரணம் சொல்லி நாம் கேட்கும்வரை நமக்கு மனம் அமைதிகொள்ளாது. ஏன்?

சிரிப்பு என்பது அத்தகைய ஆழமான குறிப்புகளைக் கொண்டதன்றோ? பெண்கள் சிரித்தல் பெருங் குறிப்பு களை உணர்த்துவதாக அமைந்துவிடுகின்றது. ஓர் ஆண் மற்றோர் ஆணைப் பார்த்துச் சிரிப்பதால் உண்டாகின்ற நிலையைவிட ஒரு பெண் ஓர் ஆணைப் பார்த்துச் சிரிப்பதில் மிகமிக ஆழ்ந்த எண்ணங்கள் உண்டு என்பதை ஆசிரியர் வள்ளுவனார் பல இடங்களில் சுட்டிக்காட்டுகின்றார்.

'தன்னுடைய உள்ளத்திலுள்ள மறைபொருளான பெரும் எண்ணமொன்றினை எளிதான புன்முறுவலென் னும் நகைக் குறிப்பினால் ஒரு பெண் உணர்த்தி விடுகின் றாள்' என்று ஆசிரியர் கூறுகின்றார்.

பெண்கள் நகைத்தல் - சிரித்தல் - என்பது அளவோடு இருத்தல் வேண்டும். ஒரு பெண் நகைத்தாள்; புன்முறுவல்

செய்தாள். அப்படி அவள் செய்தது மிக இயல்பானது என்று நடைமுறைப் பழக்கத்தில் பேசுகின்றார்களே, அப்படியானதாகக் கருதி இருந்துவிட முடியுமா? இல்லை என்கிறார் ஆசிரியர் வள்ளுவனார்.

அவள் காட்டிய நகைக்குறிப்பில் உள்ளடங்கிய பெரும் உண்மையொன்று அடங்கி இருக்கின்றதாம். அவ்வுண்மை வெளிப்படையாகவும் தெரியாதாம். அந்த நகைக் குறிப்பிலிருந்து அதனைப் புரிந்துகொள்ளவேண்டுமாம். இதற்கு அழகான உவமை யொன்று காட்டப்படுகின்றது.

அரும்பு இன்னும் மலரவில்லை; ஆம், மலராத அரும்பில் மணமேது? மலரில் மணமே இல்லை என்று சொல்லி விட முடியுமா? எப்படிச் சொல்ல முடியும்? மணம் முகிழ்ப்பாக இருக்கின்ற அரும்புக்குள் இருக்கத்தான் செய்கிறது. மணம் இருக்கிறதென்பது உறுதிதான்; உண்மைதான். ஆனால் அரும்பாக இருந்தால் மணம் வெளிக்குத் தெரியுமாறு வீசவில்லை. அருமையான உவமையினால் ஆசிரியர் பெண்ணின் நகைக் குறிப்பினை விளக்க வருகின்றார்.

'முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல்'

என்ற சொற்களைக் கொண்டு குறட்பா வருகின்றது. 'நாற்றம்' என்பது நல்ல மணம் என்பதாகும். மணம் அந்த அரும்பு முகிழ்த்திருப்பதற்குள் இருக்கின்றது. அத்தகைய மறைபொருளொன்று அப்பெண் நகைக்கின்ற தோற்றத்தில் அடங்கிக்கிடக்கின்றதாம்.

'நகுதல்' என்பது எத்தகைய வன்மை நிறைந்தது என்றுகூடக் குறிப்பிட்டுப் பேசலாம். அப் பெண்ணின் உள்ளத்தில் ஏதோ ஓர் எண்ணம் இருக்கின்றது. அவ்வெண்ணத்தினை அவள் வெளியிட்டுச் சொல்ல விரும்பவில்லை.

புன்முறுவல் காட்டி நகைக்கின்றாள். ஆம்! அந்த நகைப்பு அவள் உள்ளத்திலிருக்கும் அளந்து பார்க்க முடி

யாத இன்ப எண்ணங்களைக் காட்டிவிட்டதே! அப்படிப் பட்ட நகைப்பினை ஒரு குறட்பா எடுத்துக்காட்டுகிறது.

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளது ஒன்(று) உண்டு.

உள்ளத்தில் உள்ள எண்ணத்தினை மறைப்பது போல மறைத்துக் காட்டுகிறது அந்த நகைப்பு என்று தோன்றி னால் அந்த நகைப்பினால் அவள் உள்ளத்தில் கொண்டுள்ள இன்ப வேக எண்ணத்தினையும் அந்த நகைப்பு காட்டி விடுகின்றது என்று ஆசிரியர் எடுத்துரைப்பது மிகவும் ஆழ்ந்த பொருள் தாங்கிக்கிடக்கின்ற தென்பது உண்மையிலும் உண்மையாகும்.

அரும்பு முகிழ்த்திருப்பது நகைப்பையும், அரும்புக்குள் இருக்கும் மணம் அவள் உள்ளத்திலிருக்கும் இன்ப உணர்ச்சி யினையும் காட்டி நின்றன. நகைச்சுவை தருகின்ற நற் பயன்களுள் இதுவும் ஒன்று போலும்!

நூல்கள்:

ஆசிரியர் திருவள்ளுவர் நமக்கு அளித்துள்ள ஒப்புயர் வற்ற குறட்பாக்களின் ஆழ்ந்த எண்ணக் கருத்துகளைப் பன்முறை சிந்தித்துப் பார்க்கும்போது அறிவுக்கேற்ற தலைசிறந்த உண்மைகள் புலப்பட்டே தீரும்.

நூல்களை இரண்டு வகைகளாகப் பிரித்துக்கொள் ளுதல் வேண்டும். ஒருவகை சாதாரண நூல்களாகும்; மற்றவகை ஆழ்ந்த பொருள் கொண்டவைகளாகும்.

முதல் வகையான நூல்களை ஒருமுறை படித்தாலே போதும்; கருத்துகள் எளிமையாகப் புரிந்துவிடும். எடுத் துக்காட்டாக, கதை நூல்கள், வரலாற்று நூல்கள், வாழ்க்கை வரலாறுகள் போன்றவைகளை நாம் ஒருமுறை படித்துப் பார்க்கும் போதே கருத்துகள் புலனாகிவிடும்.

மற்ற வகையான நூல்கள் அப்படிப்பட்டவைகள் அல்ல. பன்முறையும் சிந்தித்துப் பார்த்து உணர்ந்துகொள்ளுதல் வேண்டும். இவைதான் மெய்ப்பொருள் நூல்கள், வாழ்க்கையின் உண்மை நூல்கள் எனப்படுபவைகளாகும். இத்தகைய நூல்களைப் படித்துப் பார்த்து உரைகளும் கருத்துகளும் விளங்கிவிட்டன என்று மட்டும் இருந்துவிட்டால் போதாது. உலக அனுபவ உண்மைகளுடன் ஆழ்ந்து சிந்தனை செய்து அதன் பின்னரே அங்குப் பொதிந்து கிடக்கும் புதை பொருளினைக் கண்டு மகிழ்தல் வேண்டும்.

நம் ஆசிரியர் தந்துள்ள குறட்பா முத்துக்கள் அனைத்துமே அவ்வாறு தம்முள் விலை மதிக்க முடியாத எக்காலத்திற்கும் ஒத்துவரும் மனித வாழ்க்கையின் இன்ப முத்துக்கள் கொண்டவை என்றே கூறுதல் வேண்டும்.

நிலம்:

நிலத்தில் உழுது பயிரிடுபவனுக்கும், ஆழ்ந்து பலஅடிகள் தோண்டிப் பூமிக்குள் செல்பவனுக்கும் வேறுபாடுகளைக் காணுகின்றோம். பயிரிடுகிறவன் அதிக ஆழமாக நிலத்தினை உழவேண்டிய அவசியமில்லை. தேவைக்கேற்ற அளவு நிலத்தினை உழுகின்றான்; பயிரிடுகின்றான். அதனால் வருகின்ற உணவுப் பொருள் அளவோடு கிடைக்கின்றது. உண்ணும் உணவாக இருந்து முடிகின்றது. ஆனால் மற்றோர் உண்மையினை நாம் நன்கு புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

பூமிக்கடியில் ஆயிரக்கணக்கான அடிகள் ஆழத்தில் அல்லது நூற்றுக்கணக்கான அடிகள்ஆழத்தில் செல்லுகின்றவன் எதைக் கண்டுபிடிக்கின்றான்? நமக்குத் தெரியாததன்று. விலை மதிக்க முடியாத என்றும் நிலைத்து நிற்கின்ற தங்கத்தை வெட்டி எடுக்கின்றான். இன்னும் இது போன்ற உயர்ந்த பொருள்களைக் காணுகின்றான். பூமியில் ஐந்தடி ஆழம், பத்தடி ஆழத்தில் செல்பவனுக்குத் தங்கம் கிடைக்குமா? கிடைக்காதே!

அதுவேபோல, உலக ஆசான் தந்துள்ள அறிவுரைகளின் ஆழ்ந்த கருத்துகளை ஊன்றிப்பார்க்கின்றபோது மிகச்சிறந்த உண்மைகள் புலப்படுகின்றன வென்பது வெள்ளிடை மலையாகும்.

உலகின் இயற்கை உண்மைகளை நம் கண் முன்னே நிறுத்திக்கொண்டு சிந்தித்து ஆராய்தல் இன்றியமையாததாகும். உலகில் மிகப் பெரிய பகுதியினை அடக்கிக்கொண்டிருப்பது கடல் நீர்ப்பரப்பு அன்றோ? ஆழமும் அகலமும் கொண்டது கடல்தானே?

**கடல்:**

மீன் பிடிப்பவர்கள் கடலின் அதிகமான ஆழத்திற்குச் செல்ல வேண்டியதில்லைதான். வலை வீசி மீன் பிடிக்கின்றார்கள். மீன்கள் கிடைக்கின்றன. விலைக்கு விற்கிறார்கள். மீனும் உணவாக முடிகின்றது. அளவுக்கேற்ற பணமும் கிடைக்கின்றது.

அதே கடலில் ஆழ்ந்து அடித்தளத்தில் செல்லுகின்ற ஒருவனுக்கு என்ன கிடைக்கின்றது? அவன் எதைக்கொண்டு வரமுடிகிறது. விலை மதிக்க முடியாத முத்துக்களைக் கொண்டுவருகின்றான். உலகம் உள்ளளவும் பெருஞ் சிறப்புடன் மேன்மை தாங்கி நிற்பது முத்தன்றோ?

ஆழமாக மூழ்கியவன் முத்துக்களைக் காணுகின்றான். மேற்பரப்பளவிலேயே வலை வீசியவன் மீன்களைக் கண்டான். ஆ! என்னே உலக இயற்கை! பேராசிரியரின் கருத்துரைகளில் ஆழ்ந்து மூழ்கி உயர்ந்த உண்மைகளைக் கண்டு மகிழ்தல் நமது கடமை யன்றோ!

நகைச்சுவையென்பது எப்போதும் இலை மறைகாய் போல் இருப்பதாகும். எடுத்துப் பேசும்போதும் நகைச்சுவை கொண்டுள்ள கருத்துகள் அங்ஙனமே கூறப்படுதல் வேண்டும். முற்றும் வெளிப்படக் கருத்துகளை வெளியிட்டு விளக்கப்படுவது நகைச்சுவை யாகாது. நயமாகவும்

பக்குவமாகவும், மறைவாகவும் இருக்குமாறு உணர்த்திக் கருத்துகளைப் புரிந்து நமக்கு ஏற்படுவதே நகைச்சுவையின் இலக்கணமாகும்.

பிரிந்து சென்ற காதலன் குறித்த காலத்தில் திரும்பி வரவில்லை. 'மழைக் காலத்திற்கு முன் வந்துவிடுவேன்' என்று சொல்லிச் சென்றான். மழைக்காலம் வந்துவிட்டது. மழையும் பெய்தது. நாயகிக்கு ஒன்றும் புரியவில்லை. குறித்த காலத்தில் தலைவன் வராமல் இருந்துவிட்டானே என்று கடிந்துகொண்டாள். வருத்தம் மேலிட்டவளானாள்.

தோழி இதனைக் குறிப்பால் உணர்ந்து கொண்டாள். தலைவியைப் பார்த்து, ''ஏனம்மா! வருந்துகிறீர்கள். அவரைக் கடிந்துகொள்ளுகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

அதற்குத் தலைவி, ''தலைவர் பொய் சொல்லி ஏமாற்றி விட்டார். அவர் மழைக்காலம் வருவதற்கு முன் வருவதாகச் சொல்லிச் சென்றார்; வரவில்லையே! மழைக் காலமும் வந்து விட்டது! மழையும் பெய்கிறதே! உனக்குத் தெரியவில்லையா?'' என்றாள். உடனே தோழி நயமாகக் கூறுகிறாள்:

''அம்மா! தலைவர் ஒருகாலும் பொய் சொல்ல மாட்டார்; சொன்னபடியே வந்து விடுவார்; இன்னும் மழைக் காலம் வரவில்லையே அம்மா! இப்போது பெய்கின்ற மழை இந்தப் பருவ காலத்து மழை யில்லையே! சென்ற ஆண்டில் பெய்ய வேண்டிய பருவ மழை முழுதும் பெய்யாமல் விட்டுப் போயிருந்து எஞ்சி இருந்த மழைதான் இப்போது பெய்கிறது.

இதை இந்த ஆண்டின் பருவ மழையென்று நீங்கள் ஏமாந்து போனீர்கள்! இந்த ஆண்டின் மழைக்காலம் இன்னும் வரவில்லை யம்மா! அக் காலம் வருவதற்கு முன் தலைவர் சொன்னபடியே வந்து விடுவார். வருத்தப்படாதீர்கள்; அவரைக் கடிந்து கொள்ளாதீர்கள்.''

இவ்வாறு தோழி சொல்லி முடித்தவுடன் தலைவிக்கு எப்படி இருந்திருக்கும்? தோழி சொல்லியது உண்மையா பொய்யா என்பது சிந்திக்க வேண்டிய பெரிய கருத்தன்று. ஆனால் அவள் பக்குவமாகக் கூறி முடித்த கருத்தில் நயமும் நகைச்சுவையும் எவ்வாறு படர்ந்து மிளிர்கின்றன வென்று காணும்போது வாழ்க்கையில் நகைச்சுவையின்பத்திற்கு உள்ள நுண்ணிய இடம் உணர்ந்துகொள்ள முடிகிறது

நகை, நகல், நகைப்பு, நகுதல் என்பன போன்ற சொற்களை வெளிப்படையாகவே கூறி நகைச்சுவையான இடங்களையும் அதனைச் சேர்ந்த கருத்துகளையும், விளக்கங்களையும் ஆசிரியர் தருவதோடல்லாமல் வேறு பல இடங்களிலும் நகைச்சுவைக் கருத்துகளை அருமையாக அமைத்துக் காட்டுகிறார்.

"பேசாமல் மரம் போல் நிற்கின்றானே!" என்று பேசுகிற பேச்சினை நாம் நடைமுறையில் பல இடங்களில் கேட்டு வருகின்றோம். மனிதன் ஏன் அப்படிச் சொல்லப் படுகின்றான்? மரம் என்று அழைக்கப்படுகின்றான்? பேச வேண்டிய இடத்தில் பேசாமல் நிற்கின்றானே என்பதனாலன்றோ? வெளிப்படையாகவே உண்மைகளைக் கூறுகின்ற வள்ளுவனார் மறை பொருளாகவும் கண்டித்து மெய்யுரை தருகின்றார்.

**விலங்கினம்:**

உணவு மக்களுக்கு இன்றியமையாத முதன்மையானது தான். எந்த அளவு மனிதன் உணவினை உட்கொள்ள வேண்டும் என்பது தெரிந்துகொள்ள வேண்டிய கருத்து. அதனை விளக்க வேண்டிய இடத்திற்கு வருகின்றார் ஆசிரியர்.

இன்ப வாழ்க்கைக்குத்தான் உணவு சாப்பிடுகின்றோம்; துன்பம் வருவதற்கா உணவு உண்ணுகின்றோம்? இல்லையே. எப்படி உணவினை உண்ண வேண்டும் என்று

குறிப்பிடுகின்றபோது பொதுவாக ஒரு குறிப்பினை ஆசிரியர் கூறுகின்றார்.

எப்போதும் குறைந்த அளவே உணவுண்ண வேண்டும். சிலரைப் பார்க்கிறோம்; ஏன் பலரென்றும் கூறுவதில் தவறில்லைதான்; நன்றாக வேண்டிய மட்டும் - அஃதாவது எவ்வளவு சாப்பிட முடியுமோ அவ்வளவும்-சாப்பிட்டு இனி முடியாது என்று உணர்ந்த பிறகுதான் 'போதும்' என்று எழுந்திருக்கிறார்கள்! இப்படிப்பட்டவர்களை என்ன வென்று கூறுவது? இவர்களை என்ன பெயர் வைத்து அழைப்பது?

குறைவாக உணவு உண்பவர்களைத்தான் மனிதர்கள் என்று கூற வேண்டும் என்பதும், அளவு கடந்து விருப்பம் போல் சாப்பிடுகிறவர்களை மக்கள் கணக்கில் வைத்துப் பேசக்கூடாது என்பதும் ஆசிரியர் வள்ளுவனாரின் எண்ண மாகும். இதனை ஆசிரியர் வெளிப்படையாகக் கூறவும் விரும்பவில்லை.

அளவு மீறிச் சாப்பிடுகிறவர்களைக் கண்டிக்கவும் செய் கிறார். விலங்கினங்கள் (மிருகக் கூட்டம்) என்பதி சேர்க்க வேண்டியவர்களென்றே மிக அதிகமாக உண்ணு கிறவர்களைக் குறிப்பிட விரும்புகிறார். ஆனால் நேரிடை யாக 'விலங்கு' (மிருகம்) என்று கூறவில்லை. நாம் நன்கு சிந்தித்துப் புரிந்துகொள்ள வேண்டிய இடம்.

விலங்கினங்களும் அவை போன்ற மற்ற பிறவிகளும் அளவுடன் சாப்பிடுவதில்லை; அவைகள் சாப்பிடுவதை 'இரை' என்ற சொல்லினால் சொல்லுவது மரபு. பாம்பு இரை தேடுகிறது; இரை தின்னுகிறது என்று சொல்லு வோம்; பறவைகள் இரை தின்னுகின்றன என்றும் கூறுவோம்.

அந்நியர்கள் ஆட்சியில் - அதாவது வெள்ளையர்கள் ஆட்சியில்-எண்ணிறந்த வெள்ளையர்கள் எங்கும் நமது தேசத்தில் வேலைபார்த்து வந்தார்கள். சாப்பிடுவதைப்

பற்றி விளையாட்டாகவும், கேலியாகவும் பேசுவதுண்டு. நம்மவர்களில் பலர் கேட்டும் இருக்கலாம்.

வெள்ளையர்களைத் துரைகள் என்று கூப்பிடுவது வழக்கமாகி விட்டது; வெள்ளையர் வீட்டில் பணியாட்கள் பலர் இருப்பார்கள். பெரும்பாலும் வெள்ளையர்கள் மனைவிமார்களுடன் வர ஆரம்பிக்ரவில்லை; பின்னரே அவ்வாறு வந்தனர்.

வெள்ளையரின் பணியாட்களில் முதலிடம் வகிக்கும் முதன்மையானவர் சமையல்காரர். அவருக்கு ஆங்கிலத்தில் 'பட்லர்' என்று பெயர். அவரிடம், 'துரை என்ன செய்கிறார்?' என்று கேட்டால், 'சாப்பிடுகிருர்' என்று சொல்லமாட்டார். 'துரை தீனி தின்கிறார்' என்று மிக இயல்பாகச் சொல்லுவார்.

இதற்கு என்ன காரணம் என்பது நமக்குத் தெரியாது தான்! ஆனால் வெள்ளையர்கள் சாப்பிடுகிற நேரம் 'அதிகம்' என்பது மட்டும் உண்மை. 'அவசரம், அவசரமாகச் சாப்பிட்டுவிட்டு எழுந்திருத்தல் வெள்ளையர்களுடைய பழக்கமாக எப்போதும் இல்லை.

அளவு கடந்து அதிகமாகச் சாப்பிடுகிறவர்களை ஆசிரியர் வள்ளுவனார் உணவு சாப்பிடுகிறார்கள் என்று கூறவில்லை. அப்படி உண்ணுகிறவர்கள் உண்ணும் பொருளை 'இரை' என்று பெயர் வைத்து அழைக்கின்றார்

'இரை' என்பது மக்கள் சாப்பிடும் உணவுக்கு வைக்கப் பட்டழைக்கும் பெயரன்று என்பது நாம் அறிந்ததே. மக்கட் பிறவிக்குக் கீழான பிறவிகள் உண்பதைத்தான் 'இரை' என்று சொல்லுவது வழக்கம். எனவே ஒருவனை விலங்கு (மிருகம்) என்று சொன்னால் வருத்தப்படுவான்

'அதிகமாகச் சர்ப்பிடாதே' என்று ஆசையோடு சாப்பிடுகிறவனைக் கண்டித்தாலும் வருந்துவான். பின்னர் எப்படித்தான் அப்படிப்பட்டவர்களைத் திருத்துவது.

வள்ளுவர் கூறுகின்ற முறை நயமாகவும் அமைதியான நகைச்சுவை பொதிந்ததாகவும் காட்சியளிக்கின்றது. ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும்.

''குறைவாக உண்ணுவதுதான் நல்லதென்று உணர்ந்து சாப்பிடுபவனிடத்தில் இன்பம் மிகுதிப்பட்டு இருப்பது போல், மிகப் பெரிய இரையை விழுங்கி மகிழ்பவனிடத்தில் நோய் நீங்காதிருக்கும்''—இக் கருத்து நிறைந்து நிற்கும் குறட்பாவினைக் காண்போம்:

இழிவறிந்து உண்பான்கண் இன்பம் போல்நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய்.

குறைந்த அளவே சாப்பிடுதல் வேண்டும் என்னும் மக்கட் பண்பாட்டினை உணர்ந்து சாப்பிடுகிறவனை, 'இழிவறிந்து உண்பவன்' என்று சொன்னார். அப்படிப்பட்டவனைக் குறிக்கும் போது 'உண்பான்' ஒன்று சொல்லிவைத்தார்.

மிகுதி (கழி) யாகச் சாப்பிடுகிறவனை நேரிடையாக, விலங்கினத்தான் - என்று கூறாமல் 'இரையான்' என்று சொன்னார். என்னே சொல்லுக்குச் சொல் வேறுபாடு!

அளவுக்கு மீறித் தடித்து பருத்த உடம்புடன் வருகின்ற ஆளைப்பார்த்துச் சிலர், 'பெரிய ஜீவன் வருகிறது என்று கூறிச் சிரிப்பார்கள். 'மனிதன் வரவில்லை' வேறு ஏதோ வருகிறது என்னும் எண்ணம் அவர்கள் சொல்வதில் அமைந் திருக்கின்றது போலும்!

இப்படியான மனித இயல்புகளுக்கு எல்லாம் மூலமாக வும், அறத்தையும் உணர்த்தி, வாழ்க்கை முறையினையும் நிறுத்தி, மக்களையும் திருத்தி அங்கே பக்குவமாக நல்ல நகைச்சுவை இத்தனையும் அடக்கிக் காட்டுவதில் நம் ஸ்ரீ சிரியருக்கு இணை எவரே உளர் என்று கூறுவதைவிட நாம் வேறு யாது சொல்ல வல்லேம்!

நகைச்சுவையினை எடுத்துக்காட்டமட்டும் இக்குறட் பாவினை இங்கு நாம் குறிப்பிடவில்லை, 'மருந்து' என்ற

பகுதியில் இவ் வரிய குறட்பா பேசப்படுகிறது. நோயற்ற வாழ்விற்கு ஆசிரியர் ஒப்பரிய உண்மைகளை நமக்கு இப் பகுதியில் தருகின்றார். அவைகளில் ஒன்றுதான் நாம் மேலே விளக்கித் தந்த குறட்பாவுமாகும்.

உண்ணும் உணவினைக் குறைந்த அளவில் உண்ணுகின்ற முறையினால் வருகின்ற இன்பம் மிகச் சிறந்ததென்பதும், மிகுதியாக உண்கின்ற பழக்கம் நோய்க்கு முதற் காரணம் என்பதும் வெள்ளிடை மலை. மேலும் ஒன்று; அளவு கடந்த புசிப்பு விலங்கின் குணத்தைத் தரும் என்பதும் குறிப்பு.

நகைத்தல் என்பது இன்பத்திலும் மகிழ்ச்சியிலும்தான் உண்டாவது என்று மட்டும் கொள்ளுதல் இயற்கை உண்மைக்குப் பொருந்தாததாகும். இன்பமும் மகிழ்ச்சியும் இல்லாத காலத்திலும் நகுதல் ஏற்படும். இதனை நாம் உலக வாழ்க்கையில் கண் கூடாகக் கண்டு வருகின்றோம்.

கொடிய துன்பம் நேரிட்ட காலத்திலும் சிரிப்பு வருதல் உண்டு. அதற்குப் பொருள் வேறுபட்டதாகும். இன்னும் சொல்லப்போனால் கடுங்கோபத்திலும் நகைப்பதைக் காணுகிறோம்.

சில நேரங்களில் ஆண்கள் சிரிப்பதற்கும் பெண் சிரிப்பதற்கும் பெருத்த வேறுபாடு உண்டாகிவிடுகின்றது. ஓர் ஆண்மகன் மற்றோர் ஆடவனைப் பார்த்து எள்ளி நகையாடினால் எள்ளப்படுகின்ற ஆண் வருத்தப்பட்டாலும் அவ்வளவு கடுமையாக அவ் வருத்தம் தாக்காமற் போகலாம்.

அதே நேரத்தில் ஆண்மகனை ஒரு பெண் எள்ளி நகையாடுவாளேயானால் அதனைத் தாங்கமுடியாத துன்பமாக ஆண் நினைத்துவிடுகின்றான். இதுவும் ஒரு வகை. கவிச் சக்கரவர்த்தி கம்பர் குறிப்பிடுகின்ற ஓர் இடம்!

## பெண் சிரிப்பு

இலங்கை வேந்தன் இராவணன் போர்க்களத்தில் அவமானமுற்றான். வீரனுக்கு வெட்கம் பொறுக்க முடியாததாகிவிட்டது. வீடு திரும்புகின்றான். அவன் உள்ளத்தில் அப்போது தோன்றிய எண்ணங்கள் எண்ணில. அவைகளில் ஒன்று இலங்கைவேந்தன் வீரவேந்தன் இந்த நிலை அடைந்துவிட்டானே என்பது.

தன்னுடைய படை வீரர்களும் பகைவர்களும் ஏளனமாக நினைத்து நகைப்பார்களே என்கின்ற நினைப்புக்கூட அவனை அவ்வளவு வேதனைப்பட வைக்கவில்லையாம். ''நம்முடைய அவக்கேட்டை நினைத்து ஒரு பெண் சிரித்துவிடுவாளே! நம்மை மிகப் பெரிய வீரன் என்று நினைத்திருக்கச் செய்தோமே! அவள் ஏளனமாகச் சிரித்தால் எப்படித் தாங்குவேன்!'' என்று அவன் உள்ளம் துடியாய்த் துடித்ததாம். யார் அப்பெண்?

அவள்தான் இலங்கைவேந்தன் சிறைப்படுத்தி வைத்திருக்கும் சானகி என்னும் சீதாபிராட்டியாவாள். கம்பர் அழகாகக் குறிக்கின்றார்: ''சானகி நகுவள் என்றே நாணத்தால் சாம்புகின்றான்''—இவ்வாறு நகைப்பின் வகைகளைத் தனிப்படப் பிரித்துணர்ந்து நாம் கண்டாலும் ஆண் ஆழ்ந்தறிய வேண்டிய உண்மைகள் நம்மைக் கவர்ந்து விடுகின்றன.

நமக்குள்ளே நாம் சிரித்துக்கொள்ளவேண்டிய இடமொன்றினை ஆசிரியர் வள்ளுவனார் நமக்கு எடுத்துக் காட்டுகின்றார். அதனைத் துன்பத்தில் சிரிக்க வேண்டிய சிரிப்பு என்று நாம் புரிந்துகொள்ளுதல் வேண்டும். துன்பத்தில் ஏன் சிரிக்க வேண்டும் என்று கேட்பது உண்மையான வினாத்தான். துன்பத்தில் சிரிப்பது துன்பத்தினை வரவேற்பதாகாது. அதனைத் தொலைப்பதாகும் என்கிறார்.

**துன்பம் :**

துன்பம் வந்த காலத்தில் அதனைத் தொலைத்து-நீக்கி-இன்பம் பெற வழி செய்தல் அறிவுடைய மக்கள் கடமை யாகும். துன்பம் வருவது எவ்வாறு என்பதும் ஏன் வருகிறது துன்பம் என்பதும் புரிந்துகொள்ளமுடியாத தன்று. அறியாமையினால் ஒருவன் துன்பத்தை வரவழைத்துக் கொள்ளுகிறான். அப்படி வரும் துன்பத்தினை முயன்று போக்கிக்கொள்ளுதல் வேண்டும்.

சிந்தித்துப் பார்க்கும்போது துன்பம் உண்டாவதற்கு நாமே காரணம் என்பது புலனாகும். அறிவில்லாதவன் தனக்குத் தானே துன்பத்தை வரவழைத்துக் கொள்ளுவான் என்று ஆசிரியர் சுருக்கமாகச் சொல்லி நிறுத்திவிடவில்லை. அப்படி அவன் வரவழைத்துக்கொள்ளுகின்ற துன்பம் எப்படிப்பட்டதாக இருக்கும் என்பதனையும் அழகாக எடுத்து விளக்கி விடுகிறார்.

அறிவில்லாத அவன் தனக்குத் தானே வரவழைத்துக் கொள்ளும் கொடுந் துன்பத்தினை அவன் பகைவர்கள்கூட அவனுக்குச் செய்யமுடியாதாம்! அப்படியென்றால் அவன் எவ்வளவு இழிவான புல்லறிவாளனாக இருக்க முடியும்! சிந்தித்துப் பார்த்தல் வேண்டும்.

'புல்லறி வாண்மை' என்னும் பகுதியில் அறிவில்லாதவர்களில் பற்பல கூறுபாடுகளைச் சொல்லிவருகின்ற ஆசிரியர், பகைவர்களும் செய்யமுடியாத துன்பத்தினைத் தாமே தமக்கு வரவழைத்துக்கொள்வார்கள் என்கிறார்.

அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது

ஒருவனுக்குத் துன்பம் உண்டாவதற்குக் காரணம் அவனுடைய பகைவர்கள் என்பது ஒரு வகையில் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய உண்மைதான்.

இங்கே, ஆசிரியர் வள்ளுவனார் குறிப்பாக அமைத்துக் காட்டும் மறை பொருளொன்று அறியக் கிடக்கின்றது. பகைவர்கள் தீங்கு செய்யவேண்டு மென்றால், அதற்குக் காலம் பார்த்துக் காத்திருந்து தக்க நேரம் வந்தபோது தான் செய்வார்கள். ஆனால் புல்லறிவுடைய ஒருவன் தனக்கு எக்காலமும் துன்பத்தையே வரவழைத்துக்கொள் வானாம்.

வறுமைத் துன்பம், பழி, பாவம் முதலியனவற்றைப் பகைவர்கள் எக்காலமும் செய்துகொண்டிருக்க முடியாது. இப்படிப்பட்ட துன்பங்களை அறிவில்லாதவன் தானே வரவழைத்துக்கொள்ளுகின்றான். ஆகையால், பகைவர் களாலும் செய்ய முடியாத பிழையினைத் (துன்பத்தினை) தானே வரவழைத்துக்கொள்கின்றான் என்று நயமாகக் கூறிவைத்தார்.

பகைவர்கள் உண்டாக்குகின்ற தீமை குறிப்பிட்ட ஒரு காலத்தில்தான் உண்டாகும் என்பது மட்டுமன்று; குறிப் பான ஒருவகைத் துன்பமாகத்தான் இருக்கமுடியும். ஆனால் அறிவில்லாதவன் தனக்குத் தானே வரவழைத்துக் கொள்ளுகின்ற துன்பம் எக்காலத்திற்கும் உண்டாவதாகி விடும் என்பது மட்டுமல்லாமல் எல்லா விதமான துன்பங் களாகவும் இருக்கும் என்பதும் குறிப்பால் உணர்த்தப் பட்டது.

ஆதலால்தான் நன்கு ஆராய்ந்தறிந்த உண்மை யினைத் தெளிவுபடுத்தி ஆசிரியர், 'பகைவர்களாலும் செய்ய முடியாத துன்பத்தினை அறிவில்லாதவன் செய்து கொள்ளுகிறான்' என்றார்.

இவ்வாறு காரணங் கண்டு துன்பங்கள் வருவதுண்டு என்றாலும், அறிவும் ஆற்றலும் சிறந்த பண்பாடும் ஆகிய நல்லியல்புகள் கொண்டவர்களுக்கும் துன்பங்கள் வருவ துண்டு. இவைகளுக்குத் துன்பப்படுகின்றவர்கள்தான்

பொறுப்பாளர்கள் என்று சொல்லமுடியாத நிலைமை ஏற்படலாம்.

அவ்வாறு துன்பங்கள் ஏற்படுகின்றபோது அவைகளை இயற்கை என்றுதான் கூறிக்கொள்ளுதல் வேண்டும். ஊழ் வினையால் ஏற்படுபவை என்று சொன்னாலும் தவ றில்லை என்போம். இப்படி நேரிடுகின்ற நிகழ்ச்சிகளை வாழ்க்கையில் எத்தனையோ கண்டு வருகின்றோம்.

இடுக்கண் :

'துன்பம்' என்ற சொல்லினைச் சொல்லாமல் 'இடுக் கண்' என்ற சொல்லினால் சொல்லப்படும் இடம் ஆழ்ந்த கருத்தொன்றினை விளக்குகின்றது. தாங்க முடியாத துன்பம் உண்டாகின்ற காலத்தில் கண் சுருங்கி-கண்களைச் சுருக்கி—வேதனைப்படுவ துண்டு. அதனால்தான் கூர்மை யான துன்பத்தினை இடுக்கண் என்கிறார்.

அரிய உறுப்பு கண்ணன்றோ? உண்மைகளை எளிதாக உணர்த்துவது கண்தானே! கண்களை வைத்துச் சொல்லு கிறபோது ஆசிரியர், வன்கண், புன்கண், தறுகண், உண் கண், இன் கண் என்று இவ்வாறெல்லாம் பல நயங்களை உணர்த்துகின்றார்.

இங்ஙனம், ஒருவருக்குத் துன்பம் இயற்கையாக வந்த போது அத் துன்பத்தினின்றும் எவ்வாறு தப்பித்துக் கொண்டு சமாளித்தல் வேண்டும் என்பதற்கு வழி சொல்லித் தருகின்றார். அதற்கான குறட்பா வொன்று அமைக்கப்பட்டுள்ளது. அக் குறட்பாவில்தான் நகைத்தல் என்ற கருத்தும் கூறப்படுகிறது.

"இடுக்கண் வருங்கால் நகுக" என்று அக் குறட்பா ஆரம்பமாகின்றது. இயல்பாகவே துன்பம் வருகின்றது என்றால் மனம் தளர்ந்து போகாதே என்று ஆசிரியர் சொல்லி நிறுத்திவிடவில்லை. 'நகுக' என்று கூறினார். 'சிரிக்கவும்' என்பதுதான் அதற்குண்டான பொருளாகும்.

துன்பம் வந்தபோது சிரித்துக்கொண்டிருந்தால் என்ன நிலைமை ஏற்படும்? ஆழ்ந்து மூழ்கிய அவலநிலை ஏற்பட்டு விடுமே!

எனவேதான் துன்பத்திற்கு இரையாகி விடாமல் இருக்க, 'நகுக' என்றார். நகைத்தல் எவ்வளவு மிகப் பெரிய உதவியாக இருக்கின்றதென்பதனை நாம் அறிதல் வேண்டும். ஒருவனுக்கு இடுக்கண் வந்தபோது அவன் அறிவினை இழந்துவிடுபவனாகின்றான். ஏன்? இடுக்கண் முதலில் அறிவினைக் கவ்விக்கொள்ளுகிறது. மேற்கொண்டு அவன் சிந்தித்துச் செயல்பட முடியாதபடி செய்து விடுகிறது. மன எழுச்சி தடைப்படுத்தப்பட்டு விடுகிறது. இப்படிப்பட்ட இடையூறுகளைத் தடுத்து நிறுத்தவே 'உள் மகிழ்தல் வேண்டும்' என்றார் ஆசிரியர்.

துன்பம் நீங்கிய பிறகுதானே சிரித்து மகிழ்தல் வேண்டும். துன்பம் வருகின்றபோதே 'நகுக' என்று கூறுகிறாரே என்பது போன்ற ஐயப்பாடு நமக்குத் தோன்றுதல் இயல்புதான்! துன்பத்தினைக் கண்டு உள் மகிழ்வதால் வருகின்ற துன்பம் அவனைத் தாக்குகின்ற அச்சம் குறைக்கப் படுகிறதென்பது குறிப்பு.

ஆதலால்தான் 'நகுக' என்று உறுதிப்படுத்திக் கூறுகின்றார். இவ்வாறு உள்மகிழ்தலால் இடுக்கணை எதிர்த்துப் போராடும் ஆற்றல் உண்டாகிவிடுகின்றது. இவ்வாறு நகைத்து மனவெழுச்சி பெற்றவுடன் துன்பம் தொலைக்கப் பட்டு மேலும் மேலும் இன்பம் வருதலால் 'அதனை அடுத் தூர்வது அஃது ஒப்பது இல்' என்பதாக அக்குறட்பா முடிகிறது.

'அதனை' என்று குறிப்பாக நகைத்தல் செய்தலினை உணர்த்தினார். பின்னர் வருகின்ற மகிழ்ச்சிக்கு அளவே இல்லை என்பதை 'அஃது ஒப்பது இல்' என்ற சொற்களினால் அறிகின்றோம். குறட்பா அழகாக அமைந்து கிடக்கின்றது.

*இடுக்கண் வருங்கால் நகுக அதனை*
*அடுத்துஊர்வது அஃதுஒப்பது இல்*

நகைத்து மகிழ்தல் என்பது வாழ்க்கைப் பாதையில் எவ்வளவு இன்றியமையாதது என்பது தெள்ளத்தெளிய உரைக்கப்பட்டது.

எனவே, துன்பத்தினைக் கண்டு நடுங்காமல், மனம் தளராமல், அறிவினைப் பறிகொடுக்காமல் சிறிது உள்ளுக்குள்ளாகவே சிரித்துக்கொண்டு மனவெழுச்சி கொண்டு ஆற்றல் பெற்றுத் துன்பத்தினை விரட்டி வெற்றி பெறுதல் கடமை என்பதனை அறிந்தோம்.

வெகுளிச் சிரிப்பு:

துன்பத்தில் சிரிப்பு வரவேண்டும் என்னும் புதுமை போல வேறுபல அருமையான உண்மைகளை ஆசிரியர் நமக்குத் தருகின்றார். நகுதல் என்னும் அரிய பண்பாட்டினைக் கெடுக்கின்ற ஒன்று உண்டு என்றால் வியப்புடன் சிந்தித்துப் பார்ப்போம்.

மனித வாழ்க்கையில் மிகமிகக் கொடிய குணம் என்பது வெகுளி யாகும். இதனைச் சினம் என்றும், கோபம் என்றும் பலவிதமாகக் கூறுவோம், கோபத்தினை நெருப்பு என்று குறிபிட்டுக் கூறுதல் உலக இயல்பு. ஏனென்றால் தான் தொட்ட பொருள்களை எரித்துச் சாம்பலாக்கிவிடுவது போல, கோபம் எந்த வொருவன் வாழ்க்கையில் குடி கொண்டுள்ளதோ அவனை அழித்தே ஒழித்துவிடும் என்பது கண்கூடு.

ஆதலால்தான் கோபத்தினை அறவே நீக்கப் பக்குவமாக அதனுடன் பழகுதல் வேண்டும் என்றும் கூறப்படும். மக்களுக்குள்ள ஏனைய நல்ல குணங்களை யெல்லாம் கெடுத்துவிடுகின்ற இயல்பு கோபம் என்னும் குணத்திற்கு உண்டு. கோபத்தினைக் கொடிய பகைவன் என்றே ஆசிரியர் வள்ளுவனார் குறிப்பிட்டு விடுகிறார்.

நகைத்து மகிழ்தல் என்னும் அரிய பண்பாட்டினைக் கோபமானது எவ்வாறு அழித்துவிடுகின்றதென்று சுட்டிக் காட்டுகின்றார். ஆதலால் 'நகைத்து மகிழ்தல்' என்னும் பெருமையினைக் காப்பாற்றிப் போற்றிக் காக்க வேண்டியவர்கள் சினத்தினை எங்ஙனம் ஒதுக்க வேண்டும் என்பதனை அறிந்து நடத்தல் வேண்டும். இல்லையென்றால் 'நகை'— சிரித்து மகிழ்தல்-என்னும் ஒன்றினைக் கோபம் கொன்றே விடும் என்று அச்சுறுத்துகிறார் ஆசிரியர். கோபம் நகையினையும் கொன்றுவிடும் என்பதை அழகான முறையில் குறட்பாவொன்று விளக்கிக் காட்டுகின்றது.

கோபம் என்பதனை வெகுளி என்ற பெயரில் ஆசிரியர் அமைக்கின்றார். 'வெகுளாமை' என்றொரு பகுதி திருக்குறளில் கூறப்படுகின்றது. இது கோபத்திற்கு இடங் கொடுக்கக்கூடாது என்பதை விளக்கிக் கூறப்படும் பகுதியாகும். மக்கள் வாழ்க்கையில் கோபமே இல்லாமல் இருக்கலாமா? இருக்க முடியுமா? என்பன போன்ற கேள்விகள் எழுவது இயற்கைதான். இவைகளுக்கும் தக்க விடைகள் கண்டுணர வேண்டியதுதான். இதுவே மெய்யறிவு பெறுவதாகும்.

**துறவிகள் :**

வெகுளாமை (கோபம் கூடாது) என்ற பகுதியினைத் திருவள்ளுவர் 'துறவறம்' என்ற பெரும் பகுதிக்குள் அடக்கிக் கூறுகின்றார். முற்றுந் துறந்த முனிவர்களைப் பற்றித் துறவறம் என்ற பெரும் பகுதி பேசுகின்றது. துறவிகளுக்கு இருக்கவேண்டிய குணங்களெல்லாம் இப் பகுதிக்குள் சொல்லப்படுவதாகும்.

உலகில் பல்வேறு வாழ்க்கையினை மேற்கொண்டிருக்கும் மக்கள் வாழ்கின்றபடியால் துறவறத்தினை மேற்கொண்டுள்ள முனிவர்கள் இருந்து வரவேண்டிய முறைகள் துறவறத்தில் விளக்கமாக விரித்துக் கூறப்படுகின்றன. துற

வறப் பகுதிகளில் கூறப்படும் அனைத்தும் இல்லற வாழ்க்கையில் இருப்பவர்களுக்குப் பொருந்தா என்பதை நன்கு புரிந்துகொள்ளுதல் வேண்டும்.

'அவா அறுத்தல்' என்றோர் அதிகாரம் துறவறத்தில் கூறப்படுகின்றது. இதன் பொருள் எப்பொருளின் மீதும் எள்ளளவும் பற்று இருக்கக்கூடாது என்பதாகும். இது முற்றுந் துறந்த முனிவர்களுக்கே பொருந்துவதாகும். அதுவே போன்று 'தவம்' என்னும் பகுதியும் தவம் செய்யும் முனிவர்களுக்கே ஏற்ற கருத்துகளை விளக்குகின்றது.

உலக ஆசைகளை விட்ட துறவற முனிவர்களால் மட்டும் முழுக்க முழுக்கப் பின்பற்றக்கூடியவைகளாக அருளுடைமை, புலால் மறுத்தல், தவம், கூடாவொழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை, நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவா வறுத்தல் முதலியனவெல்லாம் கூறப்படுகின்றன.

இத்தகைய அறிதற்கரிய உயர்ந்த பண்பாடுகளை உலக ஆசைகளை அறவே விட்டுத் தவம் பூண்டு உலகில் உயர்கின்ற பிறவிகள் அத்தனையும் ஒரே கண் கொண்டு பார்க்கின்ற முனிவர்கள் தழுவி வாழவேண்டும் என்பதாயிற்று. ஏனைய வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவர்கள் இத்தகைய பண்பாடுகளை அவ்வாறே பின்பற்றி வாழ்தல் கூடாததாகும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டதாகும்.

**காமம் :**

உதாரணமாகத் திருக்குறளில் ஏனைய பிற பகுதிகளில் கூறப்படுபவைகளெல்லாம் துறவிகளுக்கு ஏற்றவையல்ல என்பதாம், 'காமத்துப் பால்' என்ற பெரும் பகுதியில் கூறப்பட்டுள்ளவைகளெல்லாம் துறவற முனிவர்களுக்குப் பொருந்தாதவைகள் என்று அறிதல் வேண்டும்.

'கொல்லாமை' என்பதைத் துறவறப் பகுதியில் கூறிய ஆசிரியர், நேரம் வாய்த்தபோதெல்லாம் எதிரிகளாகிய பகைவர்களைக் கொல்லுதல் வேண்டும் என்று போர்ப் படையினர்களுக்குக் கூறுகின்றார் என்றால் அந்தந்த வாழ்க்கையில் நிற்பவர்களுக்கேற்ற அறிவுரையினைத் தெளிவுபடுத்துகின்றார் என்பதே பொருளாகும்.

வருகின்ற விருந்தினர்களைப் போற்றி உபசரிக்க வேண்டும் என்னும் பகுதியினை 'விருந்தோம்பல்' என்ற பெயரினால் 'இல்லறம்' என்ற பெரும் பகுதியில் வைத்துக் காட்டினார். அப் பகுதியினைத் துறவிகளுக்கு அமைத்துக் காட்டுவதில் பயனிருக்க முடியாதன்றோ? இப்படிச் சிறப் பானதாகவும் இன்றியமையாததாகவும் உள்ள பண்பாடு களை அமைக்க வேண்டிய இடத்தில் அமைத்து அறம் போதித்தல் வள்ளுவனாரின் அருமையான முறையும் திறனு மாகும்.

வெகுளியினை அறவே துறக்க வேண்டுமென்று துறவி களுக்கு எடுத்துக் கூறவே அதனைத் துறவறப் பகுதியில் வைத்தார். சிறப்பாகத் துறவிகளுக்குக் கூறினார். என்றாலும் உலக வாழ்க்கையில் இருக்கும் அனைவர்க்குமே தேவையானபோது நற்பண்பாடுகளின் சிறந்த முறைகள் பொருந்துவனவாகும் என்பது புரிந்துகொள்ள வேண்டிய தாகும்.

**கோபம் :**

இல்லற வாழ்க்கையில் இருப்பவர்களுக்குக் கோபம் என்னும் குணம், பயன்படுகின்ற அளவுக்குத் தேவை என்ப தாகும். நமக்கு மீறிப்போகும்படி செய்தல்தான் பெருந் தீங்கு விளைவிப்பதாகும். கோபத்தினை அடக்கி வைத் திருக்க வேண்டும் என்பதற்காகத்தான் 'ஆறுவது சினம்' என்று பிற்காலத்தில் சொல்லி வைத்தார்கள்.

கோபம் அறவே இருக்கக் கூடாது என்பது இயற்கை யாயின், 'ஆறுவது சினம்' என்று கூறுவதற்குப் பதிலாக

'அறுவது சினம்' என்று சொல்லி இருப்பார்கள் போலும்! இல்லறத்தில் வாழ்பவன் உலக மக்களோடு இருந்து வாழ வேண்டியவனாகையால் அவனுக்குத் துறவிகளுக்குச் சொல்வதைப் போல அறுதியிட்டுக் கூற முடியாத குணமாகி விட்டது என்பதை நாம் உணர்ந்து கொள்ள முடிகிறது.

மனிதத் தன்மையினையும் கெடுத்து மனிதனைக் கீழ்ப் பிறவி என்று கருதும் நிலைக்குக் கொண்டுவந்து நிறுத்தி விடும் ஆற்றல் கோபத்திற்கு உண்டு. சிலரைப் பார்த்து நாம், "நீ என்ன மனிதனா, மாடா?" என்று கேட்டு விட்டால் என்ன விளையும் என்று நமக்குத் தெரியும். யாரைச் சொல்லுகின்றோமோ அவனுக்கு வருகின்ற கோபத்திற்கு அளவே இருக்க முடியாதல்லவா?

ஆனால் அதே ஆள் தனக்குக் கோபம் வருகின்றபோது என்ன சொல்லுகின்றான் என்பதை நாம் சிந்திக்க வேண்டும். "எனக்குக் கோபம் வந்துவிட்டால் நான் மனிதன் இல்லை" என்ற வார்த்தைகளை அதே ஆள் சொல்ல நாம் கேட்கின்றோம். இப்படிப் பேசுவதற்குக் காரணம் என்ன? கோபம் வந்துவிட்டால் விலங்கினங்களை விட மோசமாக நடந்துகொள்வான் என்பதை அவன் தன்னையறியாமலேயே ஒப்புக்கொள்ளுகின்றான். ஆதலால்தான் ஆசிரியர் ஒருவனுக்குக் கொடிய பகைவனாக இருப்பது கோபமேதான் என்ற கருத்தினை அடிக்கடி கூறி வற்புறுத்திப் பேசுகிறார்.

இல்லற வாழ்க்கையில் இருப்பவனுக்கு இருக்க வேண்டிய அளவுக்கு இருக்க வேண்டும் என்று நாம் கூறினாலும் பற்றுக்களை அறவே விட்ட துறவற முனிவர்களுக்குக் கோபம் என்பது அறவே கூடாது என்று ஆசிரியர் திட்டவட்டமாகக் கூறிவிடுகிறார்.

அவ்வாறு சொல்லி வைக்கும் இடத்தில் வெகுளியின் கொடுமையினைக் கூறி, அருமையான 'நகுதல்' என்னும்

இயல்பினையும் கொன்று விடுமே யென்று எடுத்துக்காட்டு கின்றார். 'நகையும் உவகையும் கொல்லும் சினம்' என்று குறட்பா தொடங்கிறது.

முகமலர்ச்சியும் அகமகிழ்ச்சியும் மிகச் சிறந்த பண்பாடுகள் அல்லவா? அதுவும் அருள் தோய்ந்த முனிவர்களின் முகம் என்றும் மலர்ச்சியாகவே காட்சியளிக்கும் என்பது இயற்கைதான். மனத்தில் நிகழ்வதை உவகை யென்றும், முகத்தில் நிகழ்வதை நகை யென்றும் கூறினார்.

இவ்விரண்டு அரிய பண்பாடுகளையும் சினம் கொன்றே விடும். இக் கருத்தில் வெளிப்படையாகத் தெரிகின்ற உண்மை யொன்றுண்டு. அஃதாவது கோபமே குடிகொண்டிருக்கின்றவர்களிடத்தில் நகைத்து மகிழ்தல் என்பது கிஞ்சித்தேனும் இருப்பதற்கு இடமில்லை என்பதாகும்.

நகையினையும், உவகையினையும் கொல்லும் தன்மை வெகுளிக்கு உண்டானபடியால், அத்தகைய வெகுளியை விட வேறு பகை இல்லவே இல்லை என்று கூறிவிட்டார், பகை இருக்கும்போது நகை எங்கிருந்து வரும். அருமையான குறட்பா வொன்று இவ்வுண்மையினை எடுத்துரைக்கின்றது.

> நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
> பகையும் உளவோ பிற.

என்று அமைக்கப்பெற்றிருக்கும் குறளடிச் சொற்கள் ஒவ்வொன்றும் ஆழ்ந்த உண்மையினைப் புலப்படுத்தி விடுகின்றது. பகையில் உட்பகை, வெளிப்பகை என்று இரண்டு வகைகள் உண்டு. இவ் விரண்டினையும் குறிப்பதற்காக வேண்டியே நகை, உவகை என்று குறிப்பிட்டார் போலும். நகையினைக் கொல்வதைப் புறப்பகை என்றும் உவகையினைக் கொல்வதை உட்பகை யென்றும் கொள்ளுதல் வேண்டும். இவ் விரண்டையும் ஒன்றாக நின்று கெடுப்பது தான் வெகுளி என்பதாகும்.

'நகுதல்' என்கின்ற நற்குணம் பாதுகாக்கப்படுதல் வேண்டும் என்கின்ற முன்னறிவிப்பு போன்ற கருத்தினை இக் குறட்பா கூறுகிறது என்றும் கொள்ளலாம். இவ்வாறு பற்பல கோணங்களில் அரிய உலக உண்மைகளைக் கூறி ஆங்காங்கு 'நகை' யென்பதன் இன்றியமையாத் தன்மையினையும் கூறாமல் கூறி வைக்கின்றார் ஆசிரியர்.

பணியாட்கள் :

இரண்டு பணியாட்கள் தங்கள் தங்கள் தலைவர்களைப் பற்றிப் பேசிக்கொண்டார்களாம். ஒருவன் மற்றவனைப் பார்த்து, ''உங்கள் 'எஜமானருக்கு' அடிக்கடி கோபம் வருமோ?'' என்று கேட்டான். அதற்கு மற்றவன் ''என்னுடைய 'எஜமானருக்கு' ஒரு நாளைக்கு இரண்டு தடவை கோபம் வரும்'' என்று சொன்னானாம். சொல்லிய பிறகு திருப்பி அவன் நண்பனை நோக்கி, ''உன்னுடைய 'எஜமானருக்கு' எப்பொழுது கோபம் வரும்?'' என்றான்.

அதற்கு இரண்டாவது ஆள், ''என் 'எஜமானருக்கு' ஆண்டுக்கு இரண்டு தடவைதான் கோபம் வரும்.'' என்றான். ''ஆகா எவ்வளவு நல்லவர் அவர்!'' என்று மகிழ்ச்சியடைந்தான். முன்னவன், ''என் 'எஜமானருக்கு' ஆண்டுக்கு இரண்டு தடவைதான் கோபம் வரும்; ஆனால் ஒரு தடவை வந்தால், ஆறு மாதம் இருக்கும்'' என்று சொன்னானாம்.

இப்படிப்பட்ட பிறவிகள் இருந்தாலும் இருக்கலாம். வாழ்க்கையில் மனிதனை இன்பம் நுகரவிடாமல் செய்வது கோபம் என்று கொண்டாலும், உயர்ந்த நற்குணங்களையும் கொல்லுகின்றதே என்று எண்ணி அறியும்போதுதான் நாம் எவ்வளவு தெரிந்து தெளிந்து வாழவேண்டுமென்பது புலனாகின்றது.

**பிச்சைக்காரன் :**

பிச்சையெடுப்பவனுக்குக் கோபம் வரலாமா? அவனுக்குக் கோபம் வந்தால் என்ன ஆவது? என்பது போன்ற கேள்விகளைக் கேட்டால் அதற்குத் தக்க பதிலை ஆசிரியர் தந்து விடுகின்றார்.

யாருக்குக் கோபம் வரவேண்டுமோ, அவர்களுக்கு வந்தால் பொருள் உண்டு. பிச்சைக்ககரனுக்குப் பிச்சை போடுபவர்கள்மீது கோபம் வந்தால் அதைக்கண்டு சிரிக்காமல் நாம் என்ன செய்வோம்? அப்படிப் பிச்சைக்காரர்களுக்கும் கோபம் வருவதுண்டு என்பதை ஆசிரியர் குறிப்பாக நமக்கு உணர்த்துகிறார். நாம் அனுபவத்தில் கண்டு வரும் சில உண்மை நிகழ்ச்சிகளும் உண்டு.

ஒரு வீட்டின் முன் பிச்சைக்காரன் வந்து நின்றான். ''பசி எடுக்கிறது. ஏதாவது சாப்பிட இருந்தால் போடுங்கள்' என்று கேட்டான். வாயிற்படியில் நின்ற வீட்டுக்காரர், ''அம்மா இல்லை, வேறு எங்கேயாவது போய்ப் பார்'' என்று சொன்னார். உடனே பிச்சைக்காரன் அவரைப் பார்த்து, ''நான் அம்மாவைக் கேட்கவில்லை! சோறு தானே கேட்டேன்'' என்றானாம். இப்படிப் பிச்சைக்காரர் வகைகளைப் பலவாறாகப் பிரிக்கலாம்! வாழ்க்கையின் கீழமையான, இழிவான அடிமை நிலை என்பது பிச்சையெடுப்பதுதான்.

ஒருவன் வாழ்க்கையில் பிச்சையெடுக்கும் நிலைக்கு வருவதற்குக் காரணம் என்ன என்பதையும் ஆசிரியர் நயமாக விளக்குகின்றார். அக் காரணத்தினை நேரிடையாகக் கூறுவதற்குப் பதிலாக மறை பொருளான முறையில் அமைத்து அறவுரை புகல்கின்றார். அங்ஙனம் கூறுகின்ற போது நம்மையறியாத வொரு நகைப்பு நமக்கு ஏற்பட்டே தீரும். பிச்சைக்காரர்களைப் பார்த்துக் கூறுகின்ற புத்தி மதி அல்லது வேண்டுகோள் என்று கூறலாம்.

'இரப்பான் வெகுளாமை வேண்டும்' என்று குறட்பா ஆரம்பமாகிறது. பிச்சை எடுத்து யாசிப்பவர்களுக்குக் கோபம் வரக்கூடாது என்று சொல்கிறார். யாசிப்பது மிக மிக இழிவான தொழிலேயானாலும் அப்படி யாசிப்பவர்களுக்கும் கோபம் வருவதுண்டாம். யார் மீது? பிச்சை போடுகிறவர்கள் மீது.

பிச்சைக்காரர்களுக்குக் கோபம் வரக்கூடாது என்பதற்குக் காரணம் காட்டுகின்ற 'ஆசிரியரின் கருத்தில் எவ்வளவு ஆழமான உண்மைகள் பொதிந்து கிடக்கின்றன என்பதைச் சிந்திக்கச் சிந்திக்கப் பெரும் வியப்பு ஏற்படுவதுபோல் தோன்றுகிறது.

ஒருவன் பிச்சையெடுக்கும் நிலைக்கு வந்து விட்டான் என்றால் அதற்கு அவனுடைய வாழ்க்கையில் அவனை அவ்வாறு கெடுத்த கொடிய குணங்களில் முதன்மையாக இருந்த குணம் கோபமே யாகும். கோபம் குடிகொண்டிருக்கும் குடும்பம் மிகமிகத் தாழ்ந்த நிலைக்கு வந்தே தீரும். ஆதலால் ஒருவனைப் பிச்சைக்காரனாகச் செய்ததே கோபம் என்னும் குணந்தான்'.

அப்படியிருக்க அவன் இன்னும் இந்தக் கோபத்தினைத் துணையாக வைத்திருப்பானேயானால் அவன் எங்குப் போய்ச் சேருவானோ! கொடிய வறுமையினால் பீடிக்கப்பட்டு நாள் தோறும் பிச்சையெடுக்கின்ற இந்த நிலை இருக்கின்றதே, இதுவே போதுமான சாட்சியாகும் என்று ஆசிரியர் திடப்படுத்திக் கூறிவிடுகிறார்.

கோபம் ஒருவனை என்ன செய்யும் என்பதற்குச் சாட்சி கண்கூடாக ஒருவன் பிச்சையெடுக்கின்றானே அதுவேதான் என்னும் காட்சி நம் கண் முன்னே காட்டப்படுகின்றது. பிச்சையெடுப்பவனுக்கு வருகின்ற கோபத்தினைக் கூர்ந்து கவனித்து அவனைக் கொண்டு உலக அறத்தினை ஆசிரியர் போதிக்கின்றார் என்று நாம் எண்ணியெண்ணிக் களிப்போமாக.

இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயும் சாலும் கரி.

''நித்திய தரித்திரம்'' என்று சொல்லப்படுகிற வறுமை இருக்கின்றதே, அதுவே போதுமான சாட்சியாக (கரி) இருக்கின்றதே என்பதைக் குறிக்கும் சொற்களாக, நிரப் பிடும்பை தானேயும் சாலும் கரி என்னும் சொற்கள் அமைந் திருக்கின்றன. கட்டுக்கடங்காத கோபத்தில் பழகிக்கொண் டிருப்பவர்களில் சிற்சில சமயங்களிலேனும் பிச்சைக்காரர் களைச் சிறிது சிந்திப்பார்களாக என்று மட்டும் குறிப்பிட விரும்புகிறோம்.

கொடுமை :

எனவே மிகக்கொடிய குணமான கோபமென்பது அருமையான பண்பாடு எனப்படும் நகை - சிரிப்பு-என்பதை யும் கொன்றுவிடும் என்பதைக் கூறுகின்ற நம் ஆசிரியர் எப்போதும் எக்காலத்திலும் நம்முடன் நகைத்துச் சிரித்துக் கொண்டே இருக்கின்றவர்களைப் பார்த்துப் பகைவர்களை விட மோசமானவர்கள் என்று கூறிவிடுகிறார். நகைப் பினைக் கொல்லும் கோபத்தினைக் கொடிய பகைவன் என்று சொன்னார்.

அதுபோலவே ஒரு சிலர் நண்பர்கள் என்று சொல்லிக் கொண்டு நண்பர்கள் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யாது சிரித்து மகிழ்ந்து சேர்ந்து பழகிக்கொண்டே இருப்பார்களேயானால் அவர்கள் பகைவர்களைவிடத் தீங்கு செய்பவர்களாவார்கள் என்பது அறியத்தக்கதாகும். இதனை மிக நன்றாக நாம் தெளிந்து உணர்ந்துகொள்ளு தல் வேண்டும்.

நகைச்சுவையின் சிறப்பினைப் பேசும்போது நண்பர்கள் வழியாக எடுத்துக்கூறுதல் ஆசிரியரின் இயல்பு. ஏனெனில் நண்பர்களுடன் கூடி நகைத்து மகிழ்தல் நடைமுறை அனு பவத்தில் என்றென்றும் உள்ள இயல்புதானே. நண்பர்கள் என்பவர்கள் நம்முடன் கூடி மகிழும் அனைவருமே யாவர்

என்று நாம் கணக்கிடுதல் மிகத் தவறு என்பது ஆசிரியரின் அழுத்தமான கருத்தாகும்.

நம்முடன் நெருங்கிச் சேர்ந்து பழகுகின்றவர்களில் நண்பர்கள் சிலரே இருப்பர். ஏனையவர்களெல்லாம் விரும்பத் தகாதவர்களாக இருப்பர். இன்னும் ஆராய்ந்து நன்கு அறிந்தால் பகைவர்களும் கூட நம்முடன் நெருங்கிப் பழகிக்கொண்டுதான் இருப்பார்கள். ஆதலால் நண்பர்கள் யாவர் என்பதனைக் கூர்ந்த மதியால் நாம் புரிந்துகொள்ளு தல் வேண்டும் என்பது குறிப்பான செய்தியாகும்.

**சிரிப்பு நண்பர்கள்:**

சில நண்பர்கள் நமக்கு எப்போதும் சிரிப்பு உண்டாகு மாறு பேசிப் பழகி நெருங்கி இருந்துகொண்டிருப்பார்கள். நம்மை எப்போதும் மகிழ்வித்துக்கொண்டிருக்கிறார்களே அவர்கள்தான் உண்மையான நண்பர்கள் என்று எண்ணி விடாதே என்கிறார் ஆசிரியர். அவர்களின் உள்ளப்பாங்கி னையும் அவர்கள் எத்தகைய வகையினர் என்பதையும் புரிந்துகொள்ளவேண்டாவா?

தீயவையான எண்ணங்களும், பழக்கங்களும் கொண்ட பலர் சேர்ந்து பழகுதல் உண்டு. நம்மை நகுவித்து நம்மிடம் முடியுமட்டும் கவர்ந்து செல்ல எண்ணிக்கொண்டிருப் பார்கள். நம்முடன் சேர்ந்து எல்லாவற்றிலும் சிரித்து மகிழ்ந்துகொண்டே இருப்பவர்கள் என்று மட்டும் ஆசிரியர் குறித்துக் கூறாமல், நம்மைச் சிரிக்க வைப்பதே ஒரு வேலை யாக வைத்துக்கொண்டு உள்ளத்தில் கள்ளங்கபடமாக எண்ணம் வைத்துக்கொண்டு பழகுகிறவர்களை நம் ஆசிரியர் நண்பர்கள் என்று மட்டும் சொல்லி வைக்காமல் நகைவகைய ராகிய நட்பு என்று தெளிவுபடுத்திக் கூறு கிறார். அத்தகையவர்களை ஒரு வகையினைச் சேர்ந்த வர்கள் என்று நாம் ஒதுக்கிவிடுதல் வேண்டும்.

நகுதல் என்னும் பண்பாடு மிகச் சிறந்த தென்பது உண்மையேயானாலும் அப்பண்பாட்டினைப் பயன்படுத்திப்

பாழாயின செய்யும் தீயர்களுக்கு நாம் இரையாகிவிடலா காது என்பது ஆசிரியரின் அரிய கொள்கையாகும். அப்படிப் பட்ட நண்பர்கள் போன்றவர்களைத் தீ நட்பினர், கூடா நட்பினர் என்ற பல முறைகளில் அமைத்து நாம் வழி நடத்தல் வேண்டும்.

நண்பர்கள் தங்கள் கடமையினை யுணர்ந்து மற்ற நண்பனுக்கு இன்னல் வாராமல் தடுத்தும் தக்க நேரத்தில் நல்வழிகளை இடித்துரைத்தும் பழகுதல் வேண்டும். அப்படியில்லாமல் தானும் சிரித்து நண்பனையும் சிரிக்கச் செய்து உள்ளத்தில் தூய்மையில்லாமல் பழகுகின்ற நண்பர் களைவிட எண்ணிறந்த பகைவர்களே மேல் என்று கூறி விடுகின்றார். இத்தகைய சூழ்ச்சி நிறைந்த நகைவகையின ரான நண்பர்களைவிடப் பகைவரால் பத்தடுத்த கோடி யுறும் என்ற சொற்களினால் குறட்பாவினை முடிக் கின்றார்.

அதாவது, நம்மிடம் நகைத்தும் நல்ல முறையில் கடமை யாற்றாது நம்மிடம் கவர்ந்து செல்வதற்காகவே பழகும் நண்பர்களைவிட - நண்பர்களால் வருகின்ற பயனைவிட - பகைவர்களால் வருகின்றவை பத்துக் கோடி மடங்கு நல்லவையாக இருக்கும் என்பதாகும்.

அளவு கடந்த பகைவர் கூட்டத்தினால்கூட நமக்கு அவ்வளவு கெடுதி ஏற்பட்டு விடாதாம்: இத்தகைய வஞ்சகர் களால் நமக்கு உண்டாகின்ற தீமையினைவிட என்று அவ்வளவு வற்புறுத்திச் சொன்னார்.

பகைவர்கள் நம்மிடம் நெருங்கித் தீமை செய்வதற்குக் காலம் பார்த்திருப்பர். ஆனால் இந்த நகைவகையராகிய நண்பர்கள் துணிந்து எப்போதும் நம்மிடம் நெருங்கிப் பழகித் தீமையினைச் செய்துவிடுவார்களே!

நகைவகைய ராகிய நட்பில் பகைவரால்
பத்தடுத்த கோடி யுறும்

பன்முறையும் நாம் சிந்தித்தறிய வேண்டிய நுட்பமான உண்மைகள் இக் குறட்பாவின்கண் அடங்கியிருக்கின்றன வென்பது தெளிவாகின்றது. பகைவர்கள் - நண்பர்கள்- ஆகிய இருதரத்தினரை முன்னே நிறுத்தி வைத்துக் கொண்டு - நண்பர்கள் வேண்டா-பகைவர்களே மேலான வர்கள் என்று பேசுகிறார் நம் ஆசிரியர் என்றால், நண்பர் கள் என்று சொல்லிக்கொண்டு பழகுபவர்களில் எவ்வளவு கொடுமையானவர்கள் இருக்கின்றார்கள் என்பது புரி கின்றது. நகைப்பு - நகுதல் என்னும் பண்பாடு எத்தகைய அரிய உண்மைகளை நமக்குப் புரியவைத்துவிடுகின்றது.

அழுதல் :

அழவைத்தல் - சிரித்து மகிழவைத்தல் என்னும் இரண் டினையும் சிந்தித்துப் பார்க்கும்போது சிரிக்க வைத்து மகிழ்ந்து பழகுபவர்கள்தான் நண்பர்களாக இருக்க வேண்டியவர்கள் என்று நினைத்து இருந்துவிடாதீர்கள் என்று கூறுவது போல் கூறி நண்பர்கள் என்றால் அழவைத்து நன்மை செய்பவர்கள்தான் என்று எடுத்து விளக்குகின்றார்.

அழவைப்பதும் நேர்ந்த காலத்தில் இடித்துரைப்பதும் நல்ல நண்பர்களுக்கு இலக்கணமாகும் என்று தெளிவுபடுத்து கிறார். இப்படிச் செய்யும் பழக்கமுள்ளவர்கள் முதல் தரமான சிறந்த நண்பர்களுமாவர். ஆகவே அழுகின்ற அளவுக்கு நண்பர்களுக்குப் புத்தி சொல்லும் உரிமை கொண் டவர்களே நல்ல நண்பர்கள் என்ற தகுதிக்குள்ளாவர்.

உலகம் ஏற்றுக்கொள்ளாத அல்லது வாழ்க்கைக்கு ஒவ்வாத செயல்களைச் செய்கின்ற நண்பர்களை எவ்வாறு பக்குவப்படுத்துவது? அழும்படி நெருங்கிச் சொல்லித் திருத்த முடியாது என்பது குறிப்பு.

அழச்சொல்லியும் திருந்தாதவர்களை என்ன செய்வது. அடுத்தாற்போலவே ஆசிரியர் 'இடித்துச் சொல்' என்று

வழிகாட்டுகிறார், 'அழச் சொல்லி' அல்லது 'இடித்து' என்று குறட்பா ஆரம்பமாகிறது. எப்படிப்பட்ட கருத் துரைகளைச் சொல்லித் திருத்துதல் வேண்டும் என்றும் குறிப்பிட்டு விடுகிறார். உலக நடை - மக்கள் கருத்து- என்பவைகளை எடுத்துரைத்து, பழக்க வழக்கங்களைச் சுட்டிக் காட்டினால் யாரும் திருந்தச் செய்வர் என்பதற் காக 'வழக்கு' என்னும் சொல்லினையும் அக் குறட்பாவில் அமைத்துக் காட்டுகின்றார்.

ஆதலால் அப்படிப்பட்ட அறிஞர்கள் - உலக வழக்கு- நடைமுறைகளைத் தெரிந்தவர்கள் ஆகியவர்களுடன் நட்புச் செய்தல் மிகவும் பயனுடையதாகும் என்பது தலை சிறந்த உண்மையாகும். ஆதலால் நகைத்து மகிழச் செய்யும் நண்பர்களையெல்லாம் நண்பர்களாக நினைத்து விடாதீர்கள் என்று சொல்லியும் அழச் சொல்லியும் இடித்துக் காட்டியும் பழகும் நண்பர்களையே உயரிய நண்பர்களாகவும் கொள்ளுதல் வேண்டும் என்பதையும் குறட்பா பேசுகிறது.

அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்.

எளிமையான சொற்களில் அருமையான கருத்துகளை மிகமிகச் சுருக்கமான முறையில் ஆசிரியர் நமக்குத் தந்து விட்டார். சுருக்கமாகக் கூறுவதே ஆசிரியர் வள்ளுவ னாரின் ஒப்பற்ற ஆற்றலும் வழியுமாகும்.

'சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்' என்பது சிறந்த ஆற்றல்களில் தலை சிறந்ததும் அருமையானதுமாகும். மிக உயர்ந்த கருத்துகளையும் சுருக்கமாகக் கூறும் ஆற்றல் பெற்றவர்களே பேராசிரியர்களாக உலக ஆசான்களாக இருக்கும் தகுதியும் பெருமையும் கொண்டவர்களாவர்.

நமது பழக்கத்தில் நடைமுறையில் பேசுகின்ற போக்கில் கேட்டு வருகின்ற பழமொழி ஒன்றுண்டு. 'அறிவு நெட்டையாக இருந்தால் எழுதுவது குட்டையாக

இருக்கும்; அறிவு குட்டையாக இருந்தால் எழுதுவது நெட்டையாக இருக்கும்' என்பதே அப் பேச்சு மொழி யாகும்.

அஃதாவது சுருக்கமாகவும் விளக்கமாகவும் எழுதுபவர் கள் அறிஞர்கள் ஆவர். சுருக்கமாக எழுதத் தெரியாமல் சுருக்கமாகக் கூறக்கூடிய கருத்துகளையும் அதிகமாகப்-பெரிதாக-எழுதுகிறவர்கள் அறிவு வளர்ச்சி பெறாதவர்கள் என்பதுதான் அப் பழமொழியின் கருத்தாகும். மிக்க உண்மைதான். சிலர் சாதாரணமாகக் கடிதம் எழுது வதைப் பார்க்கும்போதே நமக்கு விளங்கிவிடுகிறது.

கடிதங்கள் :

ஒரு பக்கத்தின் அளவிலேயே எழுதி முடிக்கக்கூடிய செய்திகளை விரித்து எழுதித் தேவையில்லாதவைகளையும் அத்துடன் எழுதிச் சேர்த்து மூன்று நான்கு பக்கங்கள் எழுதுவதையும் நாம் பார்க்கின்றோம். இப்படி எழுது பவர்கள் இத்தனைப் பக்கங்கள் எழுதியும் அமைதிகொள்வ தில்லை.

இப்படி எழுதிவிட்டுக் கடைசிப் பக்கத்தில் கடைசி வரியில் 'மற்றச் செய்திகள் அடுத்த கடிதத்தில்' என்றும் குறிப்பிடுவதைப் பார்க்கும்போது நம்மை யறியாமலேயே நமக்குச் சின்னச் சிரிப்பு வரத்தான் செய்கிறது. இதற்கு என்ன காரணம்? வேண்டுமென்றே அவர்கள் நீளமாக எழுதுகிறார்கள் என்பதா? இல்லவே இல்லை!

சுருக்கமாக எழுதத் தெரியாத காரணத்தினால்தான் அவ்வாறு எழுதுகிறார்கள் என்பதே பொருளாகும். விளக்க வேண்டிய இடத்தினை மட்டும் விரிவுபடுத்திக் கூறுவதே இலக்கணமாகும்.

உலகத்திற்குப் பொதுத் தன்மை யளவிலே அறவுரைகள் போதிக்க வந்த பெரியோர்கள் பலர். அவர்களிலே

எக்காலத்திற்கும் பொருந்த எல்லா மக்களும் ஒப்ப எல்லாக் கருத்துகளையும் கூறிய பெரும் பேராசிரியர், தத்துவ ஞானி, உலகியல் புலவர், பொருளாதார நல்லறிஞர் வாழ்க்கைப்பாதை வகுத்த வல்லவர் வள்ளுவரல்லாமல் வேறு யாரே உளர்?

சிறிய அளவில் குறட்பாக்களை அமைத்து மிகப்பெரிய கருத்துகளை அவற்றுள்ளடக்கி உவமான உவமேயங் களைப் பொதிய வைத்து நகைச்சுவையினையும் நயமாகக் கூறிய பொதுமறைத் தந்தை வள்ளுவனாரின் பெருஞ் சிறப் பினை எங்ஙனம் எடுத்துக் கூற இயலும்.

நகைச்சுவையினை நுழையும் வழியாகக் கொண்டு ஏய்த்துத் திரியும் வஞ்சகக் கூட்டத்தினரின் வகைமுறைகளை முன்னர் கண்டோம். 'நகை வகையர்' என்றே அவர்களை ஆசிரியர் அமைத்துக் காட்டினார். அவ்வாறே நண்பர் களின் உலகில் மற்றொரு பகுதிக்கு நம்மை ஆசிரியர் கொண்டு சென்று அங்கேயும் நகைத்துப் பழகும் நண்பர் களைக் காட்டி அவர்கள் நம்முடன் நகைத்துப் பழகிச் செய் கின்ற தீங்கினை விளக்குகின்றார்.

**வஞ்சகர் :**

வஞ்சக நண்பர்கள் போன்றார் நம்மிடம் எப்படி யெப்படியெல்லாம் நடந்து கொள்வர் என்பதை மட்டும் ஆசிரியர் சொல்லிச் செல்லாமல் அப்படிப்பட்ட அவர் களிடம் நாமும் அப்படியே பழகுவது போலக் காட்டி அவர் களைச் சிறுகச்சிறுக ஒதுக்கித் தள்ளிவிட வேண்டுமென்று உலக அனுபவப் பாதையில் நம்மை நடக்கச் செய்து நல்லுரை தருகின்றார்.

நாமும் அப்படிப்பட்டவர்களிடம் சிரித்துப் பேசியே உள்ளத்தினை அவர்கள் அறியவொண்ணாதபடி செய்ய வேண்டுமென்றும் கூறுகின்றார். 'இராச தந்திரம்' என்று கூறப்படுகின்ற பெரும் உண்மையினை அழகிய குறட்பா வொன்றில் ஆசிரியர் அமைத்திருக்கின்றார்.

மற்றவர்கள் உள்ளத்தில் பகைமை கொண்டு பழகும் போது அவர்களிடம் எவ்வாறு நாம் பழகினால் நமக்குத் தீமை வராதபடி பார்த்துக்கொள்ளலாம் என்பது இங்கு அறியத் தக்க குறிப்பாகும். 'நகுதல்' என்னும் பழக்கம் எப்படியெல்லாம் நமக்குப் பயன்படுவதாகின்ற தென்ற வுண்மை ஆழ்ந்து சிந்தித்து மகிழ்வதே யன்றோ!

மனத்திற்குள் நம்மை இகழ்ந்து நினைத்துக்கொண்டே வெளிப்புறத்தில் அதை மறைத்து அறியாதபடி நயமான வார்த்தைகளைப் பேசி நம்முடன் பழகுகின்றவர்களும் உண்டு; பல பேர் உண்டு. அவர்கள் தங்களை வெளிப்படை யாகக் காட்டிக் கொள்ளாமல் இருப்பதால் நாமும் அதைத் தெரிந்துகொண்டதாகக் காட்டிக்கொள்ளக் கூடாது என்கிறார் ஆசிரியர். பிறகு எப்படித்தான் அவர்களை ஒதுக்குதல் வேண்டும் என்னும் வினா நமது உள்ளத்தில் எழுகின்றது. அதற்கும் வழியொன்று சொல்லித்தரு கின்றார்.

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுகின்ற பகைமைக் குணமே உருவாகி மறைத்துவைத்துப் பழகுபவர் களிடத்தில் நாமும் அவ்வாறே பழகுதல் நேர்மைதானா என்று நினைத்தால் பகைவர்களிடத்தில் அவ்வாறு நடப்பது தான் - நடக்க வேண்டிய முறையாகும் என்று தெளிவு படுத்திக் கூறுகிறார்.

நாமும் உள்ளத்தில் பகைமை தோன்ற அவர்களை நினைவுபடுத்தி வைத்துக்கொண்டு வெளிக்குமட்டும் சிரித்துப் பேசி, அப் பகைவர்களை அப்படியே கெட்டொழி யச் செய்ய வேண்டும் என்னும் உலகியல் முறையினை உணர்த்துகின்றார். இப்படிப்பட்ட நேரங்களில் நாம் நகைத்து-சிரித்துப்-பேசிக் காட்டுவது உள்ளத்தில் ஏற்படும் மகிழ்ச்சி காரணமாக இருக்க முடியாதுதான்.

அப்படி நடந்துகொள்ளுவதால் பகைவர்களின் உள்ளத்தில் பகைமைக் குணம் அழிந்து மறையும் என்பதே

ஆசிரியர் குறிப்பாகும். 'மிகச் செய்து தம் எள்ளுவாரை' என்றொரு குறட்பா தொடங்குகிறது. இத் தொடர் நம் முடன் நண்பர்கள் போலப் பழகும் பகைவர்களைக் குறிப் பதாகும்.

'மிகச் செய்து' என்பது பகைமை வெளிப்படாதவாறு மறைத்து வைத்து வெளிக்கு மிகச் சிறந்த நண்பர்கள் போலப் பழகும் தன்மையினைச் சுட்டிக் காட்டி நின்றது. அவ்வாறு காட்டி மனத்திலே நம்மை இழிவாகவும் பகைமை யெண்ணத்துட னும் இருப்பவர்கள் என்பதைத் 'தம் எள்ளு வாரை' என்ற சொற்கள் விளக்கிக் காட்டுகின்றன.

இவ்வாறான நண்பர்கள் .போன்ற பகைவர்களிடம் நண்பர்களாகவே காட்டிக்கொண்டு வெளிக்குச் சிரித்துப் பழகுதல் வேண்டுமாம். நகச் செய்து நட்பினுள் என்றொரு சொற்றொடர் குறட்பாவில் வருகின்றது.

இக்குறட்பாவில் கடைசியாக ஆசிரியர் சொல்லித் தருகின்ற கருத்து மிகவும் ஆழ்ந்த அறிவியல் உண்மை யினைப் புலப்படுத்தி விடுகிறது.

*மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து*
*நட்பினுள் சாப்புல்லற் பாற்று*

இவ்வாறு வஞ்சக நண்பர்கள் உள்ளத்தில் பகைமை கொண்டிருப்பவர்களாகின்றார்கள். ஆகையால் நாமும் அதிகமாக வெளியில் நண்பர்களாக நகைத்துப் பழகி அப் பகைமைக் குணத்தவர் உள்ளத்திலேயே சாகும்படி செய்து ஒழிக்க வேண்டும் என்று கூறுகிறார்.

மரணமடையச் செய்தல் வேண்டும் என்ற கருத்தினைத் தான், சாவினைப் புல்லும்படிச் செய்க வென்றமைத்து, அதுவே சாவினைப் புல்லித் தழுவுகின்ற தன்மையினை உண்டாக்கும் என்று சுருக்கமாகக் கூறும் முறையில் 'சாப் புல்லற் பாற்று' என்று குறட்பாவின் இறுதிச் சீராகத் தந்து கருத்தினையும் குறட்பாவினையும் முடித்தார்.

பகைவர்களை மரணமடையுமாறு செய்ய வேண்டு மென்பது பொருளாகாது; அந்தப் பகைமை யெண்ணம் கெட்டு அவர்களின் வஞ்சகமும் ஒழிந்து அவர்களின் நட்பும் அற்றுப்போகும் என்பது குறிக்கப்பட்டது. இவ் வரிய வெற்றிக்குக் காரணமாக-மூலப் பொருளாக-'நகுதல்' இருந்ததென்பது உய்த்தறிய வேண்டிய தொன்றாம்.

**பகை நண்பர்:**

பகைவர்களைப் பற்றிப் பேசும்பொழுதெல்லாம் நயமாகவும் உட்பொருள் நிறைந்தனவாகவும் கருத்துகளை விளக்குகிறார். இன்று நடைமுறையில் நாம் பேசுகின்ற பேச்சுக்களெல்லாம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே வள்ளுவர் கூறி வைத்திருப்பவைகளாகவே நமக்குப் புலனாகின்றன. உயர்ந்த கருத்துக்களை வள்ளுவனார் வாயிலாக அறிகின்றோம் என்பது மட்டுமன்று; அவைகளை உள்ளத்தில் சிரிப்பும் வியப்பும் தோன்றுகின்ற முறையில் ஆசிரியர் அமைத்து விடுகின்றார்.

நண்பர்களின் வகைகளைப் பலவாறாகப் பிரித்துக் காட்டி, அவர்களில் பகைவர்கள் கணக்கில் வைக்கப்பட வேண்டியவர்கள் எத்தனை வகையினர் - நண்பர்கள் போலவே நம்முடன் பழகி வருகின்றார்கள் என்பதனை எடுத்துக்காட்ட ஆசிரியர் மறப்பதே யில்லை.

"ஆளை அப்படியே சாப்பிட்டு விடுவான் போல் இருக்கிறதே! என்று நாம் இன்றைய பேச்சு வழக்கில் காண்கின்றோம். அஃதாவது சில நண்பர்கள் நல்ல பண்பு இல்லாதவர்களாக இருந்தாலும், நம்மிடத்தில் மிகப் பெரிய அன்பு வைத்திருப்பவர்கள் போல என்னென்னவோ பேசி நம்மை அப்படியே கவர்ந்துவிடுகின்றார்கள். நம்மை முழுக்க முழுக்க நம்பவும் வைத்து அவ்வளவு நெருக்கம் கொண்டவர்கள் போலப் பழகுவார்கள். ஆனால் உண்மையில் நண்பனுக்குத் தேவையான பண்பு சிறிதேனும் அவர்களிடத்தில் இருக்காது.

நீர்வேட்கை அதிகமாகக் கொண்ட ஒருவன் எவ்வளவு ஆவலுடன் நீரைப் பருகுவானோ அவ்வளவு வேகமாக நம்மிடம் அன்பைப் பெய்து நம்மை மயக்கி விடுவார்களாம். இவர்களும் ஒருவகையான பகைவர் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

பண்பில்லாத இப்படிப்பட்டவர்களைப்பற்றிப் பேசுகின்ற ஆசிரியர் தண்ணீரைக் குடிப்பது போல் நம்மை விழுங்கி விடுவார்கள் என்று கூறுகின்ற போது நமக்குச் சிரிப்பது போன்ற உள்ள எழுச்சி தோன்றுகிறது என்றாலும் பகைவர்களான நண்பர்கள் எப்படியெல்லாம் இருப்பார்கள் என்ற வகைகள் நம்மைப் பெரு வியப்பிற்கு உள்ளாக்கி விடுகிறது. குறட்பாவினைக் காண்போம்.

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது.

குறட்பாவினை 'இனிது' என்ற சொல்லினால் முடித்தார். தண்ணீரைப் போல் குடித்து விழுங்குகிறவர்களின் நட்பு குறையக் குறைய நமக்கு இன்பம் அதிகரிக்கும் என்று கூறினார். அவர்களின் நட்பு இருக்கும் வரையிலும் அல்லது அவர்கள் நட்பு பெருகப் பெருக நமக்குத் துன்பமேதான் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

ஆகவேதான் 'குன்றல் இனிது' என்றும் தெளிவு படுத்தினார். பருகுவது போன்ற அன்பைப் பெய்கின்ற பண்பு இல்லாதவர்களின் நட்பினை, 'பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை' என்று சொன்னார். அத்தகையவர்களின் தொடர்பு - நட்பு - எக்காலத்திலும் எக்காரணங் கொண்டும் பெருகவே கூடாதாம்.

நீரைப் பருகுவது போல ஆளையும் பருகிவிடுவார்களோ என்பது ஆசிரியரின் நகைச் சுவையும் நயமும் கொண்ட உள்ளப் பாங்கினைக் காட்டுகின்றதென்பதில் என்ன ஐயம் இருக்க முடியும்?

குறட்பாக்களில் மறைந்தும் வெளிப்பட்டுமுள்ள ஆழ்ந்த கருத்துகளைப் பன்முறையும் சிந்தித்துச் சிந்தித்துப் பார்த்தால்தான் உண்மையும் ஆசிரியரின் உள்ளமும் விளங்குகின்றன. இன்றேல் குறட்பாக்களின் நயமான கருத்தாழமும் உலகியல் நடைமுறை எடுத்துக் காட்டும் விளங்கிவிடுவனவாகா.

ஆதலால்தான் குறட்பாக்களின் மேற்போர்வைப் பொருளுடன் நின்று விடுதல் குறட்பாக்களைப் புரிந்து விடுதல் ஆகாது. குறட்பாக்களின் புதை பொருள் கருத்துகள் தெரிந்து புரிய ஆழ்ந்து [சிந்தித்தலே உதவிபுரியும் என்பதாம். குறட்பாக்களின் ஆழத்தைப் புரிந்து இன்புற நடைமுறை அனுபவங்களை வைத்துக் காணலாம்.

**நிலக்கடலை :**

நமது நாட்டில் நிலக்கடலை யென்பது எல்லோருக்கும் தெரிந்த வொன்றேயாகும். இதனை வேர்க்கடலை யென்றும் கூறுவர். 'மணிலா' என்று சொல்லுவதும் உண்டு. இதனைப் பயிரிடும் முறையும் எளிதானதுதான். தெரிந்துகொள்ளமுடியாத அவ்வளவு புதுமையானது மன்று.

ஆனால் முற்றிய பிறகு நிலக்கடலையினைத் தோண்டி யெடுப்பதில்தான் அறிவும் ஆற்றலும் திறமையும் இருக்கின்றன வென்று கூறலாம். நிலக்கடலை பூமிக்கு மேல் தென்படாததாகும். கடலையெல்லாம் பூமிக்குள்ளே தான் இருக்கும். ஆதலால்தான் நிலக்கடலை யென்றே பெயர். நிலக்கடலையினை வெட்டித் தோண்டியெடுக்கும்போது பக்குவமாக எடுப்பார்கள்.

அப்படி யெடுத்தால் ஒவ்வொரு செடியிலும் - அதாவது ஒவ்வொரு செடியின் வேர்களிலும் ஐம்பது முதல் ஐந்நூறு வரை கடலைகள் இருக்கும். நிலத்தினைத் தோண்டி மண்ணைக் கிளறியெடுக்கும் பான்மையில் நிலக்கடலைகள் அத்தனையும் கிடைக்கும்.

பக்குவமாகத் தோண்டி எடுக்கத் தெரியாதவன் செடியைப் பிடித்து வேகமாக இழுத்துச் செடியுடனே எல்லாக் கடலைகளும் வரும் என்று எண்ணி அப்படிச் செய்வானேயானால் அவனுக்கு இரண்டு மூன்று நிலக் கடலைகூடக் கிடைக்காது என்று கூறலாம். செடியை மட்டும்தான் அவன் பார்க்க முடியும்.

குறட்பாவினைப் படித்துப் புரிந்துகொள்ள நினைக்கும் போது இத்தகைய நிகழ்ச்சியினை மனத்தில் வைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

குறட்பாவின் சொற்களை மட்டும் வைத்துக்கொண்டு பொருள் கண்டுகொள்ளுதல் குறட்பாவின் ஆழத்தினையும் ஆசிரியர் வள்ளுவனார் உள்ளத்தினையும் உலக அனுப வத்தில் குறட்பா அமைக்கப்பட வேண்டிய இடத்தினையும் கண்டறிந்து விடுதல் ஆகாது.

நிலக்கடலைச் செடியினைப் பிடித்து வேகமாக இழுத்தவன் கண்ட இரண்டு மூன்று நிலக்கடலை போலத் தான் குறட்பாவின் கருத்தும் அவனுக்குத் தெரிவதாகும். பக்குவமாகப் பறித்து மண்ணைத் தோண்டிச் செடியைப் பன்முறையும் அசைத்து அத்தனை வேர்க்கடலையினையும் கொண்டு பயனடைபவன் போலக் குறட்பாக்களில் அடங்கியுள்ள ஒவ்வொரு சொல்லின் ஆழ்ந்த பொருளி னையும் அவைகள் அவ்வாறு அமைக்கப்பட்டிருக்கும் காரணங்களையும், உலக நடையினையும் ஆசிரியர் காட்டும் உவமைகளையும், சுட்டிக்காட்டும் பொருள்களையும் நன்கு சிந்தித்துக் காணுகின்ற போதுதான் வள்ளுவனாரின் உள்ளக்கிடக்கை உலகப் பொதுமறை வாயிலாக எங்ஙனம் புலப்படுகின்றதென்ற உண்மையினை நாம் புரிந்து கொண்டவர்களாவோம்.

'எல்லாப் பொருளும் இதன்பால் உள' என்று பிற் காலத்துப் பெரும் புலவர்கள் திருக்குறளைப் பாராட்டிப் பாடிய உண்மைக் கருத்தும் பெருமையும் நமக்குத்

தோன்றும். ஏனெனில் கதைகள், வரலாறுகள் என்பன வற்றைப் பாடிய புலவர்களுக்கும் அறம், ஒழுக்கம், உலகியல், வாழ்க்கை முறை இவைகளை உணர்த்திப் பாடிய புலவர்களுக்கும் வேறுபாடு உண்டன்றோ?

மொழி :

சொல்லுக்குச் சொல் வேறுபாடு கருத்தாழமும் கொண்டிருக்கும் என்று மட்டும் சொல்லிக் கொள்ளுதல் தமிழ் மொழிக்கு இயல்பாகவே உண்டான சிறப்பினை அறிந்ததாக முடியாது. உலக முதன் மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்றுகும் என்பது நடுவு நிலைமையாளர்களுக்கு எளிதில் விளங்குவதாகும். தனித்தனி எழுத்துக்களுக்குத் தனித்தனிப் பொருளும் சிறப்பும் கொண்டு இலங்குவது நமது தாய்மொழி யன்றோ?

அறிவு நிறைந்த தமிழ்ப் பேராசிரியர்கள் பல எழுத்துக் களை வைத்துச் சொற்கள் அமைக்காமல் இரண்டொரு எழுத்துக்களைக் கொண்டே சொற்களை அமைத்துக் கருத்தாழங் காட்டும் பெருமை தாய் மொழிப் பேராசிரியர் களுக்கே உண்டென்பது மிகையாகாது. அருமையான சொல்லமைப்பும் நகைச்சுவைச் சாயலும் நீதியுரைப்பது மான பாடல்களைப் பாடுவதில் நீதி நூற்புலவர் மாயூரம் வேதநாயகம் பிள்ளை அவர்கட்குத் தனிச் சிறப்பு உண்டு.

அவர்களின் புலமை, மிகு பெருஞ்சிறப்பு வாய்ந்த தொன்று என்று திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்ற தமிழ்ப் பெரியார்கள் பாராட்டி யுள்ளதைத் தமிழுலகமே நன்கு அறியும். ஒரு முறை வேதநாயகம் பிள்ளை தம் அருமை மனைவியாருடன் உரையாடிக்கொண்டிருக்கும்போதே பாடலொன்றைப் பாடினரென்றும் அப் பாடல் பாடப்பெற்றபோது அவருக் கும் அவருடைய மனைவியாருக்கும் சுவையான வாக்கு வாதம் நடந்ததாகவும் கூறுவதுண்டு.

தமது மனைவியார் அருகில் அமர்ந்திருக்கும்போது வேதநாயகம் பிள்ளை பாடலொன்று பாட ஆரம்பித்தாராம். முதலடியை எழுதினாராம். அந்த அடியினைப் பார்த்தபோது அவருடைய மனைவியார் திடுக்கிட்டு வியந்தாராம். 'மாதரை நினையாதே' என்பதுதான் அப்பாடலின் முதலடியாகும்.

இதனை அருகில் உட்கார்ந்துகொண்டிருந்த அவருடைய மனைவியார் வேதநாயகம் பிள்ளையைப் பார்த்துக் கேட்டாராம்: "நான் இருக்கும்போதே இப்படியானுல் என் நிலைமை என்ன ஆவது?" உடனே வேதநாயகம் பிள்ளை சிரித்துக்கொண்டு அந்த இரண்டு வார்த்தைகளுக்ும் பக்கத்தில் ஒரு சிறிய கோடு போட்டு இரண்டு எழுத்துக்களால் ஆனவொரு சொல்லினை வைத்து அந்த அம்மையார் பெரும் வியப்படையுமாறு செய்தாராம்.

"மாதரை நினையாதே - மறு மாதரை நினையாதே" என்பதே அவர் செய்ததாகும். இரண்டே இரண்டு எழுத்துக்களைச் சேர்த்து அமைத்துக் காட்டிய புலமை நுட்பத்தினை என்னவென்று நாம் கூறுவது! மற்ற மாதர்களை நினைக்கக் கூடாது என்பதே அதனுடைய பொருளாகும். இவ்வாறு நுணுக்கமான கருத்துகளை எளிதாக அமைத்து அறிவூட்டும் பேராசிரியர்களின் கருத்துகளைச் சிந்தித்து மகிழ்தல் நமது கடமையன்றே.

**சிரிக்காதே :**

சிரிக்கவே கூடாது என்று ஆசிரியர் வள்ளுவனுர் நமக்கு அச்சுறுத்துகின்ற இடமும் உண்டு. நகைத்து மகிழ்தல் என்பது பொதுப்பட அரிய பண்பாக இருப்பதைப் பல இடங்களில் பல்வேறு கருத்துகளைத் தாங்கி நமக்குக் கூறப்படுகின்றதென்றாலும் அக் குணத்தினை இடமறிந்து பயன்படுத்த வேண்டுமென்பது மிகவும் இன்றியமையாத அறிவுரையாகின்றது.

சிரித்து மகிழக் கூடாத இடத்தில் சிரித்து மகிழ்வோமே யானல் பெருந்தீங்கு விளைந்துவிடுவதாகும் என்றுகூட ஆசிரியர் எடுத்துக் கூறுகின்றார். ஒரு மனிதனுக்கு இனிமையாக இருக்கும் நல்லுணவு மற்றொருவனுக்கு நஞ்சாக முடியலாம் என்றொரு பழமொழி கூறுவதுண்டு.

அதனுடைய பொருள் என்னவென்றால் எப்பொருளையும் இடமும் காலமும் அறிந்து பயன்படுத்த வேண்டும் என்பதேயாகும். இல்லையென்றால் தீமையாகவே முடியலாம். அதுவேபோல நாம் சிரித்து மகிழ்ந்து பேசக்கூடாத இடத்தில் சிரிப்பு நிகழுமேயானல் அது நல்லதன்று என்பது குறிப்பு.

நல்ல நன்மைகளைப் பிறருக்குச் செய்தல் உயர்ந்த பண்பாடு என்று இயல்பாகக் கூறுகின்றோம். ஆனல் நல்ல செயலினையே - நன்மையினையே - ஒருவனுக்குச் செய்தாலும் அதனால் நமக்குத் தீமையாகி, நாம் செய்தது தவறு என்று உணரவேண்டிய நிலைமையும் ஏற்பட்டுவிடும் என்கிறார் ஆசிரியர்.

ஆகவே நாம் நல்லதுதானே மற்றவனுக்குச் செய்கிறோம் என்ற ஒரே குறிக்கோளுடன் இருக்கக் கூடாது என்கிறார். யாருக்கு நன்மை செய்கிறாய் என்பதையும் சிந்தித்துப் பார்த்த பிறகே நீ அச்செயலினைச் செய்ய முற்பட வேண்டுமாம்.

ஏழை :

செல்வர் ஒருவர் வீட்டில் சிறப்பான விழாவொன்று நடந்ததாம். ஏழையொருவன் ஏதாவது சன்மானம் கிடைக்குமென்று அவர் வீட்டுக்குப் போயிருந்தான். செல்வர் அவனைப் பார்த்தார். அவனுக்கு ஐந்து ரூபாய் இனாமாகக் கொடுத்தார். மிகவும் மகிழ்ச்சியுடன் அந்த ஏழை வாங்கிக்கொண்டு வந்தான்; மிகவும் பெருமைப் பட்டுக்கொண்டான்.

பார்த்தவர்கள் கேட்டார்கள். உடனே அவன் பெருமையாக அந்தச் செல்வரைப் பற்றிப் பேசினான்: ''புண்ணியவான் நன்ருக இருக்க வேண்டும். நான் போய்க் கேட்டவுடன் தாராளமாக ஐந்து ரூபாய் கொடுத்தார். அவர் நன்றாக வாழ வேண்டும்'' என்று பலரிடமும் கூறி வாழ்த்திக்கொண்டிருந்தான். அதே செல்வரின் வீட்டிற்கு மற்றொரு ஏழை சென்ருன். தன்னுடைய குடும்பத்தின் ஏழ்மை நிலையைக் கூறி இனாம் கேட்டான். அதனைக் கேட்ட அச் செல்வர் மிகவும் மனமிரங்கி இருபத்தைந்து ரூபாய் கொடுத்தனுப்பினார். அவன் முகத்தில் மகிழ்ச்சிக் குறிகள் தோன்றவில்லை. கடுகடுப்பாகப் பேசிக்கொண்டு வந்தான். அவனைப் பார்த்த வொருவர் ''உனக்கு அச் செல்வர் எவ்வளவு கொடுத்தார்?'' என்று கேட்டார்.

அதற்கு அவன் தன்னுடைய முகத்தைச் சுளித்துக் கொண்டு கோபமாக, ''உம்; என்ன கொடுத்தான். பிச்சைக்காரக் காசு; இருபத்தைந்து ரூபாய் கொடுத்தான்; எவ்வளவு பணம் வைத்திருக்கிறான் தெரியுமா? ஏன்? ஒரு நூறு ரூபாய் கொடுத்தால் என்ன?'' என்று சலித்துக் கொண்டான். ஐந்து ரூபாய் இனாம் பெற்றவன் பேச்சுக் கும் இவனுடைய பேச்சுக்கும் எவ்வளவு மாறுதல்! என்னே உலகம்! அவனவன் பண்பு எப்படியெல்லாம் மனிதனை மாற்றி விடுகிறது என்பதை எளிதில் தெரிந்துகொள்ள முடிகிறதல்லவா? இப்படி எத்தனையோ உண்டு.

''நல்ல செயலினை — உதவியினைச் செய்தாலும் அதனால் செய்தவனுக்குக் குற்றம் உண்டாகி விடுமாம்; ஏன்? யாருக்குச் செய்கின்றோமோ அவர்களுடைய குணங் களை ஆராய்ந்தறிந்து செய்யாவிட்டால்.''

திருவள்ளுவர் தொழில் முறைகளைப் பற்றி விரிவாகக் கூறுகின்ற இடத்தில் மேற்கூறிய கருத்தினையும் விளக்கு கின்றார். குறட்பா :

*நன்று ஆற்றலுள்ளும் தவறுண்டு அவரவர்*
*பண்புஅறிந்து ஆற்றாக் கடை.*

எனவேதான் செயலினை - நன்மையினைச் செய்வது பெரிதன்று; 'அவரவர் பண்பு அறிந்து' என்று குறிப்பிட்டுக் கூறிய சிறப்பான கருத்தினைப் புரிந்துகொள்ளுதல் வேண்டும். நாம் செய்யும் நல்ல செயலுக்குத் தகுதியில்லாதவர்கள் அல்லது உரியரல்லாதவர்களுக்குச் செய்வதனால் செய்தவர்களுக்கே குற்றம் உண்டாகும் என்று கூறினார். மற்றவர்கள் கேட்பவர்கள் மனம் இசைவதாக இருக்குமா என்பதையும் புரிந்துகொண்டே நன்மையான செயல்களைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

எக் காரியத்தினையும் இடமறிந்து செய்தல் வேண்டும் என்ற குறிப்பில் வைத்துப் பேசுகின்ற முறையில் தனிப்பட்டவர்களின் தன்மைக்கு எடுத்துக்காட்டினைக் கண்டோம். நற்பண்புகளான செயல்களை இடமறிந்தும் செய்தால்தான் நன்மையாக முடியும் என்பதையும் சுட்டிக் காட்டுகின்ற முறையில் நகைத்தல் - நகைத்து மகிழ்தல் என்பதனைச் சில இடங்களில் 'செய்யாதே' என்று அச்சுறுத்திக் கூறுகின்றார் ஆசிரியர். 'மற்றவர்களுடன் சேர்ந்து சிரித்துப் பேசிக் கொண்டிருக்காதே' என்று திருவள்ளுவர் பேசுகின்ற இடம் திருக்குறளில் ஒன்றே ஒன்று தான் என்று கூறலாம்.

'குசுகுசு'

'குசுகுசு வென்று பேசுதல்' என்று நடைமுறையில் பேசுவதை நாம் கேட் டிருக்கின்றோம். அதுவே போலச் சிலர் கூடியிருக்கின்றபோது இரண்டு பேர் தாங்கள் மட்டும் மறைவாக ஏதோ பேசுவதும் சிரிப்பதுமாக இருப்பதுண்டு.

பேரறிஞர்கள் - பெரியோர்கள் - கூடி இருக்கின்ற சபைகளில் அவ்வாறு பேசுதலும் சிரித்தலும் கூடாது என்று

ஆசிரியர் அறிவுரை போதிக்கின்றார். அப்படிச் செய்வதால் தவறான அர்த்தத்திற்கு இடங்கொடுத்து விடுவதோடு பெரியோர்கள் கூடி இருக்கின்ற மன்றத்தில் அது ஒழுக்கத்திற்குக் கேடான பழக்கமாகும் என்பதையும் குறிப்பால் உணரவைக்கின்றார் ஆசிரியர்.

கூட்டமாக எல்லோரும் இருந்து பேசி நகைப்பதில் தவறு இருக்கமுடியாது. ஆனால் பெரியோர்கள் கூடி இருக்கும் மத்தியில் இருவர் மட்டும் சேர்ந்து சேர்ந்து நகைத்துக் கொள்ளுவதுதான் குற்றமென்று கூறுகின்ற அளவுக்குக்கூடக் கருதப்பட்டு விடும்.

ஆன்ற பெரியார்கள் கூடி இருக்கின்ற சபையில் வீற்றிருக்கும்போது எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்ற கருத்துகளைக் கூறிக்கொண்டு வருகின்ற இடத்தில் அமைக்கப்பட்டிருக்கும் குறட்பாவினைக் காண்போம்.

செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்
ஆன்ற பெரியோர் அகத்து.

'பெரியார் அகத்து' கூறப்பட்டுள்ள கருத்தினை அறிதல் வேண்டும். பெரியார்களுடன் நட்புக் கொள்வது அவர்களால் பாராட்டப்படுபவர்களாக இருக்க வேண்டியது நமது கடமையாகும். அப்படியிருக்க அவ்வாறான இடங்களில் எவ்வாறு நாம் நடந்துகொள்ளவேண்டும் என்பதும் தெரிந்துகொள்ள வேண்டிய இன்றியமையாத செய்தியேதான்.

ஆதலால்தான் மிக நுணுக்கமான உண்மைகளை ஆசிரியர் குறிப்பிட்டுக் காட்டினார். காதோடு காது வைத்துப் பேசுதல் என்பதும் சேர்ந்து சேர்ந்து இவர் மட்டும் சிரித்துக்கொள்ளுவது அப்படிப்பட்ட பெரியோர்கள் கூடியிருக்கின்ற சபையில் மற்றவர்களின் எண்ணங்களைக் கூர்ந்து கூர்ந்து கவனிக்கும்படி செய்யுமாதலால் இவ்விரண்டு

செயல்களையும் அந்த இடத்தில் செய்தல் தகாது என்பதனை அறிந்துகொள்ள வேண்டியவர்களாகின்றோம்.

இக் குறட்பாவில் சிந்தித்துத் தெரிந்தறிய வேண்டிய சொல் 'அவித்து' என்பதாகும். 'அவித்தல்' 'அவித்து' என்று குறிப்பிடப்படும் சொற்களுக்குத் தனிச் சிறப்பான பொருளுண்டு என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**அவித்தல் :**

ஆசிரியர் திருவள்ளுவர் தமது அரிய நூலில் சொற்களைப் பயன்படுத்தும் முறை மிகப் பெரிதும் உய்த்துணர்ந்து பாராட்டப்பட வேண்டிய தொன்றாகும். சில சொற்களை ஆசிரியர் பலமுறை பயன்படுத்துகிறார். சில சொற்களைச் சிற்சில இடங்களில்தான் பயன்படுத்துவார். குறிப்பான சில சொற்களைப் பல இடங்களில் பயன்படுத்துவதில்லை.

அங்ஙனம் திருக்குறளில் மூன்றே இடங்களில் பயன்படுத்தப்படும் சொல் 'அவித்தல்' என்பதாகும். இச்சொல் சிந்தித்துப் பொருள் தெரிந்துகொள்ளுவதாக அமைக்கப் பட்டிருக்கிறது. 'பொறி வாயில் ஐந்து அவித்தான்' என்று தொடங்குகின்ற குறட்பாவும், 'ஐந்து அவித்தான் ஆற்றல்' என்று கூறப்படுகின்ற குறட்பாவும், நாம் இப்போது விளக்கிக் காண்கின்ற 'செவிச் சொல்லும்' என்று தொடங்கப்பெறும் குறட்பாவும் ஆகிய மூன்று குறட்பாக் களிலும் இச் சொல்லினைக் காணுகின்றோம்.

'அவித்தல்' என்பது அழித்தல் ஒழித்தல் என்னும் பொருளில் நேரிடையாகக் கண்டித்துக் கூறப்படும் பொருளில் கூறப்பட்டுள்ள தென்பது ஆகாது. மூல காரணமான பொருள் அப்படியே இருக்க அதிலிருந்து முளைக்கும் குறும்பும் துன்பமுமான செயல் நீக்கப்பட வேண்டும் என்பதே அதனுடைய திரண்ட பொருளாகும் என்று உணர்தல் வேண்டும்,

'செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் அவித்து' என்று குறட்பாவில் காண்கின்றோம், இங்கு அவித்தல் என்பது நகையினை அதாவது நகைத்து மகிழ்தல் என்பதனை அறவே ஒழித்து நீக்க வேண்டும் என்பதாகாது, ஏனெனில் 'நகுதல்' என்பது நல்லதொரு பண்பாடாகு மன்றோ! நீக்கி ஒழுக வேண்டுமென்று ஆசிரியர் வற்புறுத்துவ தெல்லாம், 'சேர்ந்த இருவர் நகைத்தல்' என்பதேயாகும். ஆதலால் தான் 'சேர்ந்த நகை' என்று கூறினார்.

'அவித்தல்' என்பது குறிப்பான அளவில் வேகவைத்தல் என்னும் பொருள்படுவதாகும். உணவுப் பொருள்களை வேக வைத்தல் என்பது நாம் அறிந்ததே யாகும். நன்றாக வேக வைத்து உண்ணுவதே நன்மை தருவதாகும் என்பது வெளிப்படையான மருத்துவ உண்மையாகும்.

வேக வைத்த பிறகு பொருள்கள் உருவம் தெரியாமல் வேக வைப்பதற்கு முன்னர் இருந்த தோற்றமும் இல்லாமல் மறைந்து போதல் உண்டு. அதனுடைய குணமும் மாறி விடும் என்பதும் இயல்பே யாகும். ஆனால் 'அவித்தல்' என்பதற்கும் 'வேக வைத்தல்' என்பதற்கு முள்ள நடைமுறைப் பழக்க வேறுபாட்டினை நாம் அறிந்துணர்தல் வேண்டும். பழக்கத்தில் நாம் பேசுவதைக் கண்டுள்ளோம். ஒரு 'வேக்காடு' காட்டுதல் என்று சிலர் சொல்வதுண்டு.

அதாவது உருவத் தோற்றம் என்பது அப் பொருளுக்கு இதனால் மாறுதல் உண்டாகி விடுவதில்லை. ஆனால் அதனுடைய இயற்கையான குணம் மாறி முளைப்புத் தன்மை அற்றுவிடும். இவ்வாறு அளவு கொண்டு 'அவித்தல்' என்னும் சொல்லினைப் புரிந்து சிந்திக்கும்போது அச் சொல்லின் நயமும் சிறப்பும் விளங்கும்.

பொறிவாயில் ஐந்துஅவித்தான், பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

என்ற குறட்பா திருக்குறளில், முதல் அதிகாரத்தில், இறைவனைப் பற்றி விளக்கம் தருகின்ற முறையில் காணப் படுவதாகும்.

இறைவனைக் குறிக்கும்போது 'பொறிவாயில் ஐந்து அவித்தான்' என்று கூறுகின்றார். இறைவனை அவன், அவள், அது என்ற மூன்று பெயர்களினாலும் அழைத்தல் இறைமுறை இலக்கணமென்று கூறிக்கொள்ளுவ துண்டு.

மெய், வாய் கண், மூக்கு, செவி ஆகிய ஐந்தும் பொறி களாகும். இவைகளைத்தான் ஐம்பொறிகள் என்று வழக்கில் வைப்பதுண்டு. இவைகளை வழிகளாகக் கொண்டு தான் ஐந்து ஆசைகளும் பிறக்கின்றன. இந்த ஐந்து பொறிகளினால் ஏற்படும் ஐந்து புலன்களை ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்று கூறுவர்.

பொறிகளின் வழியே நிற்கும் புலன்களும் புலன்களினா லாகிய ஆசைகளையும் அவித்தல் வேண்டும் என்பதே, 'பொறி வாயில் ஐந்து அவித்தான்' என்று தொடங்கும் குறளடிச் சொற்கள் கொண்டுள்ள செறிந்த பொருளாகும்.

'அவித்தல்' என்பது அவைகளின் செயல்களை ஒழித்து அழித்தல் என்பதன்று, அவைகளினுல் முளைக்கும் குறும் பான தீய ஆசைகளைப் போக்குதல் என்பதாகும். விரி வாகச் சிந்தித்து ஆழ்ந்த பொருளறிந்து தெளிதல் வேண்டும்.

முனிவர் :

இங்ஙனமே, 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரத்தில் வரும் குறட்பாவினையும் கண்டு தெளிதல் வேண்டும்.

*ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்*
*இந்திரனே சாலும் கரி.*

இக் குறட்பாவில் முற்றும் துறந்த முனிவர்களின் சிறப் பியல்பும் ஆற்றலும் கூறப்படுகின்றன. 'அவித்தான்' என்பது அடக்கினான் என்றே பொருள்படும். அச் சொல்லின் மூலகாரணமான பொருட்செறிவினை மேலே கண்டோம். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து பொறிகளையும் அழித்துவிடுதல் என்றோ அல்லது அவை களில் உண்டாகும் செயல்களை அடக்கி ஒடுக்கி விடுதல் என்றோ பொருளாகாது.

அவைகளினால் உண்டாகின்ற ஆசைக் குற்றங்களைக் களைந்து அடக்கி நீக்குதல் என்பதே பொருளாகும். எனவே, அப்படிப்பட்ட ஆற்றல் நிறைந்தவர்களின் பெருமையினை இக் குறட்பாவினால் சிறப்பித்தார்.

முனிவர்களின் சிறப்பினைக் கூறவந்த இடத்தில் இந்திரன் கதையினையும் குறிப்பிட்டார். இந்திரனே அழிக்கப்பட்டு விடுவான் என்பதாம். தேவலோகத்தில் உள்ள தேவர்களுக்கெல்லாம் தலைவனானவன் இந்திரன். அவர்களுடைய அரசனே இந்திரன். இவனைத் தேவேந்திரன் என்றும் கூறுவர். இவன் இந்திர போக இன்பம் என்று சொல்லப்படுகின்ற அவ்வளவு இன்பத்தினை அனுபவிப்பவன்.

இப்படிப்பட்டவனே முனிவர்களின் ஆற்றலினால் அழிந்தான் என்பதாகும். இதுதான் இக்குறட்பாவில் கூறப்பட்டுள்ள கதையாகும். ஐந்தினையும் அடக்கிய முனிவர்களுடைய ஆற்றல் மிகச் சிறந்ததென்பது உலகறிந்த - இயற்கையோடியைந்த - உண்மையாகும். அதனைச் சிறப்பித்தலே ஆசிரியரின் குறிக்கோளும் கொள்கையுமாகும்.

**ஐயங்கள் :**

திருக்குறளில் சில இடங்களில் பழங்காலப் புராண இதிகாச கதைக் குறிப்புகள் காணப்படுகின்றன. அவைகளில் ஒன்று விசும்புளார் என்று குறிக்கப்படுகின்றவானவர்களின் கோமானாகிய இந்திரன் எனப்படும் தேவர்களின் அரசனானவன் அழிந்த கதையுமாகும்.

இப்படிப்பட்ட கதைக் குறிப்புகள் வருகின்ற இடத்தில் திருக்குறள் படிக்கும் அன்பர்களுக்கு ஐயப்பாடுகள் தோன்றுகின்றன. அந்த ஐயங்களைத் தெளிவு படுத்துதல் நமது கடமையாகும்.

திருவள்ளுவர் இப்படி நிகழ்ந்த வரலாறுகளை நம்பினர் என்பதற்குக் கடுகளவேனும் ஆதாரம் எங்குமே இல்லை. இதனை முதலில் தெரிந்து தெளிதல் வேண்டும். மேலுலக இன்பங்களை வெறுத்தும் கீழ்மைப்படுத்தியும் கூறுவதாகக் காணுகின்ற இடங்களும் குறட்பாக்களில் உண்டு.

திருவள்ளுவர் தமது அரிய நூலினை எழுதிய காலத்தில் இத்தகைய கதைகளும் வரலாறுகளும் மக்களிடையே ஆழமாகப் பதிந்திருந்தன வென்பது மட்டும் மறுக்க முடியாத உண்மையாகும். எனவே மக்களுக்கு உண்மை யுணர்த்த வந்த உலக ஆசான் அறநெறிப் பாதையில் மக்களை அழைத்துச் செல்லும் முறையில் அவர்கள் உள்ளத்தில் நிலவி இருந்த கதை முறைகளையும் எடுத்துக் காட்டி அப்படிப்பட்ட கதைகளில் படிந்தும் பதிந்தும் உள்ள மக்களின் உள்ளங்களைப் புண்படுத்தாதவாறு அக் கதை வரலாறுகளை எத்தகைய முறையில் அமைத்துக் காட்ட வேண்டுமோ அவ்வாறே அமைத்துக் காட்டி அறநெறி மெய்யுரைகளைப் போதித்து வெற்றி கண்டார்.

இந்திரன் என்பவன் அழிக்கப்பட்டான் என்ற குறிப்பு ஆசிரியரின் கருத்திற்குத் தேவைப்பட்டதாகவும் முனிவர் களின் பெரும் ஆற்றலினைக் கண்டறிய உதவியதாகவும் எண்ணியபடியால் அக் கதையும் கூறப்பட்டதென அகல் என்றும், விசும்பு என்றும் ஆய்ந்த சொற்கள் கோமானாகிய இந்திரன் பெருமை புலப்படவும் அவனினும் ‘ஐந்த வித்தான்’ ஆற்றலுடையவன் என்பதை அறிதல் வேண்டும். ஆசிரியர் குறிப்பாகக் காட்டுகின்ற கதைகளில் வரும் நிகழ்ச்சிகளை நம்பினாரா இல்லையா என்னும் ஐயங்கள் தெளிவாகிவிடுகின்றன.

‘நகுதல்’ என்பதானது எப்படிப்பட்ட முறையில் எப்படிப்பட்ட இடத்தில் தகாததாக முடியும் என்பதை விளக்கும் குறட்பாவினைக் கண்டோம். வாழ்க்கைச் சம்பவங்களில் ‘நகுதல்’ என்பது எப்போதும் எல்லா

இடங்களிலும் ஒரே மாதிரியான பொருளினைத் தருவ தாகாது என்பது தெள்ளத் தெளிய விளங்கிவிட்டது.

தூது :

உலக மேதைகள் ஒன்றுபடுகின்ற வாய்ப்புகளில் நகைத்துச் சொல்லல் என்னும் இலக்கணம் மிகவும் இன்றி யமையாத பயனைத் தருவதால் அதனையும் ஆசிரியர் ஒரு நல்ல பண்பாக அமைத்துக் காட்டுகின்ற இடம் தூதுவர்களைப்பற்றிப் பேசுகின்றபோது வருகின்றது.

அரசியல் உலகம் வள்ளுவர் நூலில் பெரும் பகுதி யினைக் கொண்டுள்ளதாகும். அவ் வுலகில் தூதுவர்கள் பெறுகின்ற இடம் மிகத் தெளிவாகவும் ஆழ்ந்த பொரு ளுள்ளதாகவும் அமைக்கப்பட்டுள்ளது.

அமைச்சர்கள் போன்று மிகவும் பொறுப்பான பணி புரிபவர்கள் தூதுவர்களாவர். அமைச்சர் பதவிக்கு ஒப்பக் கருதப்பட வேண்டிய பதவியே தூதுவர்கள் பணியுமாகும்.

பிற நாட்டிற்குத் தூது செல்லும் தலைவர்களை இரண்டு வகையாகப் பிரித்துக் கூறுவதுமுண்டு. ஒரு வகையினர் தமது நாட்டு மன்னர் என்ன செய்திகளைச் சொல்லி அனுப்புகிறார்களோ அவைகளைத் தக்க முறை யில் எடுத்துக் கூறிப் பக்குவமாக நடந்து திரும்ப வேண் டியவர்களாகக் கருதப்பட வேண்டியவர்கள்.

மற்ற வகையினர் இன்னும் மேம்பட்டவர்களாகக் கருதப்பட வேண்டியவர்கள். தம் நாட்டுக் கருத்துகளை வேற்று நாட்டுத் தலைவர்களுக்கு எடுத்துக் கூறி, கருத்து களைத் தம்முடைய விருப்பப்படிக் கலந்து பேசி முடிவு எடுத்துத் தம்முடைய நாட்டுக்கேற்ற நன்மைகளைத் தேடி வருபவர்களாவர். இந்த இரண்டாவது வகையான தூது வர்களை மிகமிகப் பொறுப்பான சிறப்பான செயல்களுக் காக வெளி நாடுகளுக்கு அனுப்புவார்கள்.

பொதுவாகக் கூறும்பொழுது தூதுவர்கள் நல்ல தோற்ற முள்ளவர்களாகவும், அறிவு நிறைந்தவர்களாகவும் ஆற்றல் மிகுந்தவர்களாகவும் உலகியலறிவு செறிந்தவர் களாகவும் இருத்தல் வேண்டும்.

வெளி நாட்டு மன்னர்களிடமும் அமைச்சர்களிடமும் பழகும் போதும் நமது நாட்டு முன்னேற்றக் கருத்து களைப் பேசும்போதும் பயனல்லாதவற்றைப் பேசாமல் பொருள் நிறைந்த கருத்துகளைப் பேசி, தக்க நேரத்தில் நகைச்சுவையாகவும் கருத்துகளை எடுத்து விளக்கித் தமது நாட்டுக்கு நலம் தேடி வருதல் வேண்டும். நகைச் சுவையினை மிகவும் பயனுள்ள சிறப்பான இடத்தில் அமைக்கின்றார் ஆசிரியர் என்றால் அந்த இடம் இதுவே என்று கூறுதல் வேண்டும்.

'நகச் சொல்லி நன்றி பயப்பதாம் தூது' என்று ஒரு குறட்பா கூறுகிறது. வேற்று நாட்டரசர்கள் மனம் இசை யாமல் இருப்பார்களே யானால் அவர்களிடம் கொடுமை யான சொற்களை நீக்கி இனிய சொற்களால் மனம் மகிழச் சொல்லித் தன் நாட்டுத் தலைவனுக்கு நன்மையைப் பயப்பவனே தூதனாவான் என்பதாம்.

அறிவுடன் கூரிய இயற்கையறிவு படைத்தவனே தூதனாக இருக்கும் தகுதியுள்ளவன். அறிவும், உருவும், ஆராய்ந்த கல்வியும் ஆக இம் மூன்றும் திறம்பட நிறைந் திருப்பவனே தூதனாவான். இது தூதனுக்கு இருக்க வேண்டிய பல குணங்களில் ஒரு குறிப்பாகும். தூதர் களுக்கும் அமைச்சர்களுக்கும் இருக்கவேண்டிய திறமை களைப் பற்றிப் பழங்காலத்தில் பல கதைகளை அமைத்து நூல்கள் எழுதி வந்தனர்.

**வேலைக்குத் தக்கவன் :**

ஓர் அரசன் தனது நாட்டுக்கு நல்ல தூதுவன் ஒருவனை விரும்பினான். தக்கவன் இல்லாமல் சிந்தித்துக்கொண்

டிருந்தான். அப்போது அவனுடைய உறவினன் ஒருவனை அவ் வேலைக்கு அமைக்க வேண்டுமென்று உறவினர் பலர் அரசனை வற்புறுத்தினார்களாம். அரசன் அதற்கு இணங்கவில்லையாம். மேலும் மேலும் உறவினர்கள் வற்புறுத்தினார்களாம்.

அரசன் உறவினர்களைச் சமாதானப்படுத்தியும். தூதுவர்கள் மிகமிகத் திறமைசாலிகளாவும் உலகிய லறிவு நிறைந்தவர்களாகவும் இருத்தல் வேண்டும் எண்ணும் பல உண்மைகளை எடுத்துக் கூறியும் உறவினன் என்பதற்காக வேண்டிப் பொறுப்பான பணியில் அமர்த்தக் கூடாது என்று மறுத்துஞ் சொன்னான். இவ்வாறு எடுத்துக் கூறித் தன்னிடத்தில் முன்னாள் அமைச்சராக இருந்தருடைய மகனை அத் தூதுவன் வேலைக்கு அமர்த்துவதற்கு முடிவு செய்திருப்பதாகவும் கூறினான்.

இதனைக் கேட்டதும் உறவினர்கள் கோபங்கொண்டு அரசனுக்கு எதிராகப் பேச ஆரம்பித்தனர். உடனே அரசன் அவர்களை அழைத்து ஒரு யோசனை கூற அவர்களும் கேட்டு அதற்குச் சம்மதித்தனர். தன் உறவினனையும் அமைச்சர் மகனையும் தனித்தனி நாட்டுக்கு அனுப்புவதென்றும் அதுவே திறமையைச் சோதிக்கத் தக்க வழியென்றும் எல்லோரும் ஒப்ப முடிவுசெய்தனர்.

அரசன் உறவினர்களுடன் கலந்து அவர்களது திறமையை எப்படிச் சோதிப்பது என்று முடிவுசெய்தான். உறவினனிடத்திலும் அமைச்சர் மகனிடத்திலும் தனித்தனியாகச் சிறுசிறு பெட்டிகளைக் கொடுத்து அவைகளை அந்தந்த ஊர் அரசனிடத்தில் கொடுத்துவரச் சொன்னான். அந்த நாட்டு அரசர்கள் ஏதேனும் கேள்வி கேட்டால் அதற்குத் தக்க பதில் கூறி வருமாறும் பணித்தான்.

இருவரும் அரசன் சொல்லியபடி வெவ்வேறு நாட்டுக்குச் சென்றனர். பெட்டிக்குள் என்ன வைக்கப்

பட்டிருக்கிற தென்று அவர்களுக்குத் தெரியாது. திறந்து பார்க்காமல் வெளி நாட்டரசர்களிடம் கொடுக்கவேண்டும் மென்பது அரசனின் கட்டளை யாயிற்றே.

அரசனின் உறவினன் தன்னைப் போகுமாறு சொல்லிய ஊருக்குச் சேன்றான்; அந் நாட்டு மன்னனைக் கண்டான்; பெட்டியைக் கொடுத்தான். அந்த அரசன் பெட்டியை வாங்கியவுடன் அதனைத் திறந்து பார்த்தான்; திடுக் கிட்டான். அவன் முகத்தில் கோபக் குறி தாண்டவமாடிற்று. தூதுவனாக வந்த அரசனின் உறவினனை அப் பெட்டிக்குள் இருப்பதைக் காட்டி, ''இவைகளை அனுப்பித் தன்னைக் கேவலப்படுத்திய காரணம் என்ன?'' என்று கேட்டான்.

அப்போதுதான் அரசனின் உறவினனும் அப் பெட்டிக் குள் இருந்தவைகளைக் கண்டான். 'விபூதி' போன்ற சாம்பலும் 'உரோமமும்' (சடை முடிமயிர்) அப் பெட்டிக் குள் வைக்கப்பட்டிருந்தன. அரசனின் உறவினனுக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. விழித்தான். அந் நாட்டு அரசனின் கோபம் அதிகமாயிற்று. இந்த இரண் டினையும் அனுப்பி இருப்பதிலிருந்து தன்னை இழிவாகக் கருதிப் போருக்கு அழைக்கின்றான் என்று முடிவுசெய்து விட்டான்.

உடனே தூதுவனாக வந்த அரசனின் உறவினனிடம் தான் போருக்கு அஞ்சியவனில்லை யென்றும் போர் செய்யத் தயாராக இருப்பதாகவும் சொல்லி அனுப்பினான். அத்தனையும் அப்படியே கேட்டுவிட்டு ஊர் திரும்பித் தன் அரசனிடம் நடந்தவைகளைக் கூறினான். அரசனும் உறவினர்களும் மிகவும் கவலைப்பட்டனர். இன்னும் அமைச்சன் மகன் திரும்பி வாராததால் அவன் என்ன சேதி கொண்டு வருவானோ என்று காத்திருந்தனர்.

**அறிவு :**

அமைச்சனின் மகனும் தனக்கென்று குறிப்பிட்ட நாட்டு மன்னனிடம் சென்றான். தன் அரசன் கொடுத்த

பெட்டியை அவனிடம் தந்து வணக்கம் செலுத்தினான். அந்த அரசன் பெட்டியைத் திறந்து பார்த்தான். அமைச்சன் மகனும் அப் பெட்டிக்குள் இருந்தவைகளைக் கண்டான். அவைகளைக் கண்ட அந்த அரசன் ஒன்றும் புரியாமல், வந்த தூதுவனைப் பார்த்தான்.

உடனே தூதுவனாகச் சென்றிருந்த அமைச்சன் மகன் புன்முறுவல் பூத்தான். பின்வருமாறு அரசனிடம் சொல்ல ஆரம்பித்தான். ''அரசே! எங்கள் மன்னர் சென்ற வாரம் அரண்மனையில் யாகம் செய்தார். அந்த யாகத்தில் ஒரு தெய்வீகப் பூதம் தோன்றிற்று. அப்பூதம் அரசருக்கு விபூதியையும் தனது சடாமுடியையும் பிரசாதமாக அளித்தது. அப்பிரசாதத்தைப் பல அரசர்களுக்கும் எங்கள் மன்னன் அனுப்பி இருக்கிறூர், தங்கட்கும் கொடுத்துவரச் சொன்னார்'' என்று கூறினான் அமைச்சன் மகன்.

உடனே அந்த மன்னனுக்குப் பெருமகிழ்ச்சி ஏற்பட்டது. தனது நன்றியைத் தெரிவிக்குமாறு சொல்லி வந்த தூதுவனுக்கும் தக்க சன்மானம் கொடுத்து அனுப்பினுன். திரும்பி வந்த அமைச்சன் மகன் தன் அரசனிடத்திலும் உறவினர்களிடத்திலும் நடந்தவற்றைக் கூறினுன்.

இதனைக் கேட்ட அரசன் அவனுடைய சமயோசித புத்தியை வியந்தது மட்டுமன்றித், தூது செல்பவர்களுக்கு இருக்கவேண்டிய நுட்பமான அறிவினை எல்லோருக்கும் எடுத்துக் கூறி அவனையே தன் தூதுவனாக அமர்த்திக் கொண்டான். இவ்வாறாகப் பழங்காலக் கதைகள் பல எடுத்துக்காட்டுகளாகக் கூறுவதுண்டு.

நல்ல முறையில் சிறந்த பேச்சு வல்லமையுள்ளவனே தூதுவனுக இருக்கத்தகுதியுள்ளவனாவான் காலத்திற்கும் இடத்திற்கும் நேர்ந்தவாறு அறிவுடன் பொருந்திய கருத்துகளைக் கூறும் ஆற்றல் மிகுந்தவனே அப் பணியை வெற்றிகரமாக முடிக்கவல்லவன்.

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது.

இவ் வரிய குறட்பாவின்கண் எத்துணைப் பெரிய கருத்துரை அடங்கியுள்ளதென்பதனை உய்த்துணர்ந்து அறிவார் நன்குணர்வர். இக் குறட்பாவில் நான்கு உண்மைகளை ஆசிரியர் தருகின்றார்.

தூதுவன் சொல்லக்கூடியவைகளைத் தொகுத்துச் சுருக்கமாக விளங்குமாறு சொல்லவேண்டும். பேசுகின்ற போது வெம்மையான - சுடுகின்ற - கடுமையான - சொற்களைச் சொல்லக்கூடாது. மூன்றாவதாக, சில சுவையில்லாத செய்திகளைச் சொல்லவேண்டியிருந்தால் அவைகளைக் கேட்பவர்கள் மனமகிழும்படி இனிய சொற்களால் சொல்லுதல் வேண்டும். நான்காவதாக, அத் தூதுவன் பேசுகின்ற அவ்வளவும் தனது நாட்டுக்கு நன்மை பயப்பனவாகவும் இருத்தல் வேண்டும்.

'சொல்லுதல்' என்பது ஊன்றிச் சிந்திக்கவேண்டியவொன்றாம். ஆசிரியர் பேசும் ஆற்றலினை மிகவும் நுணுக்கமான திறம் செறிந்த பயன் தருகின்ற செயலாகக் குறிப்பிடுகின்றார். பிறருக்கு நன்றாக விளங்குமாறு எடுத்துரைத்தல் எளிதில் முடியக்கூடிய ஒன்றன்று. நாள் பலவாகப் பயின்ற பின்னரே அந்த ஆற்றல் ஒருவருக்கு வருதல் முடியும்.

அவ்வாறு எளிதாகவும் பிறருக்கு விளங்கிப் புரியுமாறும் கூறுதலோடு கேட்பவர்கள் மனமகிழ்ச்சி கொள்ள நகைச் சுவையுடன் தான் சொல்லும் கருத்து நழுவாமல் கூறுதல் இன்னும் கடினம் என்று கூறுவர். ஆகவேதான் வேற்று நாட்டுத் தலைவர்கள் இன்புறக் கேட்குமாறு சொல்லுதல் வேண்டும் என்று கூறவந்த இடத்தில் 'நகச் சொல்லி' என்று குறிப்பிட்டார்.

இக் குறட்பாவில் சொல்லுதல் என்பதனைப் பொதுவாக அமைத்துக்கொண்டு, 'தொகச் சொல்லுதல் நகச்

சொல்லுதல்' என்று இரண்டு முறை சொல்லுதல் என்பதனை வற்புறுத்தினார். தொகச் சொல்லுகின்றபோது விருப்பமுடன் கேட்பார்கள் என்பதும் நகச்சொல்லும்போது மனமகிழ்ந்து ஏற்றுக்கொள்வார்கள் என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டன.

பேசுகின்ற ஆற்றலைக் குறிப்பிடுங்கால் இரண்டு வகையாகப் பிரித்துப் பார்க்கலாம். ஒன்று பிறரிடம் பேசுவது : மற்றொன்று சபையில் - பலர் முன்னிலையில் விரிவுரையாற்றிப் பேசுவது. இரண்டிற்கும் பொதுவாகக் குறிப்பிட்டுக் காட்டுவதே சொற்களின் சிறப்பாகும் என்பதாம்.

நா :

மனித உறுப்புகளில் மிகமிக ஆற்றலுடையது 'நா' என்பதாகும். ஏனைய பிற உறுப்புக்களை யெல்லாம் இன்றியமையாத முறையில் வைத்துப் பேசினாலும் 'நா' மிகவும் வன்மை வாய்ந்தது என்பது யாரும் மறுக்க முடியாத உண்மை.

ஆதலால் 'நா' வினைக் காப்பாற்ற வேண்டும் என்னும் கருத்தினை ஆசிரியர் மிகவும் அழுத்தமாகக் கூறி வைக்கின்றார். அந்த 'நா' வினைப் பற்றிப் பேசும்போது நாம் திகைத்து வியந்து மகிழும்படியான உண்மையொன்று வெளிப்படக் குறட்பாவினைத் தருகின்றார்.

நமது உடம்பில் இருக்கின்ற உறுப்புக்களில் எப்போதும் தண்ணீரிலேயே அஃதாவது ஈரமான இடத்திலேயே இருக்கும் உறுப்பு இந்த நா ஒன்றுதான். நாவில் எப்போதும் தண்ணீர் இருந்து கொண்டே இருக்கும். இது வெளிப்படையான உண்மை.

தண்ணீரில் இருக்கும் பொருள் அல்லது ஈரமான இடத்தில் இருக்கும் பொருள் சுடாது என்பது இயற்கை விதி. குளுமையாகவும் குளிர்ந்த தன்மையுடனும் இருப்பதாகும். அப்படியிருக்க நாவினைப்பற்றிப் பேசவந்த இடத்தில்

குளிர்ந்த நீரில் இருக்கும் நா, 'சுடும்' என்று ஆசிரியர் கூறுகிறார் என்றால் நாம் சிந்திக்கத்தானே வேண்டும்.

நா சுட்டுவிடும் என்று குறிப்பதெல்லாம் நாவினால் சொல்லக் கூடிய சொற்கள் என்பதாகும். எனவே சொற்கள் அவ்வளவு கூர்மையான ஆற்றலுள்ளவை என்பதும் அவற்றைச் சொல்லுகின்ற நா மிகவும் பலம் பொருந்திய தென்பதும் சுட்டிக்காட்டப்பட்டது. குறட்பாவினைக் காணுவோம்.

*தீயினாற் சுட்டபுண் உள்ஆறும் ஆறாதே*
*நாவினால் சுட்ட வடு.*

தீயானது சுடும் என்றால் நாம் அப்படியே ஏற்றுக்கொள் வோம். ஏன் : நெருப்புக்கு எரிக்கும் தன்மை யுண்டு வெப்பமும் உண்டு. ஆனால் நா சுடும் என்று கூறியதில் கருத்தாழம் அதிகம் இருக்கின்றதன்றோ! மேலும் தீயினை விட அதிக வன்மை பொருந்திய வெம்மை நாவில் இருக் கிறதே !

தீயினால் சுட்ட புண் ஆறிவிடுமே. ஆனால் நாவினால் சுட்டது ஆறி மறையும் என்று கூறாது என்றென்றும், வடுவாக இருந்துகொண்டே இருக்கும் என்றல்லவா கூறி விட்டார். இதனை விரிப்பில் பெருகும், ஆதலால் சொற் களை அளவோடும் சுருக்கமாகவும் பயன்படுத்த வேண்டும் என்பதாம்.

பெரும் புகழ் அடைந்து வாழ்ந்த பாண்டிய மன்னன் சிறிது தவறாகப் பேசியதால், அவன் கூறிய சொற்கள் குற்றம் செய்யாத கோவலனைக் கொலை செய்யுமாறு செய்து விட்டனவே. கோவலன் குற்றம் செய்தவன் என்று பொற்கொல்லன் பாண்டியனிடம் கூறினானாம். உடனே பாண்டிய மன்னன், பொற்கொல்லனை நோக்கி, 'கோவல னைக் கொல்லச் சிலம்புடன் கொண்டு வருக' என்று சொல்ல நினைந்து, நாவினைக் காப்பாற்ற மறந்து, காவலரை

அழைத்து 'கோவலனைக் கொன்று சிலம்பினைக் கொண்டு வருக' என்று கூறிவிட்டானாம்!

என்னே சொற்களில் சிறிது மாற்றம் செய்த விளைவு! கோவலன் கொலை செய்யப்பட்டான். பாண்டிய மாநகரம் தீக்கிரையாயிற்று. இவ்வாறு சொற்களின் ஆழப் பொருள் களைப் பலவாறு விளக்கிக்கொண்டே போகலாம். அவ்வாறு கூறிவருகின்றபோது நகைச்சுவை கலந்த சொற் கள் எவ்வளவு இனிமையாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கும் என்பதனைப் பலப் பலவாக விளக்கவும் வேண்டுமோ?

**கவிராயர் :**

அண்மையில் தமிழ்நாட்டில் பெருங்கவிராயர் ஒருவர் வாழ்ந்தார். அவரின் பேச்சாற்றல் - சொல்லாற்றலினைப் பற்றி வியந்து கூறுவதுண்டு. அவரை ஆதரித்த குறுநில மன்னரிடம் அவர் நீண்ட நாட்கள் தங்கியிருந்தார். ஓய்வு கிடைத்தபோதெல்லாம் மன்னர் கவிஞரை அருகில் வைத்துக்கொண்டு உரையாடி மகிழ்வதுண்டு.

ஒரு நாள் கவிஞரிடம் பேசிக்கொண்டிருந்தபோது மன்னர் கவிஞரைப் பார்த்து 'இன்று சமையல் எப்படி? சாப்பாடு நன்றாக இருந்ததா?' என்று கேட்டார். அன்றைய தினம் செய்த உணவு உண்மையிலேயே நன்றாக இல்லை தான். ஆதலால் மன்னர் கேட்ட கேள்விக்குப் பதிலளிக் கையில் கவிஞர், 'இன்று சாப்பாட்டில் உப்புமில்லை; புளியு மில்லை' என்று கூறிவிட்டார்.

மன்னருக்குச் சமையற்காரன் மேல் கடுங் கோபம் வந்துவிட்டது. உடனே சமையற்காரனுக்குச் சொல்லி யனுப்பினார். சமையற்காரன் அஞ்சி நடுங்கிக்கொண்டு வந்தான். மன்னர் கவிஞர் கூறியதைக் குறிப்பிட்டு, "இனி இப்படிப்பட்ட தவறு செய்தால் உனக்குக் கடுமையான தண்டனை கிடைக்கும்" என்று கண்டித்து அனுப்பி விட்டார்.

சமையற்காரன் குலை நடுங்கிப்போனான். தனியாகக் கவிஞரைச் சந்தித்துத் தன்னைக் காப்பாற்றுமாறு வேண்டிக்கொண்டான். சமையலில் முன்னேற்றம் இருந்ததோ என்னவோ அவனுக்குத் தெரியாது.

மறுநாள் மன்னர் கவிஞரைச் சந்தித்தவுடன் முதற் கேள்வியாக உணவைப் பற்றிக் கேட்டார். ''இன்று எப்படிச் சாப்பாடு?'' என்று கேட்டார். உடனே கவிஞர் 'இன்று தேவாமிர்தமாக இருந்தது' என்று கூறினார். மன்னருக்கு இதைக் கேட்டதும் பேரானந்தம் உண்டாகி விட்டது. கவிஞரை நன்கு மகிழ வைத்துவிட்டோம் என்று பெருமிதம் கொண்டார்.

பின்னர்க் கவிஞரைப் பார்த்து, ''நேற்று சமையலில் உப்புமில்லை, புளியுமில்லை என்றீர்கள். இன்று தேவா மிர்தமாகச் சமையல் செய்து விட்டான் என்றீர்களே. அவ்வளவு விரைவில் இவ்வாறு அருமையாகச் செய்ய எப்படி மாறிவிட்டான்?'' என்று வியந்து கேட்டார்.

உடனே கவிஞர் தேவாமிர்தத்திலும் உப்பும் புளியும் இருக்காதே என்று கூறினர். மன்னனுக்கு அடங்காச் சிரிப்பு வந்து கவிஞரின் நகைச்சுவைப் பேச்சு முறையினை மிகவும் சுவைத்துச் சிந்தித்து ஆவன செய்தான். இவ்வாறு கருத்தாழமிக்க செய்திகளை நகைச்சுவையுடன் கூறுதல் நல்ல புலமைத் திறன் மிக்க அறிஞர்களுக்கே கூடும் என்பது உலகியல் உண்மையாகும்.

**குடிமை :**

'நகை' என்னும் பண்பாட்டிற்கு மகுடம் வைத்தது போன்றதோர் இடம் திருக்குறளில் காணப்படுகின்ற தென்றால், அது 'குடிமை' என்று கூறப்படும் அதிகாரமா கும். நற்குண நற்செயல்கள் இயல்பாக அமையப் பெற்ற

குடியில் பிறந்தவர்களைப்பற்றிக் கூறுவதுதான் 'குடிமை என்ற பகுதியாகும்.

அப் பெயரும் அக்கருத்தினையே வலியுறுத்துவதாக அமைந்திருப்பதைக் காணலாம். நற்குடியில் பிறந்தவர்களுடைய தன்மை என்று கூறப்படும்போது ஒழுக்கம், நாணுடைமை, வாய்மை முதலியன போன்ற சீரான பண்புகள் இயற்கையிலேயே தம்மிடம் கொண்ட பெரியார்களைப் பற்றிக் கூறுவதாகக் கொள்ளல் வேண்டும்.

அப்படிக் கூறிக்கொண்டு வருகின்றபோது நான்கு தலைசிறந்த பண்பாடுகள் கொண்ட குறட்பா வொன்று தருகின்றார். நற்குடியில் பிறந்தவர்களுக்கு இருக்கின்ற பற்பல அரிய குணங்களில் இந் நான்கும் இடம் பெறுவனவாகும். இந் நான்கு இன்ப குணங்களையும் வரிசைப் படுத்தி வெளியிடும்போது 'நகை' என்னும் பாண்பாட்டினையும் அந் நான்கில் ஒன்றாகக் கூறி முதலாவதாகவும் வைத்தார்.

நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

இக் குறட்பா விளக்கம் தேவையில்லாமலேயே எளிமையில் புரிந்துவிடக்கூடிய ஒன்றுதான் என்றாலும் இக் குறட்பா கொண்டுள்ள பெருங்குணங்கள் ஒவ்வொன்றும் எவ்வளவு விளக்கம் தந்தாலும் கொள்ளும் என்பது சிறப்பான கருத்தெனை அறிதல் வேண்டும்.

நகை என்று கூறியதால் முகமலர்ச்சியும், ஈகையென்றதால் பிறர்க்குதவும் அரிய குணமும், இன் சொல் என்றதால் மனத் தூய்மையுடன் பிறரிடம் அன்பு காட்டிப் பழகும் பெருந்தன்மையும் இகழாமை என்றதால் மனிதப் பண்பாட்டின் தலை சிறந்த குணமும் கூறப்பட்டன.

'வகை யென்ப' என்று விளக்கியதால் இவைகளெல்லாம் இயல்பாகவே தங்களுக்கு உரிய குணங்களாகக் கொண்டிருப்பார்கள் என்பது புலனாயிற்று.

'வாய்மைக் குடிக்கு' என்று கூறியதில் சிந்திக்கத் தகுந்த செறிவான கருத்தொன்றுண்டு. அஃதாவது எக்காலத்திலும் மாறுபாடில்லாத குடிவகையினைச் சேர்ந்தவர்கள் என்பதாம். வறுமை வந்த காலத்தில் சிலர் மாறுபட்டு விடுவது இயல்பு. அங்ஙனம் வறுமையே வந்து கொடுமைப் படுத்தினாலும் தங்கள் இயல்பில் மாறிவிடமாட்டார்கள் என்ற அருமையான பண்பாடு எடுத்தோதப்பட்டது.

'நகை' யென்று கூறியது, யாரிடமும் சிரித்தல் என்னும் பழக்கத்தைக் குறிப்பிடுகிறது என்பது மட்டுமன்று. மனிதனுக்கு முகமலர்ச்சி இன்றியமையாத அரிய சொத்தாகக் கருதப்பட வேண்டியதாயிற்று.

பெரிய மனிதர்கள் முகமலர்ச்சியுடன் தோன்றுவது பிற மக்களுக்கு எவ்வளவு பயனுடையதாக இருக்கும். பிறர் சேர்ந்து வாழ உதவுவதும் முகமலர்ச்சிதானே. கடுகடுத்த முகம் பிறரைப் பிரித்துத்தானே வாழ விடும். இப்படியான கருத்துகளை நாம் நடைமுறைப் பழக்கத்தில் அன்றாடம் கண்டுவருகின்றோம்.

**மலர்ச்சி :**

தேவைப்பட்ட சில கருத்துரைகளைப் பேசி வரு வருதற்காக ஒருவர் தெரிந்த ஒருவர் வீட்டுக்குச் சென்றார். சென்றதும் வீட்டிலிருந்தவர் வெளியில் வந்தார். வந்ததும், வந்தவரைப் பார்த்து, ''எங்கே வந்தீர்கள்?'' என்று கேட்டார். அதற்கு வந்தவர், ''உங்களைத்தான் பார்க்க வந்தேன்'' என்று கூறினார். 'அப்படியா, உட்காருங்கள்'' என்றார்.

பிறகு இருவரும் பேச ஆரம்பித்துப் பேசிக்கொண்டிருந்தனர். நாம் சிந்தித்துப்பார்க்கவேண்டிய நயமான உண்மை யொன்று இருக்கின்றது. வந்தவர் முதலில்,

'பார்க்க வந்தேன்' என்றுதானே கூறினார். 'பேச வந்தேன்' என்று கூறவில்லையே. நம்மை யறியாமலேயே நம்மிடம் இருந்துவரும் இயற்கைப் பண்பாடுகளை நாம் அறிந்துணரும்போது நமக்குப் பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது.

வந்தவர் உள்ளத்தில் இருந்த எண்ணம் என்ன? 'உங்களிடம் பல செய்திகளைப் பேசுவதற்குத்தான் வந்தேன். முகமலர்ச்சியுடன் காட்சியளித்து வரவேற்றால் பேசலாம் என்னும் எண்ணம் தோன்றும். அப்படி வர வேற்பிலேயே முகமலர்ச்சி யில்லை யென்றால், பிறகு எப்படி அளவளாவிப் பேசுவது என்று நினைத்துத் திரும்பி விடுவேன்' என்பதெல்லாம் வந்தவர் உள்ளத்தில் தோன்றிய எண்ணங் களும் சிந்தனைகளு மாகும்.

ஆதலால்தான் யாரையும் சந்திக்கின்றபோது நாம் 'பார்க்க வந்தேன்' என்று கூறுவது இயல்பாக அமைந்து விட்டது. முகமலர்ச்சி எவ்வளவு இன்றியமையாதது என் பதற்கு இதைவிட எடுத்துக்காட்டு தேவையில்லை.

மற்றும் பழக்கத்தில் காணப்படுகின்ற பல செயல் களைச் சிந்தித்துப் பார்க்கின்றபோது அன்றாட வாழ்க்கை முறைக்கு ஆசிரியர் அமைத்துக்காட்டும் உண்மைகள் எவ்வளவு பொருந்துவனவாக இருக்கின்றன வென்ற உண்மை தெளிவுறும்.

வாணிகம் செய்யும் ஒருவர் தன் பணியாளிடம் ஒரு வரைப் பார்த்துச் சில செய்திகளை அவருக்குச் சொல்லி வருமாறு அனுப்பினார்; பணியாள் சென்றான்; சென்று சிறிது நேரம் கழித்துத் திரும்பினான். வணிகர் அவனைக் கண்டு சென்று வந்த செய்தி என்ன வாயிற்று என்று கேட்டார். பணியாள், 'ஒன்றும் பேசவில்லை' என்றான். 'ஏன்' என்று கேட்டார். 'அவரிடம் ஒன்றும் பேச முடிய வில்லை' என்று கூறினான். 'ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?' என்று மீண்டும் வணிகர் கேட்டார்.

அதற்குப் பணியாள், "அவரிடம் பேசலாமென்று பார்த்தேனுங்க. அவர் மூஞ்சைக் காட்டுறாருங்க; அதனால் தான் பேசாமல் வந்துவிட்டேன்" என்று தனது பழக்கமான கொச்சைத் தமிழில் பேசினான். கடைக்காரருக்கு முதலில் அவன் கூறியது விளங்கவில்லை. சிந்தித்துப் பார்த்தார், பின்புதான் விளங்கியது. 'மூஞ்சைக் காட்டுறாரு' அஃதாவது 'முகத்தைக் காட்டுகிறார்' என்பதில் அப் பணியாளனின் கருத்து என்னவாக இருந்தது? 'முகத்தைக் கடுகடுத்துக் காட்டினார்' என்பதைத்தான் அவன் அவ்வாறு சொன்னான்.

இன்னும் கொஞ்சம் விளக்கிக் கூறப்போனால் மக்களுக்கு இருக்கவேண்டிய முகத்தை அவர் காட்டாமல் வேறு எதற்கோ இருக்கக்கூடிய முகம் போல அவர் காட்டியதால் அவன் பேசாமலேயே வந்துவிட்டான் என்பதுதான் தெளிவான பொருளாகும். மனிதனுக்கு இருக்கவேண்டிய முகமலர்ச்சியினை அவர் காட்டியிருப்பாரே யானால் பணியாள் பேசிவந்திருப்பான்.

பேசுவதற்கு வழி காட்டியாக இருப்பது மலர்ந்த முகமன்றோ? இனிமையான சொற்களைப் பேசுவதற்கு வழிகாட்டியாக—முதற்படியாக—வாயிற்படியாக இருக்கின்ற முகமலர்ச்சியினை எவ்வாறு ஆசிரியர் விளக்கி வைக்கிறார் என்பதைக் கூறும் குறட்பா அருமையாகக் காணப்படுகின்றது.

'அறமாவது என்னவென்றால், பிறரைக் கண்டபோதே முகத்தால் விரும்பி இனிதாகப் பார்த்து அதற்குப்பின் இருவரும் சேர்ந்தபோது மனத்தோடு பொருந்தி இனிய சொற்களைச் சொல்லுதலே ஆகும்' என்னும் கருத்தினை மெய்ப்பிக்கின்றது.

*முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி அகத்தானாம்*
*இன்சொல் லினதே அறம்*

இக் குறட்பாவில் - முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி - என்னும் சொற்கள் முகத்திற்குரிய இலக்கணத்தைக் கூறிவிடுகின்றன வென்று சொல்லலாம். இனிது நோக்குதல் என்பதற்கு முதற்காரணம் முக மலர்ச்சியாகும்.

முகமலர்ச்சி இனிது நோக்குகின்ற தன்மையினை உண்டாக்கு மென்றும் அதன் வழியாக இன்சொல் வரும் என்றும் அவ்வாறு வருகின்ற இன்சொல்தான் மனத்தோடி யைந்த உண்மையான இனிமை கொண்ட தென்பதும் உணர்த்தப்பட்டது. இவ்வாறு தோன்றுகின்ற முக மலர்ச்சியினைத்தான் 'நகை' யென்று அழகாகக் குறிப் பிட்டார்.

முகத்தில் தோன்றுகின்ற புன்முறுவல் நற்குடியில் பிறந்த நன்மக்களுக்கே உரியதென்றும் அது எப்போதும் காணப்படுவதென்பதையும் சொல்லி வைத்தார். 'உள்ளம்' தூய்மையாக இருந்தால்தான் அறமாகும் என்பதற்காக, 'அகத்தானாம்' என்று கூறினார்.

''முகத்தை நன்றாக வைத்துக்கொள்'' என்று சில சமயங்களில் குறிப்பாக மங்கலமான நேரங்களில் சொல் வதை நாம் கேட்பதுண்டு. 'நன்றாக வைத்துக்கொள்' என்றால், முகமலர்ச்சியுடன் இரு என்பதே பொருளாகும்.

ஒரு சிலர் அன்பினால் தங்கள் நண்பர்களிடம் பேசுவ துண்டு. தங்கள் ஊருக்கு வந்து போகவேண்டு மென்று கூப்பிடுவார்கள். அதற்கு மற்ற நண்பர் 'நேரமில்லை' என்று பதில் சொல்லுவார். உடனே அழைத்த நண்பர் அவரைப் பார்த்து, ''நீங்கள் அதிக நேரங்கூடத் தங்க வேண்டா! உங்கள் முகத்தைக் கொண்டுவந்து காட்டி விட்டுப் போங்கள்'' என்று வற்புறுத்தி வேண்டுவார்.

அந்த வார்த்தைகளில் காணப்படும் உட்பொருள் என்ன? முகமலர்ச்சிக்கு அவ்வளவு பெருமை உண்டென் பதும் மனிதப் பிறவிக்கே முகந்தான் உயிர்ப் பொருள்

இக் குறட்பாவில் - முகத்தான் அமர்ந்து இனிது என்பதும் தெள்ளத்தெளிய விளங்குவதாகின்றது. ஆதலால் இவ் வரிய நிகழ்ச்சிகளுக்கெல்லாம் மூல காரணமாக 'நகை' என்று கூறினர்.

**மனிதன் :**

சிரிப்பதையும் அழுவதையும் வைத்துக்கொண்டு அறவுரை புகட்டவந்த பெரியார் ஒருவர் கீழ்வருமாறு கூறினர் : ''ஏ! மனிதா! நீ பிறக்கும்போது அழுதுகொண்டு பிறக்கின்றாய்! உன்னைச் சுற்றிலுமுள்ளவர்கள் சிரித்து மகிழ்கின்றார்கள். பிறக்கும்பொழுது அழுதுகொண்டு பிறந்த நீ, இறக்கும்போது சிரித்துக்கொண்டு இறக்க வேண்டும். நீ பிறக்கும்போது சிரித்து மகிழ்ந்தார்களே, அவர்கள் நீ இறக்கும்போது அழவேண்டும். இதுவே மனித வாழ்க்கையின் குறிக்கோள்''—இப் பொன்னுரையினைப் பன்முறையும் நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

நாம் பிறக்கும்போது அழுதுகொண்டுதான் பச்சைக் குழந்தையாகப் பிறந்தோம். பிறந்தவுடனே தாய் தந்தை உற்றார் உறவினர் அத்தனை பேரும் 'குழந்தை பிறந்தது' என்ற மகிழ்ச்சியினுல் சிரித்து ஆனந்த முற்றார்கள்.

இதனை மறுத்து யாரும் வேறுபாடான கருத்தினைக் கூறிவிடமுடியாது. 'இறக்கும்போது சிரித்துக்கொண்டு இறக்க வேண்டும்' என்னும் தத்துவத்தில் அடங்கியுள்ள உண்மையினைத்தான் தெளிவுபடுத்த வேண்டும் இறக்கும் போது இறக்கப்போகிறவன் மன மகிழ்ச்சியுடன் எல்லோரிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு போகிறான் என்று சொல்ல முடியாது.

எப்படிப்பட்டவனும் இறக்கப்போகிறோம் என்று தெரிந்த மாத்திரத்திலேயே கவலைப்படுகிறான்; வேதனைப் படுகிறான்; ஏன் இறக்காமலேயே இருந்து விடக் கூடாது என்று கூட நினைக்கிறான்! ஏன் அப்படி நினைக்கவேண்டும் !

மனிதப் பிறவியின் உண்மையினையும் தன்மையினையும் உணராத காரணம் என்றுதான் கூறுதல் வேண்டும். மக்கட் பிறவியை யெடுத்ததனால் செய்துமுடிக்கவேண்டிய உயர்ந்த கடமைகளைச் செய்த பிறகு மனிதன் மனநிறைவு கொள்ளுதல் வேண்டும். ''நாம் உண்டு; நமது சுயநல வேலை யுண்டு'' என்னும் கண்மூடித்தனத்தில் வாழ்ந்து மறைவது மக்கட் பிறவியின் குறிக்கோள் ஆகவே ஆகாது.

செய்யவேண்டிய நற்செயல்களான மனிதக் கடமையினைச் செய்து முடித்து, அதன் பிறகு இறப்பு வருகின்ற போது அவன் தனக்குள் சொல்லிக்கொள்ள வேண்டியதாவது: ''இனி நான் இறந்தாலும் கவலையில்லை; எனது கடமையினைச் செய்து முடித்தேன்'' இவ்வாறு எண்ணி முடிவினை வரவேற்பவன்தான் சிரித்துக்கொண்டே இறப்பவனாகின்றான்.

ஆதலால்தான் 'இறக்கும்போதே சிரித்துக்கொண்டு இறப்பாயாக' என்று சுருக்கமாகக் கூறிவைத்தார்கள். உத்தமன் உலகை விட்டு மறைந்தான் என்றால் மக்கள் வருந்துவது இயல்பேதான். ஆதலால்தான் குழந்தையாகப் பிறந்தபோது சிரித்து மகிழ்ந்தவர்கள் இறந்தபோது அழவேண்டும் என்று கூறப்பட்டது. ஆனல் சிலர் இறந்தார்கள் என்றால் மக்கள் வருந்தி அழுவதில்லை என்பதும் உண்மைக்கு மாறுபட்ட தென்று கூறி விடமுடியாதது.

**ஈகை :**

'நகை' என்பதனைச் சேர்த்துவைத்து நான்கு அரிய பண்பாடுகளைக் கூறினாரல்லவா? அந்த நான்கும் புன்முறுவல் என்னும் சிறந்த குணத்துடனே பொருந்திய அருமையான குணங்களாகும். இரண்டாவதாக அமைந்த குணம் 'ஈகை' என்பதாகும்.

இக் குணம் பெரும்பாலும் நற்குடியில் பிறந்தவர்களிடத்தில் இயல்பாக இருப்பதாகும். பழக்கவழக்கத்தினாலும் இப் பண்பாடு வந்துவிடுதல் பாராட்டப்பட

வேண்டியதாகும். உலகத்தில் வாழும் மக்கள் ஒருவரோ டொருவர் ஆதரவு தந்து வாழ்வதுதான் இயற்கையின் விதியாகும். தனித்திருந்து வாழ்தல் யாருக்குமே எளிதான தன்று. பெரும் பெரும் நாடுகள் வல்லரசுகள் என்று பேசுகின்றபோதும் ஆதரவு இருப்பது இலக்கணமாகத் தான் அமைந்தது.

ஆனால் 'ஈதல்' - 'ஈகை' என்பதைப் பேசுகின்றபோது இல்லாதவர்களுக்குக் கொடுப்பதையே குறிக்கின்றோம். இன்னும் விளக்கமாகச் சொல்லப்போனால் 'ஈகை' என்பதனை உரியவர்களுக்குக் கொடுக்கும் பெருந்தன்மை என்று கூறுவர். இவ் வுயரிய பண்பாடு சிலரிடமாவது இருப் பதனால்தான் இவ் வுலகமே இருந்து வருகிறது என்று கூறுவர். இருப்பவர்கள் - இல்லாதவர்கள், அஃதாவது பொருள் இருப்பவர்களும் வறுமையாளர்களும் இவ் வுலகில் வாழ்வது இயற்கையே யாகும்.

இந்த ஏற்றத் தாழ்வுகள் இல்லாத நாடுகள் இருக் கின்றன என்று யாரும் கூற முடியாதல்லவா? வசதிகள் இருப்பவர்களுக்குக் கொடுப்பது ஈகையாகாது என்பதனை நன்கு புரிந்துகொள்ளுதல் வேண்டும். இல்லாத வறிஞர் களுக்குக் கொடுப்பதைத்தான் ஈகை என்று பற்பல விளக் கங்களைக் காட்டி ஆசிரியர் வள்ளுவனார் கூறியுள்ளார்.

புகழுடனும் சிறப்புடனும் வாழ்கிறான் என்பதற்கு அடிப்படையான காரணமே ஈகை என்பதாகும். 'ஈதல் இசைபட வாழ்தல்' என்கின்ற குறிப்பும் ஆசிரியர் வள்ளுவ னாரின் அரிய வாக்காகும். ஈகைத்தன்மையினால் மற்றவன் பயன் பெறுகின்றான் என்பது கருத்தாகக் கொண்டு விடுவதற்கில்லை. கொடுப்பவன் அடைகின்ற இன்பத் தினைத்தான் நாம் உணர்தல் வேண்டும்.

''ஈத்துவக்கும் இன்பம் அறியார் கொல்'' என்றொரு குறட்பா ஆரம்பமாகிறது. இக் குறட்பாவினால் முப்பெரும் உண்மைகளை எடுத்துக் கூறுகிறார். பிறருக்குக் கொடுப்ப

தனால் அடையும் இன்பம் மிகப் பெரிதாக இருக்குமே என்பதை அறியாமல் இருக்கின்றார்களே என்று கேட்கிறார். கொடுப்பதற்கு மனமில்லாமல் இருப்பவர்கள் தாம் வைத்திருக்கும் பொருளை நிலையாக அழிவில்லாதபடி வைத்திருக்க முடியுமா? அதுதான் இல்லையே!

அதுவும் ஒரு காலத்தில் இழக்கவேண்டியதுதானே! இழப்பதினால் ஏற்படுகின்ற துன்பம் எவ்வளவு கொடுமையானது! இத் துன்பத்தினைத் தெரிந்திருந்தும் கொடுத்து அதனால் வரும் இன்பத்தினை அறியாதவர்களை 'வன்கணவர்' (வன்கண்ணவர்) என்று ஆசிரியர் குறிப்பிட்டார். அஃதாவது கடுகளவேனும் இரக்கமில்லாத பாவிகள் என்பதாம்.

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடமை
வைத்து இழக்கும் வன்கண வர்.

தங்களுடைய உடைமைகளை என்றேனும் இழந்து தானே தீரவேண்டும் என்பதற்காக 'வைத்து இழக்கும்' கொடியவர்களாகின்றனரே என்று கடிந்து பேசுகிறார். இழத்தல் என்பதனால் பொருளை மட்டும் இழக்கிறார்கள் என்பது அன்று! அப் பொருளால் அடைய வேண்டிய அறப் பயனையும் இன்பத்தினையும் இழந்துவிடுகின்றார்களே!

ஈகையினால் ஏற்படும் மனமகிழ்ச்சி மிகச் சிறந்ததேயாகும். ஆதலால் 'உவக்கும்' என்று கூறி அதற்குப் பின்னரே 'இன்பம்' என்றும் அமைத்தார். மனித வாழ்க்கையின் அடிப்படைக் கொள்கையே இதுதான் என்பது ஆசிரியரின் முடிந்த முடிவாகும். பொருள் எப்போதும் அழியும் தன்மையதாகும். ஆதலால்தான் இழத்தல் என்பதும் இயல்பாயிற்று.

இல்லறத்தில் இருந்து வாழ்பவனுக்கு இப் பெரும் பண்பு தலையாக இருக்கவேண்டியதாயிற்று. உற்றார் உறவினர் சுற்றத்தார் என்று சொல்லப்படும் சொற்களினால் வருகின்றவர்களுக்கு ஆதரவு தருதல் 'ஈகை' என்ற

வரிசையில் வைத்துக் கூறப்படாததாக இருந்தாலும் ஈகைத் தன்மைக்கு அடிகோலுவதாக இருக்கும் நற்பண்பு என்றாவது கூறத்தான் வேண்டும்.

விருந்தினர் என்பவர்கள் எப்பொழுதோ நம் வீட்டிற்கு வருகின்றவர்கள். தமக்கேற்ற அளவு விருந்தினர்களைக் கூட உபசரிக்கும் நல்லெண்ணம் இல்லாதவர்கள் ஈகைத் தன்மைக்கு எங்ஙனம் இடமளிப்பார்களோ !

விருந்து :

'விருந்திருக்க உண்ணுன் வேளாளன்' என்றொரு பழமொழி யுண்டு. இது மிகச் சிறந்த கருத்தினைக்கொண்ட தாகும். வேளாளன் என்று குறிப்பாகக் கூறியதன் நோக்கம் எல்லோருக்கும் தெரிந்ததே யாகும். வேளாண்மைத் தொழில் செய்பவன் வீட்டில் எப்போதும் உணவுப் பொருள் இருந்துகொண்டே இருக்கும் என்பதும் ஒரு கருத்து. வேளாண்மைத் தொழில் செய்பவனுக்கு எப்போதும் பஞ்ச மில்லை என்பதும் அத் தொழில் செய்பவன் மிகத் தாராள மான எண்ணங் கொண்டவனாக இருப்பான் என்பதும் கண்கூடான மெய்யுரை யாகும்.

ஆகவேதான், இப் பழமொழி வந்தது. விருந்தினர்களை உபசரிப்பதில் மிகவும் பெருமைகொண்டவனாக இருப் பான் என்பதும், விருந்தினர்கள் வீட்டிற்கு வந்தால் அவர்கள் உண்ட பிறகே தான் உண்ணுவான் என்பதும் தோன்ற 'விருந்திருக்க உண்ணான் வேளாளன்' என்று கூறினார். இவ் வரிய பழக்கம் நற்குடியிற் பிறந்த நற்பண்பாளர்களுக்குத்தான் இன்றியமையாதது என்ப தன்று. மனிதத் தன்மை பெற்ற அனைவர்க்குமே ஏற்ற கருத்தாகும். இதற்கும் மேலான சிறந்த குணத்தினைத் தான் 'ஈகை' என்று கூறுவர்.

விருந்தினர்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்போது பழமொழிகளின் உரை நயத்தைப் பற்றி உரையாடிக் கொண்டிருந்தனர். 'விருந்திருக்க உண்ணான் வேளாளன்'

என்ற பழமொழிக்கு அர்த்தம் என்னவென்று நண்பர் கேட்டார். அதற்கு மற்ற நண்பர் உரை சொன்னாராம்.

'விருந்தினர் வீட்டில் வந்து பசித்திருக்க, வேளாளன் உண்ணான்–அஃதாவது அவ் விருந்தினர் எழுந்துபோகும் வரை சாப்பிடமாட்டான் என்பதுதான் பொருள்'–என்று சொன்னாராம். 'இருக்க' என்றால், விருந்தினர் வீட்டில் இருக்க 'உண்ணான்' வீட்டில் இருப்பவனே உண்ண மாட்டானாம். வந்தவர் போன பிறகுதான் உண்ணுவானாம்! இங்ஙனம் எண்ணுகின்றவர்களை மக்கள் என்னும் கணக்கில் வைக்காமல் மாக்கள் என்னும் பட்டியலில் தான் சேர்த்தல் வேண்டும்.

வாழ்வு ;

'உலகில் வாழ்வதனால் என்ன பயன்?' என்ற கேள்வியினைக் கேட்டு அதற்குப் பதில் கூறுமுகத்தான் ஆசிரியர் வள்ளுவனார் குறட்பா தருகின்றார். பயனுள்ள வாழ்க்கையாக வாழ்தல் வேண்டும். அந்த நோக்கமின்றி வாழ்தல் மனித வாழ்க்கை யாகாது. பயன் கொண்டு வாழ்கின்ற வாழ்வினைக் குறிக்க வேண்டியே அரிய குறட்பாவினை ஆசிரியர் தந்தார்.

ஈதல் இசைபட வாழ்தல்! அதுஅல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு.

இசைபட அஃதாவது புகழுடன் வாழ்வதற்குக் கல்வி, ஆண்மை இன்னும் இவை போன்ற குணங்கள் செல்வங்கள் காரணமாக இருப்பவை என்று பேசப்பட்டாலும் மக்கள் உயிர்க்குப் பயன் என்பது ஈகைதான் என்ற உயரிய தன்மை இங்கு நன்கு தெளிவாக்கப்பட்டது. ஊதியம் என்பது 'இலாபம்' என்ற கருத்தில் கருதப்படவேண்டியது என்றாலும், மக்கள் வாழ்க்கையினைக் குறித்துப் பேசும் பொழுது அதனைப் 'பயன்' என்றே அமைத்தார்.

உலகில் உயிர் வாழும் மக்கள் பிறவி யல்லாமல் ஏனைய பிற பிறவிகளுக்கெல்லாம் ஈதலும், இசைபட வாழ்தலும்

முடியாதாகையால், மக்கட் பிறவிக்குமட்டும் சிறப்பாக அமைந்துள்ளது இப் பண்பாடு என்பதை நன்றாக எடுத்துக் காட்ட வேண்டித்தான் 'மக்கள் உயிர்க்கு' என்று தெளிவு படக் காட்டினார்.

இன்பமாக இருக்கும்போது ஈகைக் குணம் சிலருக்கு எதிர்பாராத முறையில் வந்துவிடுதல் உண்டு. துன்பக் கவலையில் இருக்கும்போது அங்ஙனம் வாராமல் இருந்து விடுதல் இயற்கை யென்றுகூட நாம் கூறலாம். இன்பமாக இருக்கும்போதும் எள்ளளவும் ஈகைக் குணம் என்பதே தோன்றாத பிறவிகள் இருந்தால் அவைகளை நாம் என்ன வென்று கூறுவது!

தந்தி :

பெரிய வேலை யொன்றுக்கு முயற்சி செய்ய வெளியூர் சென்றிருந்தான் ஒரு மகன். வேலை கிடைத்தவுடனே தந்தி கொடுக்குமாறு தகப்பனார் சொல்லி அனுப்பி இருந்தார். நாள்தோறும் தபால்காரரை தகப்பனார் எதிர்நோக்கிக்கொண்டிருந்தார். ஒரு நாள் தபால்காரர், "ஐயா, தங்களுக்குத் தந்தி வந்திருக்கிறது" என்றார்.

உடனே பையனுடைய தகப்பனார் வீட்டிற் குள்ளிருந்து வேகமாக வெளியில் வந்தார். அவர் ஓடிவந்த வேகம் தபால்காரரைக்கூடத் திகைக்க வைத்துவிட்டது. வந்தவர் தந்தியை வாங்கினார். பிரித்துப் பார்த்தார்; சிறிது நேரம் பேசாமல் இருந்தார். பிறகு துக்கித்துக் கொண்டவராய் அப்படியே சுவரில் சாய்ந்தார். அவர் முகத்தினைச் சோகம் அப்படியே கவ்விக்கொண்டது. தபால்காரர் அவர் முகத்தைப் பார்க்கச் சகிக்கமுடியாதவ ராய்த் திரும்பிவிட்டார்.

அதற்குள் தன் கணவன் சுவரில் துக்கமாய்ச் சாய்ந்திருப் பதைக் கண்ட மனைவியார் ஓடோடியும் வந்து கணவர் இருக்கும் நிலையைப் பார்த்தார். அதற்குள் கணவர் முகத்தில் மகிழ்ச்சியும் புன்முறுவலும் தோன்றின.

மனைவிக்கு ஒன்றும் புரியவில்லை. ''ஏன் இவ்வாறு தந்தியை வாங்கியதும் பெரும் துக்கத்தில் ஆழ்ந்திருந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

அதற்கு அவர் பதில் சொன்னார். ''நம் பையனுக்கு வேலை கிடைத்த செய்திதான் வந்திருக்கிறது. நல்ல செய்தியென்று முதத்தினை மகிழ்ச்சியோடு காட்டினால், தபால்காரர் ஏதாவது இனாம் கேட்பார். ஆதலால்தான் துக்கமான செய்தி வந்தது போல முகத்தைக் காட்டினேன்; தபால்காரர் போய்விட்டார்'' என்று கூறி முடித்தார்.

இவரை எப்படிப்பட்ட கூட்டத்தில் சேர்ப்பது? தபால்காரர் இவரைக் கேட்பாரா என்பது வேறு. மிக நல்ல செய்தி ஒன்று வந்தவுடனே இவர் முகத்தை இப்படிக் காட்டினார் என்ருல் எப்படிப்பட்ட கொடிய மனம் படைத்த பிறவியாக இவர் இருக்க முடியும்!

பொருளொன்றினையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்வது வாழ்க்கையாகாதே. பொருள் உலக வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்பது உலகறிந்த உண்மை. ஆனுல் வாழ்க்கையின் பயன் யாது என்பது அக் குறிக்கோளினைவிட மிக உயர்ந்த குறிக்கோளாகக் கொள்ளப்பட வேண்டியதாயிற்றே.

பொருளீனை ஈட்டவேண்டும் என்னும் ஒரே குறிக்கோளுடன் வாழ்ந்து மனித வாழ்க்கையின் பயனை உணராது வாழ்தல் விலங்கினமோ அல்லது 'இயந்திர' வாழ்க்கையோ என்று கருதப்பட வேண்டியதாகத்தானே முடியும் ?

**கண்கள் :**

கண்கள் மிகவும் சிறந்த உறுப்புகளாகும் என்பதை யாரும் மறுக்கமுடியாது. கண் பார்வை இல்லாதவன் உலகில் வாழ்ந்து என்ன பயன் என்று பேசுவது இயற்கை

தானே. 'கண்போல'க் காப்பாற்று என்று பேசுகின்ற நடைமுறைப் பழக்கம் நமக்குப் புதுமையானதன்று.

அப்படிப்பட்ட கண்களும் தங்களின் பெருமையினைக் காப்பாற்றுகின்ற பார்வை பயனில்லாமல் போகின்றநேரம் எப்போது என்பது நமக்குத் தெரியுமே. கண்ணுல் பார்த்தால் எல்லாம் தெரியும் என்று சொல்லுகின்றோம். ஆம்; உண்மைதான். எப்போது தெரியும்? வெளியில் வெளிச்சம் இருந்தால்தான் கண்களால் பார்க்க முடியும் என்னும் உண்மையினையும் நாம் சிந்தித்துப்பார்க்க வேண்டும்.

சூரியனுடைய வெளிச்சமோ அல்லது சந்திரனுடைய ஒளியோ இல்லை யென்றால் சிறப்பாகப் பேசப்படுகின்ற கண்களும் பயனற்றனவாகப் போகின்றனவே. இருளில் கண்கள் எதைப் பார்க்க முடியும்? கண்களுக்கு மிகச் சிறந்த பெருமையினை அளித்தாலும் வெளிச்சம் இல்லையென்றால் கண்கள் இருந்தும் இல்லாததாகத்தானே நினைக்க வேண்டும்.

உலக வாழ்க்கையில் பொருள் மிகமிக இன்றியமையாத இடம் பெறுவது உண்மைதான். அப்பொருளினைப் பெற்றவன் மக்கள் சேவை-உலகத்தொண்டு-ஈகை அதனால் வருகின்ற உண்மையான புகழ் - என்னும் பிறவிப் பயன் களைச் சிந்தித்துப்பார்க்காமல் 'கருவி' போல வாழ்ந்து-பொருளினை ஈட்டி வாழ்ந்து - மறைவானேயாஞல் அவன் இப் பூமிக்கே பாரமானவனாக இருந்தான் என்றுதானே அர்த்தமாகும்.

கண்களுக்கு, வெளிச்சம் தேவை போல, பொருள் வைத்திருப்பவனுக்கு வாழ்க்கைப் பயன் என்னும் புகழ் தேவையாயிற்றே. மனித வாழ்க்கையின் இவ் வுண்மையினை அறிந்து வாழ்கின்ற மக்கள் நிறைந்திருக்கும் நாடு எதுவோ அந்த நாடு உலகில் சிறந்த நாடாகப் பெருமையுடன் வாழ்வதாகின்றது.

இந்த உயரிய நோக்கம் இல்லாத மக்களின் கும்பல் அதிகரித்திருக்கும் நாடு வறுமையும் துன்பமும் முன்னேற்ற

மில்லாமையும் மலிந்த நாடாகத்தான் இருக்க முடியும் என்பதாகும். மனித தத்துவத்தை ஆசிரியர் அழகாக விளக்குகிறார். பெரும்பாலானவர்கள் மட்டபுத்தியில் திளைத்து வாழ்வதை அப்படியே வடித்தெடுத்துக் கூறி வைக்கின்றார்.

பொருள் :

''பொருளினால்தான் இவ் வுலகில் எல்லாம் நடக்கும் எச் செயலும் உண்டாகும்; என்று சொல்லிக்கொண்டும் எண்ணிக்கொண்டும், அப் பொருளினையே குறிக் கோளாகக் கொண்டு அதனையே சம்பாதித்துச் சேர்த்து வைத்து ''ஈதல்'! என்பதையே அறியாது 'கஞ்சனாக' வாழ்ந்துகொண்டு அஃதாவது 'உலோபியாக' இருந்து கொண்டு, அதே 'கருமித்தனம்' என்னும் மயக்கத்திலேயே வாழ்பவன் மிகக் கேவலமான பிறப்புடையவனாவான்'' என்னும் உண்மையினைக் கூறுகிறது குறட்பா.

*பொருளானாம் எல்லாம் என் றுஈயாது இவறும்*
*மருளானாம் மாணாப் பிறப்பு.*

இவ் வுலகில் பிறந்து வாழ்வதே பொருளினை எப்படியும் சேர்த்து வைத்து 'உலோபியாக' இருந்து மறைவதற் காகத்தான் என்று இருப்பவனை என்ன வென்று கூறுவது.

'பொருளானாம் எல்லாம்' என்ற சொற்கள் உலகியல் பேச்சினை மிக அழகாகக் கூறுகின்றது. 'எல்லாம் பணத் தாலேதான்' என்று பேசுகின்றார்களே, அதனைத்தான் இவ்வாறு கூறி வைத்தார்.

இதனையே 'மந்திரமாக' நினைத்துக்கொண்டே இருப் பவனைப் 'பைசாசம்' என்று சொல்லுகிறார்களே, அப்படியே ஆசிரியர் கூறி வைத்தார் என்பதாகும். 'மாணாப் பிறப்பு' என்பது அப்படிப்பட்டவன் பிறவியினை இழித்துக் கூறியதாகும்.

பணம் சம்பாதிப்பதற்கு முன்னே சிலருக்கு நல்ல புத்தியும் சிறந்த அறிவும் இருக்கும். ஆனால் பொருள் சேர்த்து வைத்த பின்பு மதிகெட்டு மயங்கி விடுமாம். என்னே பேதைமை! இதனைத்தான் மயக்கம் என்று விளக்கமாகச் சொல்லி 'மருளான்' என்றார்.

பிறர் துன்பத்தினை நேரில் கண்டும் பசிக் கொடுமையால் வாடி வதங்குவதைக் கண்ணுற்றும் ஈயாத பிறவியை 'மாணாப் பிறப்பு' என்பவற்றுள் அடக்கிவிட்டார். மனிதப் பிறப்பல்லாமல் 'பேய்ப்பிறப்பு' என்று சொல்லுகிறார்களே அப் பிறவிதான் என்று கூறுவதும் பொருத்தமேதான்.

'உலோபித்தனம்' அளவு மீறி இருப்பவன் என்பதைக் கூறவேண்டி 'இவறும்' என்று வைத்து அதன் காரணமாக அவன் பிறவியினையே கொடுமையானதாகக் கூறி அப்படிப் பட்டவன் இருந்தும் பயனில்லை என்பதனைக் குறிப்பால் உணர்த்திவிட்டார்.

**நரகம் ;**

'இவறுதல்' (உலோபத்தனம்) என்னும் கடுமையான நெஞ்சத்துடன் வாழ்கின்றவன் பேச்சு, செயல், பழக்கம் வழக்கங்கள் அனைத்தும் அவனுடைய அந்த எண்ணத்தின் போக்கிலேயேதான் போய்க்கொண்டிருக்கும் என்பது இயல்பே யாகும்.

'நரகம்' என்று சொல்லுகிறார்களே, அங்கே தலைவனான எமதர்மன் என்பவனுடைய 'தர்பார்' நடந்து கொண்டிருந்ததாம். நரகம் என்பதில் உலகில் மிகக் கொடியவர்களாக வாழ்க்கை நடத்தியவர்களை வைத்துக் கொண்டு கடுந்தண்டனை யளித்து வதைப்பார்களாம். இப்படிப்பட்டவைகளைச் சொல்லிக்காட்டினாலும் நல்ல புத்தி வராதா என்று அந்த முறைகளைக் கையாண்டு சொல்லியும் எள்ளளவும் திருந்தாத பிறவிகள் இங்கு எத்தனையோ இருந்துகொண்டுதான் இருக்கின்றன.

'எம தர்மன் தர்பார்' நடந்துகொண்டிருக்கும்போது நரகலோக ஏவலாட்கள் ஒருவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு வந்து எம தர்மன் முன்னே நிறுத்தினார்கள், உடனே எம தர்மராஜன் அவனுக்கு என்ன தண்டனை கொடுப்பதென்று அவன் பூவுலகில் வாழ்ந்த வாழ்க்கையின் கணக்கினைப் புரட்டிப் பார்த்தான். உண்மை யறிந்து கொண்டான்.

உடனே ஏவலாட்களுக்கு உத்தரவிட்டான் 'இவன் உலகில் நிறையப் பணம் சேர்த்துப் பணக்காரனாக இருந்த வன். ஆனால், எள்ளளவும் பிறருக்குக் கொடுக்கவேண்டும் என்னும் புத்தியே இல்லாமல் வாழ்ந்திருக்கின்றான். இவன் சரித்திரம் சொல்லுகிறது. இவனைக் கழுவிலேற்றி, பழுக்கக் காய்ச்சிய உலக்கையால் இவன் உடம்பை யெல்லாம் தழுவி உருட்டிக் கொல்லுங்கள். அதே நேரத் தில் இவனுடைய வலக்கையில் இருக்கும் ஆள்காட்டி விரலை மட்டும் ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுங்கள்.'' இவ்வாறாக அந்த எம தர்மராஜன் உத்தரவு வந்தது.

இதைக் கேட்டவுடன் அந்த உலோபி எம தர்ம ராஜாவைப் பார்த்துக் கேட்டான், ''ராஜாவே! எனக்குக் கொடுத்த தண்டனையை நான் அனுபவிக்கத் தயாராகத் தான் இருக்கின்றேன். ஆனால், அடியேனுக்கு ஒரு சந் தேகம். அதைத் தீர்த்துவைக்க வேண்டுகின்றேன். வலக் கையில் ஆள்காட்டிப் பெருவிரலை ஒன்றும் செய்யா மல் விட்டுவிடச் சொன்னீர்களே, அது ஏனோ? தெளிவாக்க வேண்டுகிறேன்.'' என்றான்.

அவர் சொன்னார், ''அடே பாவி! நீ மிகவும் உலோபத்தனமாக வாழ்ந்த கொடியவன்தான். அப்படி இருந்தாலும் நீ நெஞ்சிலே கொடுந் தீய புத்தி வைத் திருந்தும் அந்த விரல் மட்டும் தர்மம் செய்திருக்கிறது! எப்படி யென்றாலோ கேட்பாயாக.

''உன்னிடம் தர்மத்திற்கு வருகின்றவர்களுக்கு நீ ஒன்றும் கொடுக்காமல், அவர்களுக்கு (யாசித்தவர்களுக்கு) அந்த வீட்டிற்குப் போய்க் கேள், கொடுப்பார்கள் - அதோ அவரைப் போய்க் கேள்; அவர் கொடுப்பார்—என்று சொல்லி அந்த விரல் அப்படியாகச் சுட்டிக் காட்டும் வேலையினைச் செய்திருக்கிறது - அது ஒரு தர்மம்! ''ஆதலால்தான் அந்த விரலை மட்டும் விட்டுவிடச் சொன்னேன்'' என்று கூறி முடித்தார் தர்மராஜா.

இதைக் கேட்டவுடன் அந்த உலோபி அப்படியே 'திடும்' என்று விழுந்து, தர்மராஜாவின் இரண்டு கால்களையும் பிடித்துக் கொண்டு அழுது விண்ணப்பமாகப் பேச ஆரம்பித்தான்.

'' ராஜாவே! அடியேன் விண்ணப்பத்தினைக் கேட்டருள வேண்டும். தர்மம் என்பதனுடைய பெருமையினை அறியாதவனாகையால் இப்படிப்பட்ட உலோபியாக வாழ்ந்துவிட்டேன். ஆகா! எவ்வளவு ஆற்றல் வாய்ந்தது தர்மம் என்பதை இப்போதுதான் உணர்ந்து கொண்டேன்.

''எவ்வளவோ பெரிய நன்மையினையும், பயனையும், இன்பத்தினையும் அளிப்பது தர்மன் என்று தெரிந்துவிட்டது ஆதலால் அடியேன் விண்ணப்பம் ஒன்று. என்னை இந்த முறை மன்னித்துப் பூவுலகத்திற்கு அனுப்பிவிடுங்கள். தர்மம் செய்து எனது வாழ்க்கையினைப் பரிசுத்தமாக்கி விடுவேன். தர்மத்தின் பெருமையினை அறியாத காரணத்தினால் தான் 'உலோபியாக' இருந்து விட்டேன்'' என்று முறையிட்டான்.

உடனே எமதர்மன் அதற்கு இசைந்து அவன் உயிரை மீண்டும் அவனுக்கு அளித்துப் பூலோகத்தில் அனுப்பி விட்டார். உலோபி பூலோகத்திற்கு வந்து தன் சொத்து குடும்பத்துடன் மறுபடியும் வாழ ஆரம்பித்தான்.

விரல் :

எமதர்ம ராஜா சொல்லிய தர்மத்தின் பயன் அவனுக்கு நன்றாக மனத்தில் ஆழமாகப் பதிந்திருந்தது. அதனையே எப்போதும் நினைத்துக்கொண்டிருந்தான். 'விரலை' விட்டுவிட்ட நினைவு அவனுக்கு நல்ல வழிகாட்டியாக இருந்தது. உலோபியின் மனப்பாங்கு மட்டும் அவனை விட்டு நீங்கவே இல்லையாம். எமதர்மனை எப்படி ஏமாற்றுவது என்னும் புத்திதான் அவனுக்கு மேலோங்கி நின்றதே யல்லாமல் தர்மம் செய்யவேண்டும் என்னும் எண்ணம் உண்டாகவே இல்லை. எப்போதும் போல யாசிப்பவர்கள் தர்மத்திற்கு வந்துகொண்டிருந்தார்கள்.

உலோபி மட்டும் பழைய பல்லவியிலேயே இருந்து விட்டான். தர்மம் கேட்பவர்களுக்குத் தர்மம் செய்ய மறுத்துவிட்டான். எமதர்மனிடம் சொல்லியபடி நடக்க வில்லை. ஆனால் எப்படி ஏமாற்றுவது என்பதில் மட்டும் நாட்டமாக இருந்தான். முன்னர்த் தர்மமென்று வந்தவர் களுக்கு விரலால் காட்டினுன். இப்போது விரலால் காட்டு வதில்லையாம். விரலால் காட்டியதற்குத்தான் விரலை மட்டும் விட்டுவிட்டான்.

ஆதலால் உடம்பு முழுவதும் காப்பாற்றவேண்டு மென்றால் உடம்பு முழுவதாலும் காட்டினால், உடம்பு முழுவதையுமே யமன் விட்டுவிடுவான் என்று எண்ணி அப்படிச் செய்ய ஆரம்பித்துவிட்டானாம். அவனுடைய எண்ணம் முன்பு போலவே இருந்தது மல்லாமல் உலகத்தை யும் தன்னையும் ஏமாற்ற எண்ணியதை யறிந்த எமதர்ம ராஜன் உடனே ஆட்களை அனுப்பி மறுபடியும் அந்த உலோபியை நரகத்திற்குக் கொண்டுபோய்விட்டானாம்.

'மாணாப் பிறப்பு' என்று ஆசிரியர் குறித்துக் காட்டிய பிறவிகள் மக்களிடையே வாழ்ந்து வருவதைவிட வாழாமல் இருப்பதுதான் மேல். இவர்களால் பிறருக்குத் துன்பமே யல்லாமல் வேறு இன்பம் இல்லை. பொருளும் பொருளால்

அடையும் பயனும் ஆகிய இரண்டும் எளிமையாகவும் இனிமையாகவும் விளக்கப்பட்டன.

இவ்வாறு உலகில் பொருளீட்டி அப் பொருளால் புகழ் நாட வேண்டிய எண்ணமில்லாதவர்கள் இவ் வுலகில் வாழ வேண்டியதே யில்லை யென்ற எண்ணத்தினை ஆசிரியர் வற்புறுத்திக் கூறுகிறார். கடுமையாகவும் கூறிவிடுகின்றார்.

இன்னும் சொல்லப்போனால் அப்படிப்பட்டவர்கள் இவ் வுலகில் எப்போது பிறந்தார்களோ அன்று முதற் கொண்டே இப் பூமிக்குப் 'பாரம்' என்று இடித்துக் கூறிவிட்டார் என்பதாம். உலகில் வாழ்வதற்கே உரிமை யில்லாதவர்கள் ஆகின்றார்கள்.

''மற்றவர்களைவிட அதிகமாகப் பொருள் சேர்க்க வேண்டும் என்னும் எண்ணமும் பேராசையும் வைத்துக் கொண்டு, அதன் பயனான புகழை விரும்பாதவர்களுடைய பிறப்பு பூமிக்குப் பாரமாம்'' என்னும் உண்மையினைக் குறட்பா விளக்குகிறது.

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

பொருளொன்றினையே விரும்புகின்றான் என்னும் கீழான எண்ணத்தினைக் குறிப்பிட வேண்டித்தான் 'ஈட்டம் இவறி' என்று எடுத்த எடுப்பிலேயே குறட்பாவில் குறித்தார். அதனால் வாழ்வில் தேடவேண்டிய இசை யென்னும் புகழினை விரும்பாதவர்களை ''இசை வேண்டா ஆடவர்'' என்று சொன்னார்.

இக் குறட்பாவில் சிந்திக்க வேண்டிய கருத்து 'தோற்றம்' என்னும் சொல்லில் அடங்கிக் கிடக்கின்றது. தோற்றம் என்பதனால் அவன் மக்களிடையே ஒருவனாகத் தோன்றிக் கொண்டிருக்கின்றான் என்பது மட்டுமன்று. அவன் உலகில் என்று பிறந்தானோ அன்று முதற்கொண்டே பூமிக்குப் பாரமாக இருந்துவருகிறான் என்பதும் கருத்தாகும்.

'நிலக்குப் பொறை' என்பதால் அப்படிப்பட்டவன் இவ் வுலகில் வாழ்வதே வீண் என்பது புலனாயிற்று. இவ்வுலகில் மக்கள் துன்பம் அடைவதற்குப் பல காரணங்கள் இருப்பினும் அவைகளுக்கெல்லாம் முதற் காரணமாக ஒன்று உண்டு.

அது இவ் வுலகில் யார் யார் இருந்து வாழத் தேவை யில்லையோ அவர்களெல்லாம் இருந்துகொண்டிருப்பதே யாகும். நாம் ஏன் வாழ்கின்றோம்? ஏன் பிறந்தோம்? மானிடப் பிறவி சிறந்ததென்று கூறுவது எதனால்? என்னும் வினாக்களுக்குரிய விடையினை நன்கு புரிந்து வாழ்தலே புனிதப் பிறவி யாகுமன்றோ!

உலோபி :

பணம் படைத்தவன் உலோபியாக இருந்து வாழத் தேவையில்லை என்று கூறுவதில் பெரும் மறை பொருளான உண்மைகளும் இருக்கத்தானே செய்யும்? அவன் உயிரோடு இருக்குவரை அப்பொருள் (பணம்) அவனால் அடைக்கப் பட்டு யாருக்கும் பயனில்லாததாகத்தானே இருந்து விடுகிறது?

அவனுக்குப் பின் அப் பொருள் பலருக்கும் பயன் படுவதாகச் செய்யப்படலாம். உலக நடை அனுபவத்தில் பேசும் கருத்தினையும் நாம் சிந்தித்துப்பார்த்தல் வேண்டும். ''உலோபியாக இருக்கும் பணக்காரன் இறந்துவிட்டால் கவலைப்படவேண்டா; ஆனால் அறிவு நிறைந்த பேரறிஞன் இறந்துவிட்டால் கவலைப்பட வேண்டும்.'' ஏன் இவ்வாறு கூறப்படுகிறது?

பணம் படைத்த உலோபி இறந்து விட்டால் பணத் தினை அவன் எடுத்துக்கொண்டு போகவில்லை. எடுத்துக் கொண்டு போக முடியாது என்பதும் உண்மைதான். ஆனால் அறிவு நிறைந்த ஒருவன் இறந்துவிடுவானேயானால் நாம் கவலைப்பட வேண்டும். ஏன்? தனது அறிவினையும் தன்னுடனேயே கொண்டுபோய்விடுகின்றான்.

பணமும் நற்குணமும் இருப்பவன் இறந்தானேயானால் குணத்திற்காக யாவரும் வருந்தவேண்டியது இயல்பாக இருக்கின்றது.

உயர்ந்த பெருங்குடியில் பிறந்தவர்கள்பால் காணப்படும் அரிய குணங்களாகக் கூறிய நான்கினுள் நகை, ஈகை என்னும் இரண்டும் மிகவும் சிறப்பாகக் கண்டுணர வேண்டியவைகளாகவும், அவ்வாறே இன்சொல், இகழாமை ஆகிய இரண்டும் சிறப்பிக்கப்படுகின்றன. நகையும் ஈகையும் செயல்படுகின்றபோது; பிறர்பால் பேசப்படுகிறபோது பிறர் பால் பேசப்படுகின்ற முறையில் இன்சொலும், இகழாமை யும் காணப்படுகின்றன.

இனிமையான சொற்களைப் பேசுவதென்பது ஒரு வருடைய உள்ளப் பாங்கினையும் பரம்பரையினையும் மெய்ப்பித்துக் கூறுகின்றன. எக் காரியத்தினையும் நல்ல முறையில் செய்துமுடிக்கவும் மக்கள் இனத்தை ஒன்று படுத்தி வளர்க்கவும் இன்சொல் பேசும் அரிய குணம் பயன் படுவதாகின்றது.

இன்சொல் பேசும் நற்பழக்கம் இயல்பாகவே அமைந் திருக்க அவைகளை விட்டுக் கீழ்த்தரமான சொற்களையும் வெறுக்கத்தக்க சொற்களையும் பேசும் மக்கள் கூட்டத் தினையும்தான் காணுகின்றோம். பேசும் சொற்களைக் கொண்டே ஒருவனுடைய குடிப்பிறப்பினையும் நிலை யினையும் நன்கு புரிந்துகொள்ள முடியும்.

**வேர் :**

நிலத்தில் விளைகின்ற செடிகளை வைத்துக்கொண்டு நல்லதொரு செய்தியினை ஆசிரியர் விளக்குகின்றார். ஒரு நிலத்தின் குணத்தினை எவ்வாறு புரிந்துகொள்ளமுடியும்? அஃதாவது விளைகின்ற நிலமா அல்லது எதுவும் விளையாத நிலமா என்பதையும் - பயனுள்ள மண்ணுள்ள - நிலமா இல்லையா என்பதையும் புரிந்துணரக்கூடிய வழி யாது?

அம்மண்ணில் முளைக்கின்ற செடி அல்லது பயிரின் வேர்முனையினை எடுத்துப் பார்த்தால் அந்த மண்ணின் குணமும் நன்மையும் எளிதில் விளங்கும் என்பதாம். முளைத்த மாத்திரத்திலேயே அந்த முளையானது அம்மண்ணின் இயல்பினைக் காட்டி விடும்.

அதுபோலவே ஒருவர் பேசுகின்ற பேச்சில் இருக்கும் சொற்களும் ஒருவர் பிறந்த குலத்தினையும் அவரது பரம் பரையினையும் மற்றும் தெரிந்துகொள்ளாமலிருந்த பலவற்றையும் தெரிவித்துவிடுமாம். எளிமையான குறட்பா வொன்றினைக் காணுவோம்.

*நிலத்திற் கிடந்தமை கால்காட்டும்; காட்டும்*
*குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.*

இதனுடைய சுருக்கமான குறிப்பினைக் கண்டுகொள்ளுதல் எளிமையாயிற்று. "நிலத்தினுடைய இயல்பினை அந் நிலத்தில் முளைத்த முளை - வேர் - காட்டுவது போல, ஒருவன் பிறந்த குலத்தின் தன்மையினை அவனுடைய வாய்மொழி காட்டிவிடும் என்பதாம்.

நிலத்தினை எவ்வாறு உவமை காட்டினார் என்பது சிந்திக்கத் தக்கதாகும். ஒருவனுடைய தோற்றமோ, கல்வியோ, பணமோ அல்லது வேறு எதுவும் அவன் பிறந்த குடி உயர்ந்த பண்பாளர்கள் குடும்பமா அல்லது கயவர்கள் கொண்ட குடும்பமா என்பதனைக் காட்டிவிடாதாம். அவனுடைய வாயினால் வருகின்ற வாய்மொழிகளைக் கொண்டே அவன் பிறந்த பரம்பரையின் நிலைமையினை நாம் தெளிவாகப் புரிந்துகொள்ளலாம்.

நிலத்தின் ஆழத்தினையும், பரப்பையும் அந் நிலத்தினையும் எவ்வாறு உணர்ந்துகொள்ள முடியும்? அஃதாவது அதன் குணத்தினைப் புரிந்துகொள்ள மூல காரணப் பொருளாக அம் மண்ணில் முளைத்த செடியின் முளை அல்லது வேர் உதவுவதுபோல் ஒருவனுடைய வாய்

மொழியாகிய முளை அவனுடைய குலத்தினை எடுத்துக் காட்டும் என்னும் உண்மையினை விளக்கினார்.

இக் குறட்பாவில் இரண்டு முறை 'காட்டும்' என்னும் சொல்லினைப் பயன்படுத்துகிறார். அவ்வளவு உறுதிப் பாட்டுடன் கருத்து விளக்கப்பட்டது. 'கால்' என்றது முதற்காரணமான 'முளை'யென்பதனை யாகும். அந்த முளை நிலத்தின் தன்மையினைக் காட்டும் என்றும், ஒருவனுடைய வாய்ச்சொல் அவன் பிறந்த குலத்தினைக் காட்டும் என்றும் கூறி வைத்தார்.

உள்ளத் தூய்மையின் அடிப்படையாக வந்த அன் பொடு கலந்து வருகின்ற சொற்களுக்கே இன்சொல் என்று பெயராகும். இன்சொல் எப்போதும் மலர்ந்த முகத்திலே தான் தோன்றும். இன்சொல் பேசிப் பழகும் பண்பாளர் களைத் துன்பமே அணுகாது என்பது உலகியல் உண்மை யாகும். இன்சொல் பேசும் உயர்ந்த பண்புடன், பணிவு என்னும் சிறந்த குணமும் உண்டாகிவிடுமேயானால் அதுவே ஒருவன் வாழ்க்கையினை ஒளிவிட்டு மின்னுமாறு செய்யும் என்பதாகும்.

பெரிய பயனையும் நன்மையினையும் அளிக்கக்கூடிய இன்சொற்களை வழங்கும் பழக்கத்தினை விட்டுவிட்டு வன்சொற்களை வழங்குகின்றார்களே அஃது எதனாலோ ? என்று மனம் வருந்திக் கேட்கின்றார் ஆசிரியர்.

நிலத்தினையும் முளையினையும் வைத்துக்கொண்டு வாய்மொழியினையும் குலத்தினையும் ஒப்பிட்டுக் காட்டும் முறைமை பல முறையும் சிந்தித்து அறிய வேண்டியதாகும். ஆசிரியர் வள்ளுவனார் கூறும் உவமைகளின் தனிச் சிறப்பு சொல்வதற்கரியதாகும். தமது நூலின்கண் கூறப்படும் பல உவமைகளையும் அளந்து உலக அனுபவத்தில் இசையு மாறு அமைத்து எளிமையான முறையில் அமைக்கின்றார்.

உவமைகள் சொல்லுகின்றபோது எளிமை என்னும் தன்மை முதன்மையாக இருத்தல் வேண்டும் என்பது

கண்கூடான கருத்தாகும். எப்படிப்பட்டவர்களால் உவமைகள் - உதாரணங்கள் - கூற முடியும் என்பதும் அறிய வேண்டியதாகும். எல்லாராலும் உவமை - உதாரணங்கள் - கூறமுடியா தென்றும், அவ்வாறு பலரும் முயலுதல் பழுதாக முடியும் என்பதும் இயல்பாகும்.

ஆழ்ந்து அகன்ற கல்வித் திறமையும் சிந்தனையும் கொண்ட பேராசிரியர்களாலேதான் எளிமையும் இனிமையும் நிறைந்த உவமைகள் கூறமுடியும். அறிவும் ஆற்றலும் ஊறிப் போயிருக்கும் உள்ளங்கள் தான் உதாரணங்களைத் தரமுடியும். ஆழமும் அகலமும் கொண்டது கடலல்லவா ? கடலினை நினைவில் நிறுத்திப் பார்ப்போமானால் புலமை நிறைந்த பேராசிரியர்களின் பேராற்றல் நமக்கு விளங்கி விடுவதாகும்.

நுரை :

பெரிய சமுத்திரம் - பெருங் கடலின் தோற்றத்தினை நமது கண் முன்னே நிறுத்திக்கொண்டு பார்ப்போமாக. அகன்று பரந்து கரை தெரியாததாகத் தோன்றுகின்றது கடல். அகன்றிருப்பதால் காற்று வீசுகின்றபோது பெரிய அலைகள் தோன்றுகின்றன. அகன்று படர்ந்து இருப்பதால் ஆழம் அதிகமாகி இருப்பது இயல்பாயிற்று.

படர்ந்திருக்கின்ற இடத்தில்தான் காற்று வீசுவதால் அலைகள் மோதும். அலைகள் ஒன்றோடொன்று மோதுவதால் என்ன உண்டாகிறது ? அலைகள் மோதுவதால் வெண்மையான 'நுரை' உண்டாகின்றது. உற்று நோக்கும் போது புதுப்புது நுரைகள் தோன்றி மறைகின்றன.

கடல் ஆழமாகவும் அகன்றும் இருப்பது போல் கல்வி கேள்வி ஆராய்ச்சிகளில் அகன்றும் ஆழ்ந்தும் இருத்தல் வேண்டும். அப்படி இருப்பதால் சிந்தனைகள் என்னும் காற்று வீசிக்கொண்டே இருக்கும். சிந்தனைகள் உண்டாக உண்டாக புதுப் புதுக் கருத்துகள் என்னும் அலைகள் உள்ளத்தில் மோதிக்கொண்டே இருக்கும். அப்படிப்பட்ட

அலைகள் மோதுவதால், உவமைகள் - உதாரணங்கள் - என்னும் நுரைகள் உண்டாவது இயற்கையாகு மன்றோ ?

நம் ஆசிரியர் திருவள்ளுவனார் உள்ளம் கடல் போன்றதல்லவா ? அங்கிருந்து வருகின்ற கருத்துகளுக்கு அளவு ஏது ? உள்ளத்தில் தோன்றும் அரிய உவமைகளில் ஒன்றினை மேலே கண்டோம். நகை, ஈகை, இன்சொல் ஆகிய மூன்று அரிய குணங்களுடன் கடைசியாகக் கூறப் படும் நான்காவது பண்பாடு இகழாமை என்பதாகும்.

நற் குடியிற் பிறந்தவர்கள் பிறரை இகழ்ந்து பேசுகின்ற கீழான குணத்தினைக் கனவிலும் நினைக்கமாட்டார்கள். தாழ்மையான இழி குலப் பழக்கத்தில் வாழ்கின்றவர்கள் மற்றவர்களை இகழ்ந்து பேசுவதையே தொழிலாகவும் கொண்டிருப்பவர்களாவர். பிறரைத் தாழ்த்திப் பேசுதல் கயவர்களிடம் காணப்படும் பழக்கமே யாகும்.

மற்றவர்களைப் பற்றிப் பெருமையாகப் பேசும்போது சிலருக்குக் கேட்கவே பிடிக்காது. கசப்பாக இருக்கும். செவி கொடுத்துக் கேட்க வெறுப்பார்கள். ஆனால் சிலர் மற்றவர்களைப் பற்றிக் குறைவாகவும் இழிவாகவும் யாரா வது பேசினால் மனம் மகிழ்ந்து அகங் குளிரக் கேட்பார்கள். மேலும் சொல்லச் சொல்லிக் கேட்டுக்கொண்டே இருப்பர். என்னே உலகம்! இழி குலம் பெற்ற இப் பிறவிகளை எந்த வகையில் வைப்பதோ!

**பொறுமை :**

உலக அனுபவத்தில் அறிவுரைத் துறை பேசவந்த நம் ஆசிரியர், இகழ்ந்து பேசுகிறவர்களையும் நாம் பொறுத் தருள வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். மற்றவன் இகழ்ந்து பேசுவதால் நம்முடைய சிறப்பு குறைந்துபோவது ஒருகாலும் இல்லை. இகழ்ந்து பேசுகின்றவன் தானே திருந்தி உண்மை யுணர்வான் என்பதும் உறுதி.

தீய உள்ளம் படைத்தவர்களிடத்தில் 'இகழ்தல்' என்னும் பழக்கம் மலிந்து நிற்கும். இகழ்வதால் இன்பம்

அடைவதாகக் கூடக் கயவர் கூட்டம் எண்ணி மகிழ்ந்து வாழும். பெருமை நிறைந்த சான்றோர்கள் தம்மை இகழ்ந்து பேசுபவர்களையும் பொறுத்தருளல் வேண்டு மென்று ஆசிரியர் கூறி அழகிய எடுத்துக்காட்டு ஒன்றினையும் நம் கண்முன் நிறுத்திக் காட்டுகிறார். குறிப்பாக இகழ்ந்து பேசுபவர்களைக் குறித்தே குறட்பா தரப்படுகின்றது.

''தன்னை வெட்டுவோரையும் பொறுத்துத் தாங்கும் நிலத்தினைப் போல, தம்மை இகழ்வோரையும் பொறுத் தருளல் சிறந்த குணமாகும் என்னும் கருத்தினை விளக்கு கிறது குறட்பா.

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

தம்மை இகழ்ந்து பேசுகின்றவர்களையும் கருணை கொண்டு பொறுத்தருள வேண்டும் என்று பெரியோர்களுக்கு அறவுரைகள் சொல்லுகின்றார் என்றால், பெரியோர்கள் பிறரை இகழ்ந்து பேசும் பழக்கத்தினைக் கனவிலும் கருத மாட்டார்கள் என்பது வெள்ளிடைமலையான உண்மை யாகும்.

நிலம் தன்னை வெட்டித் தோண்டுகிறவர்களையும் பொறுத்துக்கொண்டிருக்கின்றதென்பது மட்டும் அன்று; அப்படிச் செய்கிறவர்களையும் தாங்கிக்கொண் டல்லவா இருக்கின்றது. காற்று, நீர் போல மாறுதலடையாமல் சலிக்காது அப்படியே பொறுத்துக்கொண்டிருப்பதால் நிலத்திற்குப் பெருமை அதிகப்பட்டதாகிவிட்டது.

அதுபோலவே சான்றோர்கள் தங்களை இகழ்ந்து பேசும் மற்றவர்களைப் பொறுத்துக்கொள்வார்கள் என்பது மட்டுமன்று; தம்முடைய ஆதரவிலேயே இருந்து தம்மை இகழ்ந்து பேசும் அற்பர்களும் இருக்கச் செய்வார் கள் அல்லவா? அப்படி நேரிட்டாலும் பொறுத்துக் கொள்ளுதலே உயர்ந்த பண்பாளர்களுடைய தன்மை என்பதனையும் விளக்கிக் காட்டினார்.

அறம் :

பூமியின் சிறப்பினைக் கூறும்பொழு தெல்லாம் அதனுடைய பெருமையைக் குறிக்க, பொறுமை என்னும் பண்பாட்டினைக் கூறுதல் உலகியல் மரபாகும். எல்லையற்ற பொறுமை கொண்டது பூமியே யாகும். பிறரை இகழ்ந்து பேசுபவர்களையும் இப் பூமி தாங்கிக்கொண்டுதானே இருக்கிறதென்று வியப்புக் குறியுடன் ஆசிரியர் குறித்துக் காட்டும் இடம் மிகவும் அழமாக அமைந்துள்ளது.

இகழ்ந்து பேசுகின்ற புத்தியுள்ளவர்கள் எப்போதும் புறம் பேசுதல் அல்லது புறங் கூறுதல் என்னும் தீய புத்தி உள்ளவர்களாகவே இருப்பர். அற்பமான எண்ணமும் சொல்லும் உடையவர்களை இப் பூமியானது அதுவே அறம் என்று எண்ணிச் சுமந்துகொண்டிருக்கின்றதோ என்பது ஆசிரியரின் கேள்வி போலவும் தொனிக்சின்றது.

அறம்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறம்நோக்கி
புன்சொல் உரைப்பான் பொறை.

'பொறை' என்று குறிப்பிட்டது, இப்படிப்பட்ட அற்பமான சொற்களைச் சொல்லிக்கொண்டு திரிந்து வருகின்றானே அவனுடைய உடல் பாரத்தை யாகும். அதனையும் சுமந்துகொண்டு இந்தப் பூமி இருக்கின்றதே என்பதைத்தான் 'ஆற்றுங்கொல்' என்று கூறினார்.

இவ் வுலகிலேயே அப்படிப்பட்டவர்கள் வாழ்வதற்கு உரிமை யில்லாதவர்கள் என்பதாகும். வையம் ஆற்றுங் கொல் என்று விளக்கமாகவும் தெளிவுபடுத்தினார். 'அறம் நோக்கி ஆற்றுங்கொல் வையம்' என்னும் தொடர் ஆசிரியரின் உள்ளப்பாங்கினை அப்படியே எடுத்துக்காட்டி விட்டது. புறம் பேசியும்-இகழ்ந்து பேசியும் பழகுகின்றவன் உரைப்பதெல்லாம் புன் சொற்களேயாகுமன்றோ !

பூமிக்கு எல்லாப் பொருள்களையும் சுமப்பது இயல்பே யென்றாலும், இப்படிப்பட்ட தகாதவர்களையும் சுமக்

கின்றதே என்பதை நினைக்கும்போது அறம் என்று எண்ணிச் சுமந்துகொண்டிருக்கின்றது போலும் என்பதாக நயமாகக் கூறினார்.

தீய குணமுடையாரின் அருகில் செல்லுதலும் அவர்களுடன் சேர்ந்து பழகுதலும் எவ்வளவு தீமையினை உண்டாக்குவனவாகும் என்பது குறிக்கப்பட்டது. தீயகுணம் உள்ளவர்கள் எல்லா விதத்திலும் சிறியவர்களாக இருந்தாலும் அருகில் செல்லுதலும் பழகுதலும் ஆபத்தினைக் கொடுப்பதாகும்.

நடைபாதையில் பள்ளம் எவ்வளவு சிறியதாக இருந்தாலும் கால் இடறிவிடப்படும். அதனால் தீமையுண்டாவது உறுதி. பெரியபள்ளமாக இருந்து விழுந்தால்தான் ஆபத்து என்று மட்டும் கூறிவிட முடியாது. சிறிய பள்ளமாக இருந்தாலும் அது ஆபத்தினை உண்டாக்கியே தீரும். அது போலவே அற்பர்கள் என்று நாம் பொருட்படுத்தாமல் இருக்கவே கூடாது. அவர்களையும் ஒதுக்கி வைத்தே நாம் வாழ்தல் வேண்டும்.

**கயவர் :**

வெறுக்கத் தக்க கீழான குணங்கள் அனைத்தும் நிறைந்தவர்களைத்தான் கயவர்கள் என்று கூறுவோம். இப்படிப்பட்ட கயவர்களைப்பற்றி நம் ஆசிரியர் தெள்ளத்தெளிய விளக்கிக் கூறி அவர்களை மக்கள் கூட்டத்திலேயே சேர்த்துக் கணக்கிடக்கூடாது என்றும் கூறுகிறார். அத்துடன் நின்றாரில்லை.

அவர்கள் மக்கள்போலக் காட்சி யளித்தாலும் அவர்கள் மக்களுமில்லை என்றும் சொல்கிறார். பின்னர் அவர்களை யாரென்றுதான் கூறுவது? தோற்றத்தில் மக்களைப்போல இருக்கின்ற சில கீழ்மையான பிறவிகள் என்றே கூறிக் கொள்ள வேண்டும். இவர்களுக்கு மக்களுக்கு இருக்க வேண்டிய மன உணர்ச்சியே கிடையாதாம். ஒரு குறட்பாவினைக் காண்போம்.

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாம்கண்ட தில்.

கயவர்கள் என்பவர்கள் வடிவத்தால் மக்கள்போல இருப்பார்கள். ஆனால் அவர்களை ஒத்தவர்கள் வேறு எங்குமே யாம் கண்டதில்லை. கயவர்களின் இழிந்த தன்மைகள் இப்படித்தான் என்று எடுத்துச்சொல்லி முடியாது. ஆகையால் – அவர்களைப் போன்ற பிறவி களைப் பார்த்ததே யில்லை என்று சுருக்கமான வழியில் அவர்களைப்பற்றிப் பேசி முடித்துவிட்டார் போலும்.

கயவர்களுக்கும் மற்ற மக்களுக்கு இருப்பதுபோல உறுப்புகளும் தோற்றமும் இருப்பதால் அவர்களைப் பிரித்தறிந்துகொள்ளுதல் எளிமையான தன்று என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது. தக்கது இன்னது, தகாதது இன்னது என்று அறிகின்ற உணர்வு மக்களுணர்வு என்று கூறப்படும். அக் குணம் இல்லாதவர்களே கயவர்கள் என்பது ஒரு முறையில் அவர்களை விளங்கிக்கொள்ளுவ தாகும் கயவர்கள் மலிந்திருக்கும் நாடு என்றென்றும் துன்ப முறும் என்பதும் வெளிப்படை யாகும்.

**இகழ்ச்சி :**

உலக வாழ்க்கையில் நாள்தோறும் நடந்து வரும் அன்றாட நிகழ்ச்சிகளைக் குறித்துக் காட்டும் ஆசிரியர் நகுதல் என்பதனைச் சிறந்த பொருளில் வைத்துப் பேசுகின்றார். சிலர் ஏதேனும் செயல் செய்தால்' விளை யாட்டுக்காகச் செய்தேன்' என்று கூறுகிறார்கள். ஏதேனும் குற்றம் போன்றதாகப் பேசினாலும் ‘விளையாட்டுக்காகப் பேசினேன்' என்று சொல்லுவதையும் நாம் கண்டு வருகின்றோம்.

அதே கருத்தினை அமைத்து அரியதொரு நற்கருத்தினை ஆசிரியர் தருகின்றார். எதையும் சொல்லிவிட்டு ‘விளை யாட்டிற்காகச் சொன்னேன்' என்று கூறுதல் மிகத்

தவறானதாகும். திருக்குறளில் பண்புடைமை என்னும் அதிகாரம் அரிய பல உண்மைகளை உணர்த்துவதாகும். இகழ்ந்துரைத்தல் என்பதனைப்பற்றிப் பேசி வரும் வழியில், தன்னைத் தனே இகழ்ந்து பேசுவதையும் நாம் கேட்டிருப்பதுண்டு. அதனைக் குறித்துத்தான் ஆசிரியர் கருத்தினை அளிக்கின்றார்.

தன்னை இகழ்ந்து பேசுதல் ஒருவனுக்கு விளையாட்டினிடத்திலும் துன்பந் தருவதாக முடியும். தன்னைத் தானே இகழ்ந்து பேசுதல் கூடவே கூடாது என்பதாம். பிறர்பால் பண்புடன் நடந்துகொள்ளுகின்ற பெரியோர்கள் பகைமை கொண்டிருந்தாலும் அதிலும் நற்பண்பு இருந்து காட்டும் குறட்பா அழகாக அமைந்துள்ளது.

*நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி; பகையுள்ளும்*
*பண்புள பாடறிவார் மாட்டு.*

நகை என்பதை விளையாட்டு என்னும் கருத்தில் அமைத்துக் காட்டினார். தன்னைத் தனே இழிவாகப் பேசிக் கொள்ளும் குணம் சிலரிடம் காணப்படுவதுண்டு. அக் குணம் அப்படிப் பட்டவர்களுக்குத் துன்பம் உண்டாக்கியே விடும். நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி என்று குறிப்பிட்டது சிந்திக்கத் தக்கதாகும்.

மற்ற நேரங்களில் தன்னைத் தானே இகழ்ந்து பேசுதல் எல்லோரிடத்திலும் காணப்பக் கூடியது அன்று; நகைத்து மகிழ்ந்து விளையாட்டாக இருக்கின்ற நேரத்தில் சிலர் தம்மையும் மறந்து தம்மைத் தாமே இழிவாக இகழ்ந்து பேசிவிடுவார்களாம். அதற்காகத்தான் ஆசிரியர் வள்ளுவனார் அப்படிப்பட்ட இடத்தினைக் குறிப்பாகத்தான் சுட்டிக் காட்டிப் பேசுகின்றார். நகைத்து மகிழ்தல் என்பது விளையாட்டாகவும் இருக்கும் என்பது குறிப்பானதாகவும் கூறப்பட்டன.

இக் குறட்பாவில் மற்றோர் அரிய உலகியல் தன்மையினையும் ஆசிரியர் கூறுகின்றார். உயர்ந்த பண்புள்ள

வர்களிடம் பகைமை தோன்றினாலும் அதிலும் நன்மை யுண்டாகும் என்பதாம். அற்பர்களிடத்தில் - இழிகுண முள்ளவர்களிடத்தில்-பகமை தோன்றினால் அதன் விளைவு கொடுமையானதாகத்தான் இருக்கும். ஆனால் பண்புள்ள பெரியோர்களிடத்தில் பகைமையிலும் நன்மையிருக்கும் என்பது மிக நல்ல அரிய பாராட்டப்படவேண்டிய பொன்னான குணமன்றோ!

பண்பு :

'பண்பு' என்பது மனித வாழ்க்கையினை மேம்படுத்தும் அடிப்படை யாகும். பண்புள்ளவர்கள் இருப்பதினால்தான் இவ் வுலகமே நல்ல முறையில் இயங்கிவருகிறது என்றும் கூறப்படும். கல்வி, அறிவு, ஆற்றல் இன்னும் இவை போன்ற திறமைகள் ஒருவர்பால் மிகுந்து காணப் பட்டாலும் பண்பு என்பது அவரிடத்தில் காணப் படவில்லை யென்றால் ஏனைய வெல்லாம் இருளில் கிடந்த பொருள்களாகவே முடியும்.

மக்களிடையே ஒருவனை மாணிக்கமாகச் செய்து தருவதற்கு முதற் காரணமாக இருப்பது அவனுடைய பண்பே யாகும். பண்பில்லாதவனிடத்தில் இருக்கும் மற்ற சிறப்பானவைகளெல்லாம் கரைந்து மறைந்துபோய் விடுவனவாகும். காலத்தினாலும் சூழ்நிலையினாலும் சிலர் சிறந்த பண்பாளர்களாக மாறிவிடுதலும் உண்டு. உயர்ந்த பண்பாடுகள் இல்லாமல் இருந்தவர்கள்கூடக் கால மாறு பாட்டினாலும் வாழ்க்கை மாறுதல்களினாலும் பாராட்டப் படவேண்டிய பண்பாளர்களாக மாறிவிடுகிறார்கள்.

சிலர் தம்முடைய நிலை பழைய நிலையினைவிட உயர்ந்து மேம்பட்டு விட்டாலும் அதற்கேற்றவாறு உயர்ந்த பண்பாடுகள் பெறாமல் பழைய மாதிரியே கீழான புத்தி படைத்தவர்களாகவே காணப்படுகிறார்கள். இப்படிப் பட்டவர்களிடத்தில் காணப்படுவதுதான் 'பிச்சைக்கார புத்தி' என்று சொல்வது. மேம்பாடான நிலை ஏற்பட்ட

காலத்திலும் கீழ்மையான புத்தியையே கொண்டிருப்பவர்கள் என்றுதான் அர்த்தம்.

இதற்கு இன்றுகூட சரியானபடி பொருள் தெரியாமல் இருக்கின்றதென்று கூறுவது மிகையாகாது. வாழ்க்கையில் மிக்க இயல்பானது என்று நினைத்திருக்கும் உண்மைகளையும் அறிந்து மகிழ்தல் அறிஞர்கள் கடமையாகும்.

**புத்தி :**

செல்வர் ஒருவர் வீட்டின் முன் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார். தெருவில் பிச்சை யெடுப்பவன் வீடு வீடாகப் பிச்சைக் கேட்டுக்கொண்டே போனான். பார்பதற்கு அவன் வேலை செய்து பிழைக்கத் தகுதியுள்ளவனாகவே காணப்பட்டான். பழக்கத்தினால் பிச்சையெடுக்கும் வாழ்க்கையில் ஈடுபட்டு மகிழ்கின்றான் போலும்!

செல்வர் உட்கார்ந்திருந்த வீட்டிற்கும் அப் பிச்சைக்காரன் வந்தான். வழக்கம்போல் பிச்சை கேட்டான். செல்வர் அவனைப் பார்த்தார். உற்று நோக்கினார். அவன் கையில் பிச்சை யெடுக்கும் பாத்திரம் இருந்தது. அதனைத் 'திருவோடு' என்று கூறுவது வழக்கம். ஒரு வகையான மரத்தினால் செய்யப்பட்டு இருக்கும்.

செல்வர் பிச்சைக்காரனைப் பார்த்துக் கேட்டார், ''ஏனப்பா! எத்தனை ஆண்டுகளாக இப்படிப் பிச்சை யெடுத்துக்கொண்டிருக்கிறாய்?'' அதற்குப் பிச்சைக்காரன் பதில் சொன்னான், ''நான் பல வருடங்களாகப் பிச்சை யெடுத்துத்தான் பிழைக்கிறென், பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக இருக்கும்.''

உடனே செல்வர் வருத்தப்பட்டவராக அவனைப் பார்த்து ஆதரவும் புத்திமதியும் கலந்த வார்த்தைகளைச் சொன்னார். ''இந்தாப்பா! நீ இப்படிப் பிச்சை யெடுத்துப் பிழைப்பது மிகவும் இழிவான தல்லவா? வேறு நல்ல வேலை செய்து பிழைப்பதற்கும் நீ தகுதியுள்ளவனாகக் காணப் படுகின்றாய்.

''உனக்கு நான் உதவி செய்கிறேன். உன் கருத்து எப்படி யென்று தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன். உனக்கு ஓர் ஆயிரம் ரூபாய் நான் கொடுத்தால் நீ என்ன செய்வாய்? உன் எண்ணம் என்ன? சொல்'' இவ்வாறு சொன்னதற்கு அந்தப் பிச்சைக்காரன் அளித்த பதில் அவரைத் திடுக்கிடச்செய்தது. அவன் ''நீங்கள் எனக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்தால் தங்கத்தாலே ஒரு 'திருவோடு' செய்துகொள்ளுவேனுங்க'' என்று பதில் சொன்னான்.

பிச்சை யெடுக்கும் பாத்திரத்தை உயர்ந்ததாகச் செய்து கொள்ளுவேன் என்று கூறினான். பிச்சை யெடுக்கும் இழி தொழில் அவ்வளவு ஆர்வமும் பற்றுக்கோடும் அழுத்தமாக அவனுக்கு ஊறிவிட்டது. இதனைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

உயர்ந்த நிலைமைக்கு ஏற்றி வைத்தாலும் தாழ்ந்த புத்தி போகாது. இது சிலருடைய அற்பப் புத்தியாகும். ஒரு சிலர் வாழ்க்கையில் ஒரு காலத்தில் ஏழ்மை வாழ்க்கை யினையோ அல்லது இன்னல்கள் நிறைந்த வாழ்க்கை யினையோ நடத்தி இருந்திருப்பவர்கள். கால வேகமும் வேறு காரணங்களும் அவர்களை மேலே உயர்த்தி வைத் திருக்கும். மேலே உயர்ந்த பிறகும் அவர்களிடம் நல்ல பண்பாடு வளர்ந்திருக்கும் என்று நாம் எதிர்பார்ப்பது இயற்கையே யாகும்.

அப்படிக் காணப்படாமல் இருக்கின்றவர்களும் உண்டு. நல்ல நிலைக்கு வந்த பிறகும் பழைய புத்தி போகாமலேயே இருக்கின்றவர்களும் உண்டு. இதைத்தான் 'பிச்சைக்காரப் புத்தி' என்று கூறுகிறோம். பிச்சைக்கார புத்தி என்பதற்குப் பிச்சை யெடுக்கின்ற புத்தி யென்று அர்த்தம் அன்று! இழிவான பழைய புத்தி போகாமல் இருப்பதற்குத்தான் பிச்சைக்காரப் புத்தி என்று பொருள். நாம் இதுகாறும் பேசிய அனுபவமான கதையும் இவ் வுண்மையினைக் கூறி விடுவதாகிறது.

மொழிகள் :

நம்முடைய நாட்டில் வழங்குகின்ற பல விதமான பழமொழிகளும் சிறுசிறு அனுபவமான கதைகளும் எத்தனையோ உண்மைகளை உணர்த்துகின்றன வென்பது உண்மையிலும் உண்மை யாகும். ஒரு சிறு பழமொழியினை யெடுத்துக்கொண்டு அதன் உண்மைப் பொருளைச் சிந்திக்கும்போது வியப்பும் புதுமையும் தோன்றுகின்றன.

''பந்திக்கு முந்திக்கொள் - படைக்குப் பிந்திக்கொள்'' என்று ஒரு மொழியினைக் கூறுகிறார்கள். இதனுடைய பொருள் என்ன? இந்தப் பழமொழியினைச் சொல்கிறவர்கள் இதற்கு அர்த்தமும் சொல்லத்தான் செய்கிறார்கள். அதாவது, சாப்பாடிற்கு உட்காருவதற்குப் 'பந்தி' அமைக்கும்போது முதலில் போய் உட்கார்ந்து கொள்ள வேண்டுமாம். அப்போதுதான் நன்றாக-அதிகமாகச்-சாப்பிட முடியுமாம்.

நாட்டில் வீரராகத் தொண்டாற்ற வேண்டுமென்று கூப்பிட்டால் அதற்கு எப்படியாவது ஏமாற்றிப் பிந்திக் கொள்ளவேண்டும் என்பது மாகும். இப்படியாக விளையாட்டுக்கேனும் கூறி இருப்பார்களா என்றால் அதுவுமில்லை. பிறகு எப்படித்தான் இப் பழமொழி பேசப்பட்டு வருகிறது? ஆய்ந்து பார்த்த அறிஞர்கள் உண்மையினைத் தெளிவுபடுத்துவாராயினர்.

மிக நல்ல பண்பாட்டுடன் கூறப்பட்ட பழமொழி மக்களிடையே காலக் கோளாறுகளினால் சிதைந்து இவ்வாறு பேசப்பட்டு வருவதாயிற்று. ''பந்திக்கு முன் நிற்க! படைக்குப் பின் நிற்க!'' என்பதே அப் பழமொழியின் சொற்களாகும். இவைகள் நாளா வட்டத்தில், 'முன் நிற்க' என்பது 'முந்திக் கொள்' என்றும், 'பின் நிற்க' என்பது பிந்திக் கொள் என்றும் பேசப்பட்டு வரலாயிற்று.

பந்தி :

உயர்ந்த அறவுரைகளைக் கூறுகின்றபோது நாட்டுத் தலைவர்களையும் முதன்மையானவர்களையும் வைத்துப் பேசுவதுதான் மரபு. அவ்வாறே ஒரு வீட்டுத் தலைவனைப் பார்த்துக் கூறுகையில் 'பந்திக்கு முன் நிற்க' என்று கூறப்பட்டது. அதாவது விருந்தினர்கள் உட்கார்ந்து சாப்பிடுகின்ற போது விருந்திற்கு அழைத்த அவ் வீட்டுத் தலைவர் சாப்பிடுபவர்களுக்கு முன்பு நின்று அவர்களை உபசரிக்க வேண்டும்.

சாப்பாட்டுக்கு வந்திருப்பவர்களின் தகுதி நிலைமையெல்லாம் அவருக்குத்தான் தெரியும். சாப்பாடு பரிமாறுகிறவர்களுக்கு வந்திருப்பவர்களின் 'தரா தரம்' தெரியாதன்றோ? அவர்கள் - பரிமாறுகிறவர்கள் - நல்ல முறையில் நடந்துகொள்ளாமலும் போகலாம். தவறாகவும் நடந்து கொள்ளலாம். ஆனால் அவர்கள் தவறாக நடந்து கொண்டாலும் குற்றம் விருந்திற்கு அழைத்தவர் மீதுதான் போகும்.

மேலும், சாப்பிடுகிறவர்களில் சிலர் அதிக உபசரிப்பு இருந்தால் இன்பத்துடன் சாப்பிடுவார்கள். இவைகளையெல்லாம் செய்ய வேண்டிய பொறுப்பு வீட்டுத் தலைவனையே சாரும். ஆதலால்தான் வீட்டுத் தலைவனைப் பார்த்து ''பந்திக்கு முன் நிற்க!'' என்று கூறப்பட்டது. ஆ! என்னே கொடுமை! இவ் வரிய முதுமொழி சிதைந்து பந்திக்கு முந்திக்கொள்'' என்று ஆகிவிட்டதே!

சேனைத் தலைவனாகவும்—படையினை இருந்து நடத்தும் முதல்வனாகவும் இருப்பவனைப் பார்த்துக் கூறப்பட்டதுதான் ''படைக்குப்பின் நிற்க'' என்பது. போருக்குச் செல்லுங்கால் படைகளை இருந்து நடத்தவும் ஏவலிட்டு எப்படியெல்லாம் நடந்துகொள்ள வேண்டும் என்று வழிமுறை சொல்லத் தரமான பொறுப்புள்ளவன் தலைவனாகவும், படையினை நடத்துகின்ற தலைவன் போரில்

முதலில் அகப்பட்டுக்கொண்டும் இறந்துவிடுவானேயானால் பின்னர்ப் பெரும்படை நடத்திச் செல்ல ஆளில்லாமல் திணறிப்போய் திசை தப்பிக் கெட்டுவிடும்.

ஆதலால்தான் முன்னே படைகளை அனுப்பிக் கொண்டே பின்னிருந்து தக்கமுறையில் நடந்துகொள்ளுதல் வேண்டும் என்பதாம். இவ் வரிய முதுமொழிகளெல்லாம் நல்ல முறையில் மக்களிடையே பரவினால் வாழ்க்கையின் வழிகாட்டிகளாக அமையும் என்பதில் ஐயமும் உண்டோ?

**வீரம் :**

நகைப்புக்காவேனும் ஒருவன் தன்னைத் தானே பிறரிடம் இகழ்ந்து பேசுதல் தகாது என்று கண்டோம். அஃதாவது 'விளையாட்டுக்காகச் சொல்கிறேன்' என்று சொல்லியும்கூட ஒருவன் தன்னைத் தானே இகழ்ந் துரைத்தல் ஆபத்தாகவே முடியும் என்பதனை ஆசிரியர் நன்கு எடுத்துரைத்தார். நகைப்பு முறை காணக்கூடிய இடங்களும் அவைகள் மூலம் நாம் அறியவேண்டிய பல திறப்பட்ட கருத்துரைகளும் ஆசிரியரால் விளக்கிக் கூறப் பட்டு வருகிறது.

வழியில் போர்வீரர்களிடத்தில் காணப்படுகின்ற வீர உணர்ச்சிகளில் நகைப்பு என்பது எங்ஙனம் உண்டாகின்றது என்பதனையும் காணுகின்றோம். மக்கள் வாழ்க்கையில் நகைச்சுவை இடம்பெறாத இடம்தான் ஏது? வீரர்களிடத் தில் நகைப்பு உண்டாகின்றபோது அது தனிப் பெருமை யுடையதாகவே காணப்படுகிறது. அதுவும் போர்க்களத் தில் போர்புரிந்துகொண்டிருக்கின்ற தருவாயில் நகைப் பான பேச்சு ஒரு போர் வீரனிடம் தோன்றுகின்றதென்றால் அவனுடைய எஃகு நெஞ்சமும் வீரப் பெருமையும் தென்படு கின்றது.

போர் நடைபெறுகின்றது. தனது நாட்டின்மீது படையெடுக்கும் பகைவர்களைத் தாக்கிப் போர்செய்து கொண்டிருக்கின்றான் ஒரு மறவன். கடுமையான போரில்

அகப்பட்டுக்கொண்டு போரிடுகின்றான் நமது வீரன். போர் மும்முரம் உச்ச நிலை அடைந்திருக்கின்ற நேரம்.

தன்னிடத்தில் இருந்த அம்புகள் எல்லாம் வீசப்பட்டு விட்டன என்பதை அறிகின்றான். மனம் சோர்ந்து விட்டானில்லை; பகைவர்களின் தாக்குதலோ தொடர்ந்து நடந்துகொண்டிருக்கின்றது.

''தன் கையிலிருந்த படையாகிய வேலினைத் தன்னைத் தாக்க வந்த யானைமீது எறிந்துவிட்டு, மேலும் தாக்கு தற்கு வருகின்ற யானைக்கு வேல் இல்லாமல் தவித்துக் கொண்டிருக்கும்போது, தன் மார்பின்மீது வேல் இருப் பதைக் கண்டு மகிழ்ந்து அதனைப் பிடுங்கி மகிழ்ச்சியால் நகைத்தான்'' என்னும் கருத்தினைக் கூறுகின்றது குறட்பா:

'கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்'

யானைகளை எதிர்த்துத் தாக்குகின்ற மனம்படைத்த வீரன் எவ்வளவு மன உறுதி கொண்டவனுக இருப்பான் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ?

தன்னுடைய மார்பின்மீது அம்பு பாய்ந்திருக்கின்ற தையும் அறியாமல் அவ்வளவு கடுமையாகப் போர்செய்திருக்கின்றான் என்பது கூறாமலே விளங்கும். உயிரையும் துச்சமாக எண்ணிப் போர்செய்பவனே உண்மையான வீரனாவான். அப்படிப்பட்ட போர் மறவர்களாலன்றோ நாடு காக்கப்படுகின்றது!

மார்பின்மீது அம்பு பாய்ந்திருக்கின்றது என்பதைப் பின்னரே அவன் அறிந்துகொள்ளுகின்றான். கண்டவுடன் அஞ்சினானா? நடுங்கினானா? இல்லவே இல்லை! மேற் கொண்டு தாக்க வருகின்ற யானைமீது எய்வதற்கு அம்பு கிடைத்ததே என்று மகிழ்ந்து நகைத்தான்.

ஆண் யானையினது உயிரைக் கொண்டுபோகும்படி அவ்வளவு திறமையாக அம்பினை வீசினான் என்பதைக்

குறிக்கவே 'களிற்றோடு போக்கி' என்று அமைத்தார் ஆசிரியர். வேறு எங்கும் போய் வேலினைத் தேடித்திரியாமல் தன்னுடைய மார்பிலேயே கிடைத்ததே என்று எண்ணி அதனைப் பிடுங்கி மகிழ்ந்தான் வீரன்.

மேலும் மேலும் தொடர்ந்து போர்செய்யவே முனைந்தான் என்பதைக் குறிப்பாகச் சொல்லி வைத்தார். இப்படிப்பட்ட வீரர்களை நாட்டு மன்னர்களும் மக்களும் பெரிதாகப் பாராட்டுவார்கள் என்பது துணிபு.

இப்படிப்பட்ட வீரர்களையே இவ்வுலகம் பாராட்டும் என்பது வரலாறு கண்ட உண்மையாகும். போலியாக வீரம் பேசும் புல்லர்களையும்தான் நாம் கேட்டும், பார்த்தும் வருகின்றோம். வீரம் செறிந்த நாடுதான் தலை நிமிர்ந்து பெருமிதத்துடன் வாழமுடியும் என்பது கண் கூடான உண்மையாகும்.

கோழை :

ஒருவன் போர் செய்யப் போகிறேன் என்று சொல்லிக் கொண்டு போருக்குச் சென்றானாம். சென்று திரும்பி வந்தான். வருகின்றபோது காலை வெட்டி எடுத்துக் கொண்டு வந்தானாம். போர்செய்து பகைவர் காலே வெட்டி எடுத்து வந்துவிட்டேன் என்று சொல்லிப் பெருமை பேசினான்.

அவனுடைய நண்பன் அவனைப் பார்த்துக் கேட்டான், ''போருக்குச் சென்றவன், பகைவனின் தலையை யல்லவா வெட்டி எடுத்துக்கொண்டுவரவேண்டும். அது தானே சிறப்பு? நீ காலை வெட்டி வந்திருக்கிறாயே'' என்று ஏளனம் செய்தானாம்.

அதற்குக் காலைக் கொண்டுவந்த வீரன் சொன்னான். ''எனக்குத் தெரியாதா, தலையைத்தான் கொண்டு வரவேண்டு மென்று தலையைக் கொண்டுவரத்தான் நினைத்துச் சென்றேன். எனக்கு முன்னமேயே வேறொரு வீரன் தலையினை வெட்டிக்கொண்டு போய்விட்டான்.

பிறகு நான் என்ன செய்வது? ஆதலால்தான் காலை வெட்டி எடுத்துக்கொண்டு வந்தேன்'' என்று தனது வீரத்தைக் கூறி முடித்துக்கொண்டான். ஆ! என்னே வீரம்! தலை போன பிறகு கீழே கிடந்த முண்டத்தின் காலை யல்லவா வெட்டி வந்திருக்கின்றான்.

போர்க்களமில்லாமல் உலகில் வாழ்வில் சிலருடைய வீரர் வேடத்தைக் காண்கின்ற பல சந்தர்ப்பங்கள் நமக்குக் கிடைக்கத்தான் செய்கின்றன. நகரங்களிலும் நாட்டுப் புறங்களிலும் காண முடிகின்றது, உண்மையான திண்தோள் படைத்த ஆண் வீரர்களைக் காணுதல் அரிதாகவுந்தான் இருக்கின்றது.

ஒரு நகரத்தில் இரண்டு கட்சிகளிடையே சண்டை மூண்டு விட்டதாம். ஒரு கட்சியில் கும்பல் அதிகமாக இருந்ததாம். எதிர்க்கட்சியில் கும்பல் குறைவாக இருந்ததாம். உடனே அதிகக் கும்பல் இருந்த கட்சியிலிருந்த ஒருவன் அதிக வீரமாகப் பேசிக் குதியாய்க் குதித்தானாம். அவனை எல்லோரும் பிடித்துத் தடுத்து நிறுத்தி விட்டார்களாம். 'பொறுமையாக இரு' என்று கேட்டுக்கொண்டார்களாம். 'என்னை விடுங்கள், விடுங்கள்' என்று துடித்தானாம் 'ஏன்?' என்று கேட்டார். அதற்கு அவன் ''என்னை விடுங்கள்; அவர்கள் மீது பாய்ந்து விரட்டி நொறுக்கி விடுவேன்'' என்றானாம். இந்தப் பக்கம் அதிகக் கூட்டம் இருந்ததால் அவனுடைய வீரம் உச்ச நிலையில் இருந்தது போலும்!

சில மாதங்கள் கழித்து அந்த ஊரில் மறுபடியும் சண்டை வந்துவிட்டதாம். அதே இரண்டு கட்சிகள் மோதிக்கொள்ளுகின்ற நிலை ஏற்பட்டுவிட்டது. பழைய வீரனும் ஒரு கட்சியில் இருந்தான். அவன் பக்கத்தில் இருந்த கூட்டம் குறைவாகவும் எதிரிகள் பக்கம் அதிகக் கூட்டமும் இருந்தன. இந்த ஆளினுடைய வீரம் எப்படி இருக்கின்றது என்று பலர் பார்த்துக்கொண்டிருந்தனர்.

இந்த வீரன் ''என்னை விடுங்கள், விடுங்கள்'' என்று குதித்தானாம். ஏன் அவ்வாறு சொன்னான் என்று அறிந்த போது 'ஓடி விடுவதற்கு' என்று 'புரிந்ததாம்.' இவனுடைய கட்சியில் அதிகக் கூட்டம் இருந்தபோது அவன் 'விடுங்கள்' என்று கூறியபோதும், தனது கட்சியில் கூட்டம் குறைந்த போது 'விடுங்கள்' என்று கூறியதற்கும் உள்ள வேறுபாடு அவன் வீரத்தைப் பலரும் தெரிந்துகொள்ளும்படி செய்து விட்டதாம். இதற்கு வீரம் என்று பெயரில்லை கோழை களின் தந்திரம் என்றுதான் கூற வேண்டும்.

வீரனுடைய உணர்ச்சியினையும் பேச்சினையும் போர்க் களத்தில் வைத்துக் காட்டுவதும் பேசுவதும் சிறப்புதான் என்றாலும் காதலர் உலகத்தில் வீரனுடைய பெருமை நிறைந்த பேச்சினை அழகான முறையில் ஆசிரியர் அமைத் தார். வீரனொருவன் அழகு நிறைந்த பெண்ணைக் கண்டு அவளுடைய அழகின் மேம்பாட்டினைக் கூறுகின்றான். அப்படிக் கூறுகின்றபோது தன்னுடைய வீரத்தின் பெருஞ் சிறப்பினைக் கணக்கிடமுடியாத அளவில் சுருக்கமாகக் கூறி விட்டான்.

## நுதல் :

காதலியின்—அப்பெண்ணின்—அழகினை ஒரு மாபெரும் வீரனுடைய வாயிலாக அறிகின்றபோது அதற்குத் தனிச் சிறப்பு இருக்கத்தான் செய்கிறது. அப் பெண்ணின் அழகு நிறைந்த உறிப்புக்களை யெல்லாம் அவ் வீரன் ஒவ்வொன் றாகக் கண்டு சுவைத்தானில்லை! அழகு நிறைந்த ஒரே ஒரு உறுப்பினைமட்டும் கண்டான்.

அவ் வுறுப்பு ஒளி பொருந்திய அப் பெண்ணின் நுதலே (நெற்றி) தான். இவ்வொரு உறுப்பின் அழகே அவனை மயக்கித் திகைக்க வைத்துவிட்டது என்றால் வேறு உறுப் புக்களின் அழகினை அவன் எவ்வாறு சுவைப்பதென்று புரியாதவனானான்.

அந்த அழகிய நுதலினைச் சிறப்பித்துப் பேச அவன் வேறு உவமை யெதுவும் கூற விரும்பவில்லை. அவ் வழகு எவ்வளவு ஆற்றல் நிறைந்ததாக இருந்தால் அவனுடைய வீரம் செறிந்த உள்ளத்தினையும் பெருமையினையும் உடைத்தெறிந்திருக்க வேண்டும். வீரப் பெருமை அத்தனையும் உடைந்தே போய்விட்டதாம்.

'ஒண்ணுதற்கோ உடைந்ததே' என்ற குறட்பா தொடங்குகிறது. அப் பெண்ணின் ஒளி பொருந்திய நெற்றியின் அழகு ஒன்றுக்கே அவனுடைய போர்ப்பீடு எல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டதாம். அப்படி யென்றால் இன்னும் சுவைக்கப்படவேண்டிய வேறு உறுப்புக்களுக் கெல்லாம் பலம் எப்படித் தேடுவேன் என்பது குறிப்பாயிற்று.

*ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்*
*நண்ணாரும் உட்கும்என் பீடு.*

'போர்க்களத்தில் எதிர்க்க வந்திராத பகைவர்களும், எதிர்த்தவர்களுடைய வாய்ச்சொற் கேட்டு அஞ்சியோடுவதற்குக் காரணமாக இருந்த என் வலிமை யெல்லாம் இப் பெண்ணின் ஒளி பொருந்திய நெற்றியின் அழகொன்றுக்கே அழிந்துவிட்டனவே' - என்பது பொருள்.

பலமுறையும் சிந்தித்தறிய வேண்டிய வீரப்பண்பு இக் குறட்பாவில் சிகரமாக அமைந்து கிடக்கின்றது.

அவ் வீரத்தின் பெருமையினைக் கூற வந்த இடத்தில் போர்க்களத்திற்கு வராத பகைவர்களும் அஞ்சி யோடும் படியான வீரம் என்று குறித்தார். நேரில் போரிட்டவர்கள் அஞ்சி ஓடினார்கள் என்று மட்டும் சொல்லி இருந்தால் அவனுடைய வீரம் மிகப் பெரியதாகக் கூற இடம் இருந்திராது.

இந்த வீரனுடைய போர்த்திறனை நேரில் பார்த்தவர்கள் அஞ்சி ஓடி, போர்க்களத்திற்கு வாராமலேயே இருந்த பகைவர்களிடத்தில் கூறக் கேட்ட அவர்கள் அஞ்சி

ஓடினார்கள் என்றால் அவனுடைய வீரத்தின் சிறப்பினைச் சொல்லவும் வேண்டுமோ!

இவ் வரிய கருத்தினை ''ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு'' என்ற சொற்கள் விளக்குகின்றன. அவனுடைய உடல் வலிமை, மனவலிமை ஆகிய இரண்டும் அழிந்தன வென்பதைக் கூறுவதற்காகவே 'பீடு' என்று சொன்னார்.

வீரன் ;

காதல் சிறப்பினைக் கூற வந்த இடத்தில் வீரத்தின் பெருமையினைக் கூறினாரென்றால் அங்கே அறிய வேண்டிய உண்மையும் இல்லாமலில்லை. காதலன் வீரனாக இருக்க வேண்டுமென்பதே மகளிர் விருப்பமாகும். பழங்கால வரலாறுகளைக் காணுகின்றபோது ஒரு பெண் தன் நாயகன் சிறந்த மறவனாக—போர் வீரனாக—இருக்க வேண்டு மென்பதைத்தான் முதன்மையானதாக விரும்புவாள்.

அழகு, அறிவு, செல்வம், கல்வி இன்ன பிற தேவைக ளெல்லாம் வீரத்திற்குப் பின்னே வைத்துக் கணக்கிடப்பட வேண்டியவைகள்தான் என்று கூறினாலும் மறுக்க முடியாத தாகும். எனவேதான் காதலினைப் பேச வந்த இடத்தில் வீரத்தின் சாயலினையும் தொட்டுக் காட்டிச் சென்றார். திருமணம் நடப்பதற்கு முன்பு மாப்பிள்ளையைத் தேர்ந் தெடுத்தல்-பெண் பார்த்தல் என்னும் நிகழ்ச்சிகள் நடை பெறுவதுண்டு.

மாப்பிள்ளையைத் தேர்ந்தெடுப்பதற்கு வீரத்தினைத் தான் முதற்காரணமாக வைத்திருந்தார்கள் என்பது இன்றையகாலத்தில் கதைகளாகக் கூறப்பட்டாலும் சரித்திர ஆதாரங்களுடன் இருந்து வந்ததாகத் தெரிகிறது. தைப் பொங்கல் திருநாள் என்பது தமிழர்களின் திருநாளாக இன்று கொண்டாடப்பட்டு வருகின்றது. பொங்கல் திரு நாளினை உழவர்கள் திருநாளாகச் சிறப்பாகக் கொண்டாடி

வந்திருக்கின்றார்கள். பொங்கல் விழா மூன்று நான்கு நாட்கள் கொண்டாடப்படுவதுண்டு.

கடைசி நாள் மாடு பிடித்தல் என்னும் விழா நிகழ்ந்து வந்திருக்கின்றது. இப்போதும் எங்கேயோ சில இடங்களில் நடைபெறுவதும் உண்டு. பழங்காலத்தில் எந்த நோக்கோடு அந் நிகழ்ச்சி நடத்தப்பட்டதோ அதே நோக்கத்தில் இப்போது நடைபெறுவதில்லை. இப்போது விளையாட்டுக்காக நடத்தப்படுவதாகிவிட்டது.

**மறவன்-காளை :**

'மாடு பிடித்தல்' என்னும் நிகழ்ச்சி மாப்பிள்ளையைத் தேர்ந்தெடுக்கும் நிகழ்ச்சியாகவே அக் காலத்தில் வைத்திருந்தார்கள். வீர மறவனையே மாப்பிள்ளையாகப் பெற வேண்டுமென்று மணம்செய்துகொள்ள இருக்கும் பெண் கூறுவாள். வீரனை எப்படித் தேர்ந்தெடுப்பது? தமிழர் திருநாளாக நடக்கும் இந் நாளில் அந்த வாய்ப்பினை உண்டாக்கிக்கொள்ளுவார்கள்.

மணமாவதற்கு இருக்கின்ற பெண்கள் பெற்றோர்களுடனும் உறவினர்களுடனும் ஒரு சிறிய குன்று போல் இருக்கின்ற இடத்தில் குன்றின்மேல் உட்கார்ந்திருப்பார்கள். அப்பகுதியில் பெரிய திடல் போன்ற இடம் அகலமானதாக இருக்கும். அங்கே நல்ல பல முள்ளதும் கொம்புகளைக் கூர்மையாகச் சீவிவிட்டிருப்பதுமான காளைகளை விரட்டி ஓடவைப்பார்கள். அந்தக் காளைகளைக் குன்றின் மீது இருக்கின்ற பெண்கள் பார்த்துக்கொண்டிருப்பார்கள்.

குறிப்பிட்ட ஒரு வலிமையான காளையினைச் சுட்டிக் காட்டி அந்தப் பெண் சொல்லுவாள்: ''அதோ தெரிகிறதே காளை, அதை யார் பிடிக்கின்றாரோ அவரையே யான் மணப்பேன்.'' இவ்வாறு அவள் காட்டிய காளை மிகவும் பயங்கரமானதாகவும் இருக்கும். மணமாகாத இளைஞர் வீரத்தோடு அஞ்சாது ஓடிக் காளையினைப் பிடித்து அடக்கி அந்தப் பெண்ணை மணப்பார். இப்படி

யாக வீரத்தை உச்சி மேற்கொண்டு பாராட்டியதாகக் கூறப்படும் கதைகளில் உண்மை யில்லை யென்று சொல் வதற்கு இல்லை.

வீரனுடைய உள்ளம் எப்போதும் எப்படிப்பட்ட சிந்தனையில் இருக்கும் என்பதனை ஆசிரியர் வள்ளுவனார் மிகச் சிறப்பாக எடுத்துக்காட்டுகிறார். முகத்திலும் மார்பிலும் புண்படுதலைப் பெருமையாக எண்ணி மகிழ் வதே வீரர்களுடைய உள்ளங்களின் தனிப் பண்பாகும்.

போரில் சென்று உடம்பில் புண்படாத நாட்களைப் பயனில்லாத நாட்கள் என்றே சொல்லுவார்களாம். நாள்தோறும் போர் செய்ய வேண்டும் என்ற துடிப்பு மிகுந்திருப்பதே உண்மை வீரனுடைய நெஞ்சுக்கு அடை யாளமாகும். குறட்பா ஒன்று :

> விழுப்புண் படாத நாள்எல்லாம் வழுக்கினுள்
> வைக்கும்தன் நாளை எடுத்து.

''வீரனானவன் தான் கழித்த நாட்களையெல்லாம் எடுத்துக் கணக்கிட்டு, எண்ணிப் பார்த்து அந் நாட்களுள், முகத்திலும் மார்பிலும் பெரிய புண்கள் (காயங்கள்) படாத நாட்களையெல்லாம் பயன்படாமல் கழிந்த நாட்களில் சேர்த்து வைப்பான்''—தான் எதற்காக வாழ்கின்றோம் என்று எண்ணுகின்ற வீரனுக்கு இக் குறட்பா விடையளிப்ப தாகவுள்ளது. போர் செய்யாமல் - காயம் ஏற்படாமல் - தான் வாழ்வது தேவையில்லை என்று எண்ணும் அள விற்குச் செல்லுகின்றான் என்றால் அவன் மனோவேக வீரப் பண்பு தெள்ளத் தெளியப் புலனாகிவிடுகின்றது.

பயன்படாமல் வாழ்ந்தோமே என்று போர் செய்யாத நாட்களை நினைக்கின்றான் என்பதனை 'வழுக்கினுள் வைக்கும்' என்ற சொற்களால் விளக்கிவைத்தார். விழுப் புண்கள் என்று கூறியது போர்க்களத்திலே ஏற்படும் புண் களாகும். அப் புண்களை மிகவும் பெருமையாகவே குறிப்பிட்டார். 'விழுமியவர்' [என்று கூறுவதுபோல மிக

உயர்ந்ததாகப் பாராட்டப்பட வேண்டியவைகள் என்னும் குறிப்பினையும் சிறப்பித்துக் கூறினார்.

**நாள் - வாள் :**

'நாளை எடுத்து' என்று கூறியதில் உள்ள பெருமையினை விளக்கமாகத் தெரிந்துகொள்ள வேண்டுவது நமது கடமையேயாகும். ஏன்? வாழ்க்கையின் உயர்ந்த தத்துவம் அங்கே அடங்கியுள்ளதாகும் 'ஒருநாள்' என்று சொன்னால் அது எவ்வளவு பொன்னானதாகக் கருதப்படவேண்டும்என்பது சிந்திக்கவேண்டியதொன்றாம்.

கழிந்துபோனால் பின்னர்த் திரும்பி வராததும் பெற முடியாததும் நாளன்றோ! அவ்வளவு அருமையானதாக இருக்கும் 'நாள்' எவ்வளவு அருமையானதாகப் பயன் படுத்தப்பட வேண்டும் என்பது சிந்தனைக்குரியதாகும்.

காலத்தின் அருமையினைப் பல இடங்களில் பலவித முறைகளில் ஆசிரியர் நமக்கு உணர்த்துகிறார். 'நாள்' என்பதனுடைய அருமையினை அறிய வேண்டுமென்றால் காலத்தின் இன்றியமையாத் தன்மையினை உணர்கின்றோம் என்றே பொருள்.

நாள் என்பதனை இன்னதென்று சொல்லவந்த ஆசிரியர் அதனை நமது வாழ்நாளுடன் இணைத்துக் காட்டி அதனை நாள் என எண்ணிக்கொண்டிருப்பவர்கள் உலக அறிவியல் ஞானம் பெறாதவர்கள் என்றும் அது நமது உயிரினை அறுக்கக் கூடிய வாள் என்றுதான் எண்ணவேண்டும் என்றும் குடுப்பிடுகிறார்.

நாள் என்பதனைப் பொழுது என்னும் அளவுப் பொருளாகப் பலர் நினைத்து வாழ்கின்றார்கள். அப்படி நினைத்து வாழ்தல் அறிவுடையோர் செயலாகக் கருதப் படக்கூடாது என்பதாகும். நாள்தோறும் நாம் காணுகின்ற பழக்கப் பேச்சினைத் தெளிவுபடுத்திச் சிந்தித்தல் வேண்டும் பேசும்போது சிலர் அடிக்கடி ''எனக்கு நேரமில்லை;

போதிய காலமில்லை; நான் செய்யவேண்டிய பணிகள் எத்தனையோ இருக்கின்றன'' என்று பேசுவார்கள்.

நேரமில்லை, நேரமில்லை; காலமில்லை என்று பேசுகின்ற துடிதுடிப்பான உள்ளம் படைத்த மக்கள் நிறைந்த நாடு விரைவில் முன்னேறும் என்பதாகும். மற்றும் பலர் பேசுவதையும் நாம் கேட்டுத்தான் வருகின்றோம். ''இந்த ஒரு மாதம் எப்படிப் போகும் என்று தெரியவில்லை''— ''இந்த ஒரு வாரம் எப்படிக் கழியும் என்று தெரியவில்லை'' —என்பனபோல பேசுபவர்களையும் நாம் காணத்தான் செய்கின்றோம்.

காலத்தின் அருமையான குறிப்பினை உணராத மக்கள் 'காலம்' கழியவில்லையே போகவில்லையே என்று பேசுகின்ற எண்ணம் படைத்திருப்பார்களேயானால் அப்படிப்பட்டவர்கள் மிகுந்த நாடு ஒருகாலும் முன்னேறாது என்றே பொருள். இன்னும் சிலர் பேசுவதைக் கேட்டால் நமக்குப் பெரும் வியப்பும் துக்கமுந்தான் வருகின்றன.

காலம் :

''பொழுது போகலிங்க! அதுதான் உங்களிடம் வந்தேன்'' என்று சொல்பவர்களும் இருக்கிறார்கள். ''ஏதோ காலத்தைத் தள்ளிக்கொண்டு இருக்கிறேன் என்றும் சொல்லுகிறார்கள். என்னே கொடுமை! மனிதப் பிறவி எவ்வளவு சிறந்தது! ஒவ்வொரு வினாடியும் விலை மதிக்க முடியாத காலமாயிற்றே. மிக உயர்ந்த பயனுள்ளதாகக் கழிக்கப்பட வேண்டும்!

இவ்வுலகில் எத்தனை நாள் வாழப் போகின்றோம் என்பது யாருக்குத் தெரியும்? ஒருவருக்கும் தெரியாதே! யாராவது நண்பரைப் பார்த்து 'உங்களை ஒன்று கேட்கலாமென்று இருந்தேன். இப்போதுதான் நம்முடைய சந்திப்பு ஏற்பட்டது' என்றார். அதற்கு 'அவர் ''என்ன,

கேட்கலா மென்று இருந்தீர்கள்'' என்றார். பின் வருமாறு வினா வந்தது: ''இந்த உலகில் எத்தனை ஆண்டுகள் இருக்கலா மென்று இருக்கிறீர்கள்?'' இக் கேள்வியினைக் கேட்கப்பட்டவருக்கு எப்படி யிருக்கும்! ''எண்பது ஆண்டு கள் இருக்கலாமென்று இருக்கிறேன். அதற்குள் வேலை முடிய வில்லை யென்றால், இன்னும் கொஞ்சம் ஆண்டுகள் இருந்து விட்டுப்போவேன்'' என்பதாகவா பதில் சொல்லுவார். இல்லையே!

கேள்வி கேட்டவரைப் பைத்தியக்காரர் என்று சொல்லு வாரே! ''நம் கையிலா இருக்கிறது'' என்று பேசுவதுண்டே! 'விதி வந்தால் போக வேண்டியதுதானே' என்றும் சொல் கிறார்களே! உலக நடையில் மக்களின் போக்கு பற்பல விதமாக இருப்பதில்லையா? ''ஏன் நீங்கள் உலகில் இருந்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று ஒருவரைக் கேட்டதற்கு அவர், ''இன்னும் சாவு வரவில்லை. அதனால்தான் இருக்கின்றேன்'' என்றாராம்.

இவைகளை யெல்லாம் ஒருவாறு சிந்தித்துப் பார்த் தால் மக்களில் பெரும்பாலோர் அரிய மானிடப் பிறவியினை எவ்வளவு இழிவாகக் கருதிவிட்டார்கள் என்பதும் காலத் தின் பெருஞ் சிறப்பினைச் சிறிதளவும் புரிந்துகொள்ளாமல் இருக்கிறார்களே என்பதும் புலனாகிவிடுகிறது.

''உலகில் இறப்பு (மரணம்) வருதல் உறங்குவதுபோல ஆகும். பிறப்பு என்பது உறங்கி விழித்தெழுவது போல ஆகும்'' என்னும் மிகப் பெரிய உண்மை நிறைந்த கருத் துரையினை அமைத்து எளிமையான குறட்பாவினை ஆசிரியர் தருகின்றார்.

> உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு.

உலகில் உறங்குவதும், விழிப்பதும் எவ்வாறு இயற்கை யாக நடைபெறுகின்றதோ அதுபோல இறப்பதும் பிறப்பதும் நடந்து வருகின்றதாகும். இறந்து (சாக்காடு)

போதல் என்பதனை உறங்குவது போலும் என்று கூறி வைத்தார். சிந்தித்தறிய வேண்டிய உண்மையொன்று நம்மைக் கவர்ந்து விடுகின்றது.

உறக்கம் வருகின்ற நேரத்தினை யாருமே கூற முடியாது. அதுவேபோல இறப்பு வருகின்ற காலத்தினை அறுதியிட்டுக் கூற முடியாது என்று உணர வேண்டும். கழிக்கின்ற நேரத்தினைக் கணக்கிட்டுச் சொல்லலாம். சொல்லிய நேரத்தில் விழிப்பதற்கு வழியுண்டு. அதுவே போன்று பிறக்கின்ற நேரத்தினை நாம் அறிய முடிகிறது. குழந்தை பிறக்கிறது என்று நாம் சொல்ல முடிகிறது. ஆனால் மனிதன் இறந்துகொண்டிருக்கின்றான் என்று சொல்ல முடிவதில்லை. 'இறந்து விட்டான்' என்றுதான் சொல்லு கிறோம்.

எனவேதான் வாழ்நாள் அளவு யாரும் அறிந்து கொள்ள முடியாததாகும் என்பது முடிவாகும். ஆதலால் தான் காலம் என்பதனை நன்கு அறிந்தே வாழ்கின்ற மக்களை ஆசிரியர் சிறப்பித்துக் கூறுகின்றார். உலகில் வாழ்கின்ற மக்கள் அத்தனை பேரும் காலத்தின் அருமை யினை உணர்ந்தவர்கள் என்று கூறவும் முடியாதன்றோ?

காலம் என்பதின் ஓர் அளவு கோலான நாளினை வைத்துக் குறளொன்று தருகின்றார். நாள் என்பதனை வெறும் கால அளவாக எண்ணிவிடக் கூடாதென்றும் அது நம்முடைய உயிரினைச் சிறுகச் சிறுக அறுத்துக்கொண்டு போகின்ற வாள் என்றே நினைக்க வேண்டும் என்றும் கூறுகின்றார்.

**வாள் :**

நாள் என்று அளவு செய்யப்படுகின்ற ஒரு கால அளவு போல் தன்னைக் காட்டி, உயிரினை அறுத்துச் செல்கின்ற

வாளாகும். இதனை அறிபவர்கள் இதனை நாள் என்று சொல்லாமல் வாள் என்பர் என்னும் கருத்தினைக் குறட்பா அளிக்கின்றது.

நாள்என ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாள் அது உணர்வார்ப் பெறின்.

வாள் என்று அறிந்துணர முடியாதவர்களுக்கு நாள் என்று நினைக்குமாறு மயக்குவதாகக் காட்டி என்று குறிப்பிட்டுச் சொன்னார். உலகில் வாழுகின்ற மக்களில் மிகச் சிலரே வாள் என்று உணர்வார்கள். அப்படி உணர்கின்ற மக்கள் அரிது என்பதாம்.

ஆதலால்தான் உணர்வார்ப் 'பெறின்' என்று அருமையாக வைத்தார். 'ஈரும்' என்பது அறுக்கும் என்னும் பொருளில் வந்ததாகும். உயிரினை அறுத்துச் செல்கின்ற வேலையினை இந்த நாள் என்பது செய்து வருகின்றதென்றால் அப்படிப்பட்ட நாள் என்பதனை எவ்வளவு பொறுப்புடன் பயனுள்ளதாக நாம் கழித்தல் வேண்டும் என்பது தெளிவுபடுத்தப்படுகின்றது.

நாட்கள் பல சென்ற பிறகு உயிர் முடிவுக்கு வந்து விடுவதாகின்றது. நாளின் இப் பெருஞ் சிறப்பினைப் படைவீரன் வாயிலாக ஆசிரியர் கூறி வீரனுக்கு ஒவ்வொரு நாளும் போர்ப்பற்று நிறைந்ததாக இருக்கும் என்பதனை விளக்கி ''விழுப்புண்படாத'' .... என்ற குறட்பாவினை அமைத்தார்.

## மெல்ல நகும் :

தமிழ் இலக்கிய வரலாற்றில் வீரமும் காதலும் சிறப்புடன் பேசப்படுவது இயற்கையே ஆகும். போர்க் காலத்தில் புண்படாத நாட்களை வீணான நாட்கள் என்று வீரன் கருதுகிறான் என்பதனை இப்பொழுது கண்டோம். அவ்வளவு உயர்ந்த பண்பினை வீரன் பெற்று இருக்கிறான். கையில் வேல் ஒன்றும் இல்லையே என்று கலங்கிய வீரன்

தன்னுடைய உடம்பில் பாய்ந்து இருந்த வேலினை மகிழ்ச்சியுடன் பறித்தெடுத்து போர் செய்தான் என்பதனை முன்னர்க் கண்டோம்.

'பறியா நகும்' என்று அந்தக் குறட்பாவில் கூறப் பட்டது. காதலனும் காதலியும் ஒருவரை ஒருவர் காதல் உள்ளத்துடன் சந்திக்கிறார்கள். ஒருவரை ஒருவர் சந்தித்துப் பார்க்கின்ற வாய்ப்பு கிடைக்கின்றபோ தெல்லாம் உரையாடுகின்ற வாய்ப்பு கிடைப்பது இல்லை. காதலன் பேசுகின்ற அருமையான ஓர் இடத்தில் தன்னுடைய காதலி புன்முறுவல் செய்கின்ற செய்தியினை கூறுகின்றான். 'நான் பார்க்கின்றபோது அந்தப் பெண் நிலத்தை நோக்குகின்றாள். நான் பார்க்காதபோது அந்தக் காதலி தன்னை நோக்கி தனக்கு உள்ளே மகிழ்ச்சி அடைகின்றாள்' என்ற கருத்தினை எளிமையாக குறட்பா ஒன்று குறிப்பிடுகின்றது.

''யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்.''

இக்குறட்பாவில் ''நோக்கும்'' என்ற சொல் அப் பெண்ணின் காதல் இன்ப உள்ளத்தினை தெளிவாக புலப் படுத்திவிட்டது. மற்றொரு குறட்பாவில் அப்பெண்ணின் பார்வையினைப் பற்றி வேறு கோணத்தில் காதலன் சிறப்பித்துக் கூறுகின்றான். குறியாகப் பார்க்கின்ற பார்வைபோல் இல்லாமல் அந்தப் பெண் ஒரு கண்ணினை சுருங்குதல் போல் செய்துகொண்டு அவனைப் பார்த்து நகைக்கின்றாள் என்று காதலன் கூறுகின்றான். இவ்வாறு நோக்கிய நோக்கு அந்தப் பெண்ணின் உள்ளத்தினை மேலும் சிறப்பித்து உணர்த்துவதாயிற்று.

குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும்''

காதலன் அந்தப் பெண்ணின் பார்வையினைக் கண்ட றிந்து காதல் முகத்தினை வெளிப்படுத்தியவன் போல்

அப் பெண்ணை நோக்கினான். அவனுடைய அந்தத் தன்மையை நன்கு உணர்ந்துகொண்டு அந்தப் பெண் மெல்ல நகைத்தாள். அந்த நகைப்பில் இருக்கின்ற நல்ல முன்னேற்றத்தினை—காதல் வளர்ச்சியினை, காதலன் புரிந்துகொள்ள முடிகிறது.

''அசையியற்குஉண்டு ஆண்டுஓர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும்.''

இம்மூன்று குறட்பாக்களைப் பார்க்கையில் மெல்ல நகும், போல நகும், பைய நகும் என்று நகைச் செய்திகள் சிந்தனைக்கு உரியனவாகும். உள்ளத்தில் மகிழ்ச்சியையும் முகத்தில் மகிழ்ச்சியையும் தோற்றுகின்ற உயர்ந்த பண்பினைக் காதலர்களிடையே காண முடிகின்றது.

இவ்வுலகில் பலவகைப்பட்ட தீயவர்களைக் காணுகின்றோம். பலர் கண்ட மாத்திரத்தில் முகத்தில் இனிமையாகச் சிரிப்பினைக் காட்டி பழகுவார்கள். மனத்தில் தீய எண்ணங்களை வைத்து இருப்பார்கள். அப்படிப்பட்ட வஞ்சகர்களை பார்த்தால் அஞ்சி நாம் நடந்துகொள்ள வேண்டும். அவர்களின் நகைப்புக் குறிப்பு கடுமையானது ஆகும்.

''முகத்தின் இனிய நகாஅ அகத்து இன்னா
வஞ்சரை அஞ்சப் படும்''.

நகை முகம் கொடுத்து நம்மிடத்தில் பழகுபவர்களை எல்லாம் நல்லவர்கள் என்று எண்ணிவிடக்கூடாது. சில பேர் பொய்யாகவே நகை முகம் காட்டி வாழ்பவர்களாக இருக்கிறார்கள். உள் ஒன்று வைத்து புறம் ஒன்று பேசுபவர்கள். ஒருவனை அவன் இல்லாதபோது தீமையாகப் பேசுகின்றார்கள். புறம் கூறித் திரிகின்றார்கள். அவனைப் பார்த்த உடனேயே பொய்யாக நகைத்து இன்பமாகபேசுவார்கள். அறத்தினை அழிக்கின்றவர்களை விடக் கொடியவர்கள் என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

''அறம்அழீ இ அல்லவை செய்தலின் தீதே
புறன்அழிஇப் பொய்த்து நகை''

புன்முறுவலுடன் நகைத்துப் பேசுகின்றவர்கள் பேச் செல்லாம் இனிமை தரும் என்று எண்ணிவிடக்கூடாது. நகை முகத்துடன் ஒருவரோடு ஒருவர் கூடி இனிய சொற்களைச் சொல்லி நண்பர்களாக வாழவேண்டும் என்ற மனமே இல்லாத தீயவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர் களுடைய பழக்கம் எப்போதும் புறம் கூறுதலும் சேர்ந்து இருப்பவர்களைப் பிரித்தலும் ஆகிய கொடிய சிந்தனையே ஆகும். இப்படிப்பட்டவர்களிடமும் நாம் நெருங்குதல் கூடாது என்பதாகும்.

''பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தோற்றா தவர்.''

நல்ல மனம் படைத்தவர்கள் நண்பர்களை இணைப் பவர்களாவார்கள். தீயவர்கள் நட்பினைப் பிரித்து விடுவார்கள். சிலர் வாழ்க்கையில் பகைமை உள்ளத் தினையே வாழ்க்கையாக வளர்த்துக்கொள்ளுவதில் இன்ப மாக இருப்பார்கள். அவர்கள் உள்ளம் துன்பம் நிறைந்த தாக இருக்கும். நட்பினை வளர்ப்பவர்கள் இருந்த நிலையில் நீதியுடன் பொருந்திய பெரும் செல்வத்தினைப் பெற்றவர்களாகக் கருதப்படுவார்கள். நகுதல் என்பது உயர்ந்த தன்மையையும் நயமாக உணர்த்துகின்றது.

''இகலான்ஆம் இன்னாத எல்லாம் நகலான்ஆம்
நன்னயம் என்னும் செருக்கு''.

பகைமை என்னும் குணத்தினைப் பண்பு இல்லாத தன்மை என்று அறிஞர்கள் கூறுவார்கள். நண்பர்களிடத் திலே பகைமை இல்லாமல் வாழ்வதுதான் உயர்ந்த வாழ்க்கை ஆகும். பண்பு இல்லாத பகை என்பதனை ஒருவன் விளையாட்டிற்குக்கூட கொள்ளக் கூடாது என்ற குறட்பா ஒன்று அருமையாகக் கூறுகின்றது.

''பகைஎன்னும் பண்பி லதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று''.

அவனைப் பார்த்து சிரிப்பவர்கள் எல்லாம் அறிவு இல்லாதவர்கள் என்று கூற அந்தக் காதலன் தயங்க வில்லை. காதலன் தன்னுடைய காதலியைச் சந்தித்து மகிழ்ச்சியோடு வாழ்க்கை நடத்துகிறான். நிறைந்த இன்பத்தினை நுகர்கின்றான். சிறந்த வாழ்க்கையில் தங்கள் காதல் வாழ்க்கை நடக்கின்றது. அப்படிப் பட்டவனைப் பார்த்து சிலர் நகைக்கின்றார்கள். அந்தக் காதலனைக் கண்டால் உடனே சிரிக்கின்றார்கள். அவர்களை எல்லாம் அறிவு இல்லாதவர்கள் என்று சொல்வ தோடு 'காதல்' உணர்வற்றவர்கள் என்றும் காதலன் சொல்லுகின்றான்.

''யாம் கண்ணிற் காணநகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு''

காதலி அந்த வருத்தத்தினை தன்னுடைய கண் களின் மீது ஏற்றிக் கூறுகின்றாள். தங்களைத்தாங்களே நொந்து கொண்டு பேசுதல் அவர்களுக்கு இயல்பான பண்பாகும். தன்னுடைய கண்களை நோக்கி அந்தக் காதலி சொல்லுகின்றாள். அந்த நேரத்தில் விரைந்து சென்று காதலனைக் கண்ட கண்கள் இப்போது தாமே அழுதுகொண்டு இருப்பது நகைப்புக்கு இடம் கொடுக்கிறது என்று அந்தக் காதலி சொல்லுகின்றாள். தாமே காதலனை விரைந்து சென்று பார்த்த கண்கள் பிரிந் திருக்கும் இப்போது அழுதுகொண்டு இருக்கலாமா என்று குறட்பா ஒன்று சொல்லுகின்றது.

''கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்கது உடைத்து''.

உலக வாழ்க்கையில் பூமியை பூமாதேவி என்று கூறுவது வழக்கமாக இருந்து வருகிறது. உழைத்து வாழ்தலின்

*சிறப்பினை ஆசிரியர் வள்ளுவனார் மிக அழகாகக் கூறுகின்றார். உலகில் பலர் வறுமையிலே வாடுகிறார்கள். 'நாம் வறியாளர்களாக இருக்கிறோம்' என்று சொல்லிக்கொண்டு சோம்பேறிகளாக இருப்பவர்களைப் பார்த்து, நிலம் என்று சிறப்பாகச் சொல்லப்படுகின்ற பெண்மணி நகைக்கின்றாள். உழைத்து நல்லபடியாக வாழ்வதற்கு நிலம் இருக்க இப்படி சோம்பேறிகளாக இருக்கலாமா என்பதாக குறட்பா கூறுகின்றது. வறுமையைப் போக்கிவிட வேண்டுமே என்பது சொல்லாமல் சொல்லப்பட்ட கருத்தாகும். நிலம் என்ற பெண் நகைக்கின்றாள் என்று அருமையாகக் குறட்பாவில் அமைந்து இருக்கிறது.*

*''இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்*
*நிலம்என்னும் நல்லாள் நகும்''.*

**தமது நூலில், நகைப்பு என்கின்ற உயர்ந்த தன்மையை முதன்மையாக அமைத்துக் காட்டி அருமையான செய்திகளை எல்லாம் ஆசிரியர் திருவள்ளுவனார் நமக்குச் சொல்லி வைத்த தன்மை மிகவும் போற்றுதற்கு உரியதாகும்.**



புரட்சிக் கவிஞர்—பாவேந்தர்

# பாரதிதாசன்

பாடுகிறார் :

திராவிட நாட்டுளீர் உங்கள் செயற்கெலாம்
அறமே அடிப்படை ஆதல் வேண்டும்
அறம் எனல் வள்ளுவர் அருளிய திருக்குறள்

செல்லும் வழிக்குத் திருக்குறள் விளக்கு !
மனமா சறுக்கும் இனிய மருந்து
கசடறக் கற்க! கற்றிலார் அறிஞர்பால்
கேட்க! கேட்க! திராவிடம் மீட்க

ஔவையார் அருளிய ஆத்திச் சூடியில்
ஒரு தொடர்தன்னை—ஒன்றுக்கான
உரையை—எப்படி ஒருவர் இலேசாய்
நினைவில் நிறுத்தி இனித்துரைப்பாரோ
அப்படித் திருக்குறள் முனிசாமி அறிஞர்
முப்பால் ஆயிரத்து முன்னூற்று முப்பது
குறளையும் அவற்றிற்குக் கொடுத்த பொருளையும்
நினைவில் நிறுத்தி இனிது விளக்கும் ஓர்
ஆற்றல் உடையவர்; அவர் திருக்குறள் மலர்
வழங்கும் நகைச்சுவை மறச்சுவை பிறசுவை
ஆர்ந்தசொல் அனைத்தும் பெரும்பயன் அளிப்பவை

அரிசிமா இட்டலி அளிப்பதாய்ச் சொல்லிப்
பாசிப்பயற்றுமி படைப்பார் அல்லர்;
அறிஞரின் பேச்சும் எழுத்தும் அருங்குறள்
தன்ஆற்றி னின்று செம்பில்மொண் டளிப்பவை

குறட்பயன் கொள்ள நம்திருக்
குறள்முனி சாமிசொல் கொள்வது போதுமே!